# சைவ நெறி

# தரம்

# 10

**கல்வி வெளியீட்டுத் திணைக்களம்**



சகல பாடநூல்களையும் இலத்திரனியல் ஊடாகப் பெற்றுக் கொள்வதற்கு **www.edupub.gov.lk** வலைத்தளத்தை நாடுங்கள்.

**முதலாம் பதிப்பு - 2018**
**இரண்டாம் பதிப்பு - 2019**



ISBN 978 - 955 - 25 - 0177 - 7

**கல்வி அமைச்சின் இந்து சமய ஆலோசனைச் சபையின்ஆலோசனைகள் பெறப்பட்டு வெளியிடப்படுகின்றது.**

*இந்நூல், கல்வி வெளியீட்டுத் திணைக்களத்தினால், இல 16/3 வனரதன வீதி, கல்கிசையில் அமைந்துள்ள அப்வ்வா அச்சகத்தில் அச்சிடப்பட்டு, வெளியிடப்பட்டது.*

## தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மணி லங்கா
ஞாலம் புகழ வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளமையை நாட்டே
நகு மடி தனையோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல் செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல-அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

**ஆனந்த சமரக்கோன்**
கவிதையின் பெயர்ப்பு.



''புதிதாகி, மாற்றமடைந்து சரியான அறிவின் மூலம்
நாட்டுக்குப் போன்றே முழு உலகிற்கும் அறிவுச் சுடராகுங்கள்''

## கௌரவ கல்வி அமைச்சரின் செய்தி

கடந்து சென்ற இரு தசாப்தங்களுக்கு அண்மிய காலமானது உலக வரலாற்றில் விசேட தொழினுட்ப மாற்றங்கள் நிகழ்ந்ததொரு காலமாகும். தகவல் தொழினுட்பம் மற்றும் ஊடகங்களை முன்னணியாகக் கொண்ட பல்வேறு துறைகளில் ஏற்பட்ட துரித வளர்ச்சியுடன் இணைந்து மாணவர் மத்தியில் பல்வேறு சவால்கள் தோன்றியுள்ளன. இன்று சமூகத்தில் காணப்படும் தொழில்வாய்ப்பின் இயல்பானது மிக விரைவில் சிறப்பான மாற்றங்களுக்கு உட்படலாம். இத்தகைய சூழலில் புதிய தொழினுட்ப அறிவையும் திறனையும் அடிப்படையாகக் கொண்டதொரு சமூகத்தில் வெவ்வேறு விதமான இலட்சக் கணக்கான தொழில்வாய்ப்புகள் உருவாகின்றன. எதிர்கால சவால்களை வெற்றிகொள்ளும் பொருட்டு நீங்கள் பலம்பெற வேண்டுமென்பது கல்வி அமைச்சரென்ற வகையில் எனதும் எமது அரசினதும் பிரதான நோக்கமாகும்.

இலவசக் கல்வியின் சிறப்புமிக்கதொரு பிரதிபலனாக உங்களுக்கு இலவசமாகக் கிடைத்துள்ள இந்நூலை சீராகப் பயன்படுத்துவதும் அதன்மூலம் தேவையான அறிவைப் பெற்றுக்கொள்வதுமே உங்கள் ஒரே குறிக்கோளாக இருக்க வேண்டும். அத்துடன் உங்கள் பெற்றோர்களுட்பட மூத்தோரின் சிரமத்தினதும் தியாகத்தினதும் பிரதிபலனாகவே இலவசப் பாடநூல்களை அரசினால் உங்களுக்குப் பெற்றுத்தர முடிகிறது என்பதையும் நீங்கள் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஓர் அரசாக நாம், மிக வேகமாக மாறி வரும் உலக மாற்றத்திற்குப் பொருந்தும் விதத்தில் புதிய பாடத்திட்டத்தை அமைப்பதும் கல்வித் துறையில் தீர்க்கமான மாற்றங்களை மேற்கொள்வதும் ஒரு நாட்டின் எதிர்காலம் கல்வி மூலமே சிறப்படையும் என்பதை மிக நன்றாகப் புரிந்து வைத்துள்ளதனாலேயேயாகும். இலவசக் கல்வியின் உச்சப் பயனை அனுபவித்து நாட்டிற்கு மாத்திரமன்றி உலகுக்கே செயற்றிறன்மிக்க ஓர் இலங்கைப் பிரசையாக நீங்களும் வளர்ந்து நிற்பதற்கு தீர்மானிக்க வேண்டியுள்ளது. இதற்காக இந்நூலைப் பயன்படுத்தி நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு உங்களுக்கு உதவுமென்பது எனது நம்பிக்கையாகும்.

அரசு உங்கள் கல்வியின் நிமித்தம் செலவிடுகின்ற மிகக் கூடிய நிதித்தொகைக்கு பெறுமதியொன்றைச் சேர்ப்பது உங்கள் கடமையாவதுடன் பாடசாலைக் கல்வியூடாக நீங்கள் பெற்றுக்கொள்ளும் அறிவு மற்றும் திறன்கள் போன்றவையே உங்கள் எதிர்காலத்தைத் தீர்மானிக்கின்றன என்பதையும் நீங்கள் நன்கு கவனத்திற்கொள்ள வேண்டும். நீங்கள் சமூகத்தில் எந்த நிலையிலிருந்தபோதும் சகல தடைகளையும் தாண்டி சமூகத்தில் மிக உயர்ந்ததொரு இடத்திற்குப் பயணிக்கும் ஆற்றல் கல்வி மூலமாகவே உங்களுக்குக் கிடைக்கின்றது என்பதை நீங்கள் நன்கு விளங்கிக்கொள்ள வேண்டும்.

எனவே இலவசக் கல்வியின் சிறந்த பிரதிபலனைப் பெற்று, மதிப்பு மிக்கதொரு பிரசையாக நாளைய உலகை நீங்கள் வெற்றி கொள்வதற்கும் இந்நாட்டில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும் இலங்கையின் நாமத்தை இலங்கச் செய்வதற்கும் உங்களால் இயலுமாகட்டும் என கல்வி அமைச்சர் என்ற வகையில் நான் பிரார்த்திக்கின்றேன்.

**அகில விராஜ் காரியவசம்**
**கல்வி அமைச்சர்**

# முன்னுரை

உலகின் சமூக, பொருளாதார, தொழினுட்ப, கலாசார விருத்தியுடன் சேர்ந்து கல்வியின் நோக்கங்கள் மிக விரிந்த தோற்றமொன்றைப் பெற்றுள்ளன. மானிட அனுபவங்கள், தொழினுட்ப மாற்றங்கள் ஆராய்ச்சி மற்றும் புதிய குறிகாட்டிகளின்படி கற்றல் கற்பித்தல் செயற்பாடும் நவீனமயமாக்கப்பட்டுள்ளது. அதன்போது மாணவர் தேவைக்குப் பொருந்தும் விதமான கற்றல் அனுபவத்தை ஒழுங்கமைத்து கற்பித்தல் செயற்பாட்டை நடைமுறைப்படுத்திச் செல்வதற்கு பாடத்திட்டத்தில் காணப்படுகின்ற நோக்கங்களிற்கிணங்க பாடம் தொடர்பான விடயங்களை உள்ளடக்கிப் பாடநூல்களை ஆக்குவது அவசியமாகும். பாடநூல் என்பது மாணவரின் கற்றல் சாதனம் மாத்திரமல்ல. அது கற்றல் அனுபவங்களைப் பெறுவதற்கும் அறிவு, பண்பு விருத்திக்கும் நடத்தை மற்றும் மனப்பாங்கு வளர்ச்சியுடன் உயர்ந்த கல்வியொன்றை பெற்றுக் கொள்வதற்கும் மிகவும் உதவக்கூடியதுமாகும்.

இலவசக் கல்விக் கருத்திட்டத்தை நடைமுறைப்படுத்தும் நோக்கில் தரம் 6 முதல் தரம் 11 வரை சுமார் 91 வகையான பாடநூல்கள் அரசினால் உங்களுக்கு வழங்கப்படுகின்றன. அந்நூல்களிலிருந்து உயர்ந்தபட்சப் பயன்களைப் பெற்றுக்கொள்வதுடன், அவற்றைப் பாதுகாப்பதும் உங்களது கடமையாகும் என்பதையும் நினைவூட்டுகின்றேன். பூரண ஆளுமைகொண்ட நாட்டிற்குப் பயனுள்ள சிறந்ததொரு பிரசையாகுவதற்கான பயிற்சியைப் பெற்றுக்கொள்வதற்கு இப்பாடநூல் உங்களுக்குக் கைகொடுக்கும் என நான் எண்ணுகிறேன்.

இப்பாடநூலாக்கத்தில் பங்களிப்புச் செய்த எழுத்தாளர், பதிப்பாசிரியர் குழு உறுப்பினர்களுக்கும் கல்வி வெளியீட்டுத் திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் எனது நன்றிகள் உரித்தாகட்டும்.

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
இசுருபாய
பத்தரமுல்ல.
2019.04.10

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

**டபிள்யூ. எம். ஜயந்த விக்கிரமநாயக்க**
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## வழிகாட்டல்

**டபிள்யூ. ஏ. நிர்மலா பியசீலி**
ஆணையாளர் (அபிவிருத்தி)
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## இணைப்பாக்கம்

**சி. காண்டீபன்**
அபிவிருத்தி அலுவலர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## பதிப்பாசிரியர் குழு

**பேராசிரியர் ஏ. என். கிருஸ்ணவேணி**
தலைவர் - நுண்கலைத்துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

**கலாநிதி க.இரகுபரன்**
சிரேஷ்ட விரிவுரையாளர்
தென்கிழக்குப் பல்கலைக்கழகம், ஒலுவில்.

**சிவசுப்பிரமணியம் மகாலிங்கம்**
உதவிப் பணிப்பாளர் (ஓய்வு)
இந்து சமய கலாசார அலுவல்கள் திணைக்களம்.

**கலாநிதி ஸ்ரீ. பிரசாந்தன்**
சிரேஷ்ட விரிவுரையாளர்
பேராதனைப் பல்கலைக்கழகம்
பேராதனை.

## நூலாக்கக் குழு

**சைவப்புலவர் சு. செல்லத்துரை**
அதிபர் (ஓய்வு)

**கலாநிதி வ. குணபாலசிங்கம்**
விரிவுரையாளர்
இந்துநாகரிகத் துறை
கிழக்குப் பல்கலைக்கழகம்.

**நா. வாமன்**
விரிவுரையாளர்
இந்துநாகரிகத் துறை
கிழக்குப் பல்கலைக்கழகம்.

**சி. ரமணராஜா**
விரிவுரையாளர்
இந்துநாகரிகத் துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

**தி. செல்வமனோகரன்**
விரிவுரையாளர்
சைவசித்தாந்தத் துறை
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்.

**வானதி காண்டீபன்**
முன்னாள் பிரதம செயற்றிட்ட அதிகாரி
தேசிய கல்வி நிறுவகம், மஹரகம.

**வாஹினி ஸ்ரீதரன்**
ஆசிரியர்
திருக்குடும்பக் கன்னியர் மடம்
பம்பலப்பிட்டி.

**சோ. பாலசுந்தரம்**
உதவிப் பரீட்சை ஆணையாளர் (ஓய்வு)
பரீட்சைத் திணைக்களம்.

**பா. பாலசிங்கம்**
ஆசிரியர் ஆலோசகர்
வலயக் கல்வி அலுவலகம்
யாழ்ப்பாணம்.

**ந. பு. ஸ்ரீந்திரன்**
ஆசிரிய ஆலோசகர்
வலயக் கல்வி அலுவலகம்
வலிகாமம்
யாழ்ப்பாணம்.

**வளர்மதி சுமாதரன்**
ஆசிரியர்
சைவமங்கையர் கழகம்
கொழும்பு - 06.

**எம். பேரருள்செல்வி**
ஹைலன்ஸ் கல்லூரி
ஹட்டன்.

**ஆர். இராமகிருஷ்ணன்**
விரிவுரையாளர்
அரசினர் ஆசிரியர் கலாசாலை
கொட்டகலை.

## முகப்பு வடிவமைப்பு

**சத்திவேல் சத்தியசீலன்**
பக்க வடிவமைப்பாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## நூல் வடிவமைப்பு

**சத்திவேல் சத்தியசீலன்**
பக்க வடிவமைப்பாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

**தர்மகுலேந்திரன் சசிரேகா**
கணினி உதவியாளர்
கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

# உள்ளடக்கம்

உ

சிவமயம்

# கடவுள் வணக்கம்

நித்தியமாய் நிர்மலமாய் நிட்களமாய்
நிராமயமாய் நிறைவாய் நீங்காச்
சுத்தமுமாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த்
துரியநிறை சுடராய் எல்லாம்
வைத்திருந்த தாரகமாய் ஆனந்த மயமாகி
மனவாக் கெட்டாச்
சித்துருவாய் நின்றவொன்றைச் சுகாரம்பப்
பெருவெளியைச் சிந்தை செய்வாம்

# 1 கடவுள்



கடவுளே உலகத்தில் உள்ள பொருள்கள் யாவிலும் மேலான பொருள். ஆதலால் அவரைப் **பரம்பொருள்** என்கிறோம் (பரம் - மேலானது).

கடவுள் ஒருவரே. அவர் எல்லா உயிர்களுக்கும் உயிராக விளங்குகிறார்; எல்லா உலகங்களிலும் இருக்கிறார்; அவை யாவற்றையும் கடந்து அவற்றுக்கு அப்பாலும் இருக்கிறார். எல்லா உலகங்களையும் எல்லா உயிர்களையும் கடந்தும் அவற்றின் உள்ளேயும் இருப்பதால்தான் அவரைக் கடவுள் (கட + உள்) என்கிறோம். சுருக்கமாகக் கூறின் கடவுள் எங்கும் உள்ளவர்; எல்லாவற்றையும் கடந்தவர்.

## கடவுளின் இயல்புகள்

சைவசமயம் கடவுளுக்கு இருவகை நிலைகளைக் கூறுகின்றது. ஒன்று சொரூபநிலை; மற்றையது தடத்தநிலை. குணம், குறிகளுக்கு அப்பாற்பட்ட நிலையே **சொரூபநிலை**(சுயரூபம்) ஆகும். ஆன்மாக்களுக்கு அருள்புரியும் பொருட்டு குணங்குறிகளோடு கூடி வரும் நிலை **தடத்தநிலை** எனப்படும். தடத்தநிலையில் இறைவன் எண்குணங்களை உடையவனாக விளங்குகிறான். எண்குணங்களாவன:

- ௐ முற்றும் உணர்தல்
- ௐ இயல்பாகவே பாசங்களின் நீங்குதல்
- ௐ இயற்கை உணர்வினனாதல்
- ௐ வரம்பில் இன்பம் உடைமை
- ௐ தன்வயத்தனாதல்
- ௐ முடிவில் ஆற்றல் உடைமை
- ௐ பேரருள் உடைமை
- ௐ தூய உடம்பினனாதல்

இவற்றை சத், சித், ஆனந்தம் என்னும் மூன்று இயல்புகளாகத் தொகுத்துக் கூறுவதும் உண்டு. அதனாலேதான் கடவுளை, ***சச்சிதானந்தரூபி*** என்கிறோம்.

கடவுள் எத்தகையவர் என்பது, சிற்றறிவுடைய எங்களுக்கு விளங்கவேண்டும் என்பதற்காகவே இவையிவை கடவுளது குணங்கள் என்று ஒருவாறு வரையறுத்துக் கூறப்படுகிறது. உண்மையில் அவர் குணங்கள் யாவற்றையும் கடந்தவர் - **குணாதீதர்**. 'குணம் ஒன்றும் இல்லான்' என்று திருவாசகம் கூறுகின்றது.

கடவுள் இன்ன குணம் உள்ளவர், இப்படிப்பட்டவர் என்று எங்கள் அறிவினால் அறிந்துகொள்ள முடியாது. அவர் நமக்காகச் செய்யும் திருவருட்செயல்களினால் அவருடைய தன்மையை ஒருவாறு உணர்ந்துகொள்ளலாம் - கடவுள் உணர்த்தும் வகையால் உணர்ந்து கொள்ளலாம்.

கடவுள் எந்தத் தேவையும் அற்றவர். எனினும் அவர் ஆன்மாக்களின் ஈடேற்றத்துக்காக, தடத்த நிலையில் ஐந்து தொழில்களைச் செய்தருளுகிறார். அவையாவன:

1. படைத்தல் (சிருஷ்டி)
2. காத்தல் (திதி)
3. அழித்தல் (சங்காரம்)
4. மறைத்தல் (திரோபவம்)
5. அருளல் (அநுக்கிரகம்)

**படைத்தல் :** ஆன்மாக்களுக்காக தனு, கரணம், புவனம், போகம் என்பவற்றை உருவாக்குதலே படைத்தல் எனப்படும்.

**காத்தல் :** படைக்கப்பட்டவை இருக்கவேண்டிய காலம் வரையும் அவற்றைக் காப்பது காத்தல் எனப்படும்.

**அழித்தல் :** அக்காலம் முடிய அவற்றை அழிப்பது அழித்தல்.

**மறைத்தல் :** ஆன்மாக்களைப் பீடித்துள்ள மலத்தின் வீரியத்தைத் தடுத்தல் மறைத்தலாகும்.

**அருளல் :** ஆன்மாக்களை மலபந்தத்திலிருந்து முற்றாக நீக்கி, அவற்றுக்குப் பேரின்பத்தைக் கொடுத்தல் அருளல்.

இறைவனின் இந்த ஐந்தொழில்களையும் **பஞ்சகிருத்தியம்** என்றும் சொல்வர். கடவுள் இந்த ஐந்தொழில்களையும் தமது வரம்பில் ஆற்றலால் - வல்லமையால் செய்தருளுகிறார். இந்த வல்லமையையே நாம் **சக்தி** என்கிறோம்.

நாமும் படித்தல், விளையாடுதல், உண்ணுதல், உறங்குதல் முதலாக பல தொழில்களைச் செய்கிறோம். அத்தொழில்களால் ஒருவேளை மகிழ்கிறோம்; ஒருவேளை துக்கப்படுகிறோம். எங்களுடைய மனநிலை எப்போதும் மாறிக்கொண்டே

இருக்கும். கடவுளோ, பஞ்சகிருத்தியங்களைச் செய்யும்பொழுது ஒரு வகையான மாறுபாடும் அடைவதில்லை. சூரியக் கதிர்களின்முன் சில பூக்கள் மலருகின்றன; சில கூம்புகின்றன. ஆயினும் சூரியன் எந்தவித மாற்றத்துக்கும் உள்ளாவதில்லை. அதுபோலவே இறைவனும் எந்த விகாரமும் அடைவதில்லை. அதனால் இறைவனை **நிர்விகாரி** என்பர்.

உலகத்திலே பலவிதமான பொருள்கள் உள்ளன. சூரியன், சந்திரன், மரம், விலங்குகள், ஆறு முதலான பொருள்களைக் கண்ணாற் காண்கிறோம். கண்ணுக்குத் தோன்றாத காற்று, வெப்பம் முதலானவற்றை, தொடுகை முதலான உணர்வுகளால் கண்டுணர்கிறோம். இவையெல்லாம் மாயையிலிருந்து தோன்றிய பொருள்கள். மாயைப் பொருள் அல்லாத கடவுளை கண் முதலிய பொறிகளால் அறியமுடியாது.

ஏற்கனவே பொறிகளாற் கண்டுணர்ந்த பொருள்களைக் காணாத வேளையிலும் மனதால் எண்ணிப்பார்க்க முடியும். நாம் ஒரு பொருளை ஒருபோதும் கண்டிராவிட்டாலும் அது இப்படிப்பட்டது என்று வேறொருவர் எடுத்துரைத்தால், அப்படிப்பட்ட பொருளை நாம் மனதிலே நினைத்துப்பார்க்க முடியும். கடவுளை நாம் இப்படி நினைத்துப்பார்த்து உணரவும் முடியாது. அதனாலேதான் ''உள்ளத்து உணர்ச்சியிற் கொள்ளவும் படான்'' என்றும் ''சித்தமும் செல்லாச் சேட்சியன்'' என்றும் மாணிக்கவாசக சுவாமிகள் பாடியருளினார்.

ஆயினும், நாம் ஈடேற வேண்டுமாயின் கடவுளை எப்படியும் நினைத்தே ஆகவேண்டும். கடவுள்மேல் பற்று வளர வளர நமது பாசங்கள் வலிகெடுகின்றன. நாம் கடைசியாய் அடையவேண்டிய பொருள் கடவுளே. ஆகையாலும் நாம் அவரை நினைவிலே கொள்ள வேண்டியது அவசியம். கடவுளை அறியாத நாம் அவரை எப்படி நினைப்பது? இதற்கான வழியை வேதங்களும் ஆகமங்களும் காட்டியுள்ளன. கடவுளை வழிபடுவதற்காக அவருக்குத் திருவுருவங்கள் கற்பிக்கப்பட்டுள்ளன. பரம்பொருளை நாங்கள் சிவபிரானாகக் கொள்ளுகிறோம். இறைவனின் வேறாகாத அவருடைய திருவருட் சக்தியை நாம் உமாதேவியார் என்கிறோம். விநாயகர், முருகன், வைரவர், வீரபத்திரர் என சிவபிரானின் புத்திரர்களாகக் கொள்ளப்படும் மூர்த்தங்களும் அவரது திருவருட் சக்திகளைக் குறிப்பனவே. சிவபிரானும் அவருடைய திருவருட் சக்தியும் நெருப்பும் சூடும்போல ஒன்றானவை. எந்தப் பேரில், எந்த வடிவத்தில் வழிபட்டாலும் கடவுள் ஒருவரே. ''உள்பொருள் ஒன்றே; அறிந்தவர்கள் அதனை

பலவாறு கூறுவர்'' என்று வேதம் கூறுகின்றது. ''ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றும் இல்லார்க்கு, ஆயிரம் திருநாமம் பாடித் தெள்ளேணம் கொட்டாமோ'' என்கிறது திருவாசகம்.

நாம் இறைவனைப் பல்வேறு நாமங்களில், பல்வேறு வடிவங்களில் கோயில்களில் வழிபடுகிறோம். எங்கும் அத்திருவுருங்களை மனதிலே தியானித்து வழிபடுகிறோம். அத்திருவுருவங்களில் இறைவனுடைய இயல்புகள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

ஒவ்வொருவரும் தத்தமக்குப் பொருத்தமான வழியில் இறைவனை வழிபடலாம். தர்மத்துக்குப் புறம்பாக நடக்காது இருத்தலும் எல்லா உயிர்களையும் நேசித்தலும் கடவுளை வணங்குவதற்கு நிகரானவையே.

கடவுள் பேரருளாளர்; அன்பே வடிவானவர். நாமும் இறைவனிடத்தும் உயிர்களிடத்தும் அன்பு செய்தல் வேண்டும். அன்பு செய்தல் தவம் செய்தலுக்கு நிகரானதாகும். அன்பு செய்தால் இன்பநிலை தானே வந்து எய்தும்.



## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. கடவுளை 'பரம்பொருள்' எனக் கூறுவதற்கான காரணம் யாது?
2. 'கடவுள்' என்பதன் பொருள் யாது?
3. பஞ்சகிருத்தியங்கள் எவை? இறைவன் அவற்றைச் செய்வதற்கான காரணம் யாது?
4. கடவுளின் தன்மையை எவ்வாறு அறிந்து கொள்ளலாம்? இறைவன் நிர்விகாரி எனக் கூறப்படுவதன் காரணம் யாது?
5. இறைவனின் திருவருட்சக்திகளாகக் கொள்ளப்படும் மூர்த்தங்கள் யாவை?
6. கடவுள் வழிபாட்டுக்கு நிகரான கருமங்கள் யாவை?
7. சொரூபநிலை, தடத்தநிலை என்பவற்றை விளக்குக.
8. தடத்தநிலையில் இறைவனது எண்குணங்களாகக் கூறப்படுபவை எவை?
9. 'கடவுள் ஒருவரே' என்பதை வேதம் எவ்வாறு எடுத்துரைக்கிறது?
10. தவம் செய்தலுக்கு நிகரானது எது?

## செயற்பாடு

கடவுளின் இலக்கணம், பஞ்சகிருத்தியம் என்பன பற்றிக் குழுநிலையில் கலந்துரையாடுக. கலந்துரையாடப்பட்ட விடயங்களை அறிக்கை செய்க.

# 2 சைவ வாழ்வு

'அரிது அரிது மானிடராதல் அரிது' என்றார் ஔவைப்பாட்டி. கிடைத்தற்கரிய மானிடப்பிறவி நமக்குக் கிடைத்திருக்கின்றது. அதைத் தக்கபடி பயன்படுத்துவதே அறிவுடைமையாகும். அதற்கான வழிவகைகளை சைவசமயம் வகுத்துத் தந்துள்ளது. அதுவே சைவநெறி. நெறி என்பதற்கு வழி என்று பொருள். நாம் வாழும் வாழ்வு சைவ நெறிப்பட்ட வாழ்வு - சைவ வாழ்வு.

## அக ஆசாரமும் புற ஆசாரமும்



சைவம் வழிப்படுத்துகின்ற வாழ்க்கை நெறி ஆசாரத்தோடு கூடியது. ஆசாரம் என்றால் ஒழுக்கம் என்று பொருள். ஆசாரம் இரண்டு வகைப்படும். ஒன்று அக ஆசாரம்; மற்றையது புற ஆசாரம். அக ஆசாரம் உள்ளத்தோடு சம்பந்தப்பட்டது; புற ஆசாரம் உடலோடு சம்பந்தப்பட்டது.

உடம்பைத் தூய்மையாக வைத்திருத்தல், வீட்டையும் சூழலையும் தூய்மை யாக வைத்திருத்தல், சுத்தமான உணவை அருந்துதல், விதிப்படி பூசை செய்தல் முதலானவை புற ஆசாரங்களாகும். மனதிலே இறைபக்தியோடு வாழ்தல், மனதிலே குற்றமான எண்ணங்களுக்கு இடம்கொடாது நல்ல சிந்தனையோடும் நல்ல பண்புகளோடும் நல்ல நடத்தையோடும் வாழ்தல் முதலானவை அக ஆசாரங்கள் எனப்படும். இருவகை ஆசாரங்களும் இன்றியமையாதவையே. எனினும் அக ஆசாரம் இல்லாத நிலையில் செய்யும் புற ஆசாரங்களால் எந்தப் பயனும் இல்லை.

இவ்வாறு கூறுவதால் புற ஆசாரங்கள் முக்கியத்துவம் அற்றவை என்று ஆகிவிடாது. நமது உடலையும் நாம் வாழும் சூழலையும் தூய்மையோடு வைத்திருத்தல் இன்றியமையாதது. நாம் வாழும் வீடு, நாம் கற்கும் பாட சாலை, வீதிகள், மைதானங்கள், சந்தைகள், நீர் நிலைகள் என்று நாம் புழங்கும் அனைத்து இடங்களும் தூய்மையோடு இருத்தல் வேண்டும். அது எங்கள் ஒவ்வொருவரதும் பொறுப்பு. தெய்வ வழிபாட்டில் புறத்தூய்மை வலியுறுத்தப் பட்டுள்ளது. நீராடுவது, தோய்த்துலர்ந்த ஆடை அணிவது முதலாக வீட்டிலும் ஆலயங்களிலும் செய்யும் வழிபாடுகளின்போது நாம் கடைப்பிடிக்க வேண்டிய ஆசார நியதிகளை நமது சமயம் வலியுறுத்துவதை நாம் அறிவோம். சமயவாழ்க் கைக்கும் சாதாரண உலகியல் வாழ்க்கைக்கும் சுத்தம் இன்றியமையாதது; நமது சுகத்துக்கு ஆதாரமானது.

## இறையுணர்வு

சைவம் வலியுறுத்துகின்ற சகல ஒழுக்கங்களுக்கும் கடவுள் நம்பிக்கையே ஆதாரமாக அமைகின்றது. ''இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது கடவுளை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்'' என்று ஆறுமுகநாவலர் கூறியிருக்கிறார். கடவுள் அருளாலேயே நமக்கு இந்த உடலும் உலகமும் உலகில் நாம் வாழும் வாழ்க்கையும் கிடைத்தன. ஆகையால் நாம் கடவுளிடம் நன்றியுணர்வு உள்ளவர்களாக வாழவேண்டும்; கடவுள்மீது அன்புள்ளவர்களாக - பக்தி உள்ளவர்களாக வாழ்ந்து இறையின்பத்தைப் பெறுதல் வேண்டும்.

கடவுளை வழிபடும் முறைகளை நமது சமயம் தெளிவாக எடுத்துரைத்துள்ளது. நாம் அவற்றைக் கடைப்பிடிக்கவேண்டும். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று பல்வேறு மார்க்கங்களை நமது சமயம் வகுத்துத் தந்துள்ளது. நமது பக்குவத்துக்கு ஏற்ப பொருத்தமான மார்க்கத்தை நாம் தேர்ந்து கொள்ளலாம். இறை சிந்தனையோடு வாழ்ந்தால் தீமைகள் நம்மை அணுகமாட்டா. ஆகையால் எங்கும் எப்போதும் இறைவன் பற்றிய நினைப்பை மனதிலே கொண்டிருக்க வேண்டும். ஆகையால்தான் வீட்டிலும் பாடசாலையிலும் இறைவழிபாடு வலியுறுத்தப்படுகின்றது.

## அற உணர்வு

ஒழுக்கம் இல்லாது கடவுளை வழிபடுவதில் எந்தப் பலனும் இல்லை. நமது சமயம் அகத்திலே அன்பும் நீதியும் ஒழுக்கமும் இல்லாது வெறுமனே பூ, நீர் முதலான பொருள்களைக் கொண்டு செய்யும் புற வழிபாடுகளை உண்மை வழிபாடாகக் கொள்வதில்லை. அகத்திலே அன்பும் நீதியும் ஒழுக்கமும் இறை வழிபாட்டுக்கு இன்றியமையாதன. அவற்றை உடையவர்களின் உள்ளத்தில் இறைவன் விரும்பி உறைகின்றான். மாறாக, தீய எண்ணங்களும் தீய நடத்தைகளும் உள்ளவர்களின் வழிபாட்டை இறைவன் ஏற்பதில்லை; அவர்களது பூசையைப் பார்த்து இறைவன் வெட்கத்தோடு சிரிப்பான் என்கிறார் திருநாவுக்கரசர்:

**நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே**
**புக்குநிற்கும் பொன்னார் சடைப் புண்ணியன்;**
**பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு**
**நக்குநிற்பர் அவர்தமை நாணியே.**

(**பொக்கம்** - பொய் / வஞ்சகம் / குற்றம்)

நமது சமயம், பூசை முறைகளிலே அகப்பூசையையே மிகவும் வலியுறுத்து கின்றது. புறப்பூசையிலே பலவிதமான மலர்களை இறைவனுக்குச் சாத்துகிறோம். அகப்பூசையிலே இறைவனுக்குச் சாத்தவேண்டிய மலர்கள் என்று எட்டுவிதமான மலர்கள் குறிப்பிடப்படுகின்றன. அவை ***அட்டபுஷ்பங்கள்*** எனப்படுகின்றன. கொல்லாமை, ஐம்பொறியடக்கம், பொறுமை, இரக்கம், அறிவு, உண்மை, தவம், அன்பு என்பனவே அந்த மலர்கள். சுவாமி விபுலாநந்தரும் இறைவன் உவக்கும் இன்மலர்களாக 'உள்ளக்கமலம்', 'கூப்பியகைக் காந்தள்', 'நாட்டவிழி நெய்தல்' என்பவற்றையே வலியுறுத்தியதை நாம் அறிவோம்.

சைவம் வலியுறுத்தும் பிரதான வழிபாட்டு நெறிகளான நாற்பாதங்களுள் யோகம் ஒன்று. யோக வழிபாட்டில் ஈடுபடுபவர்கள் கடைப்பிடிக்க வேண்டியன என்று எட்டு வகையான விடயங்கள் கூறப்படுகின்றன. அவை **அட்டாங்கயோகம்** எனப்படும். அட்டாங்கயோகங்களுள் முதலாவது ***இயமம்.*** இயமம் என்றால் கொல்லாமை, களவுசெய்யாமை, வாய்மை, பிறர் பொருளுக்கு ஆசைப்படாமை, ஐம்பொறி யடக்கம் முதலான அறங்களைக் கடைப்பிடித்து வாழ்தலாகும். அட்டாங்கயோகங்களுள் இரண்டாவது ***நியமம்*** எனப்படும். நியமம் என்பது தவம், தூய்மை, தத்துவ நூல்களைக் கற்று விளங்குதல், மனத்திருப்தி, தெய்வசிந்தனை என்பன அமையப் பெறுதலாகும். இயமம், நியமம் என்னும் இந்த இரண்டும் கைவரப் பெறவில்லையாயின் ஏனையவை சாத்தியமாகமாட்டா என்று நமது சமயம் கூறுகின்றது. இவற்றால் நாம் விளங்கிக்கொள்ளவேண்டியது என்னவென்றால், சைவ வாழ்வில் ஒழுக்கம் முக்கியமானது என்பதே.

## கடமையுணர்வு

நாம் நமது கடமைகளிலிருந்தும் தவறுதல் ஆகாது. 'செய்யும் தொழிலே தெய்வம்' என்பது உயர்ந்த ஒரு கோட்பாடாகும். பிரமச்சரியம், இல்லறம், வானப்பிரஸ்தம், துறவறம் என்னும் நான்கு வாழ்க்கைப் படிநிலைகளை நமது சமயம் வகுத்துக் கூறியுள்ளது. அந்தந்தப் படிநிலைக்கு உரிய கடமைகளும் வகுத்து ரைக்கப்பட்டுள்ளன. அவரவர் தத்தம் கடமையைச் செம்மையாகச் செய்யவேண்டும். இல்லறத்திலே வாழ்பவர்கள் ஏனைய நிலையில் உள்ளவர்களுக்கும் துணையாக அமைகிறார்கள். ஏழைகள், அநாதைகள், நோய்வாய்ப்பட்டோர், முதியோர் என்று பலவகையாலும் இயலாத நிலையிலே உள்ளவர்களுக்கு உதவ வேண்டியது இயலுமான சகலரதும் கடமையாகும். மாணவ நிலையிலுள்ள நாம் பெற்றோர், ஆசிரியர் முதலான பெரியவர்களுக்குப் பணிந்து நடப்பதிலும் ஒழுக்கத்தோடு நடந்து கொள்வதிலும், முறையாகக் கற்பதிலும் தவறுதல் ஆகாது. அரச உத்தியோகம், விவசா யம், வியாபாரம் என்று பல திறப்பட்ட தொழில்களில் ஈடுபடும் ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளைச் செவ்வனே செய்ய வேண்டும். கடமைகளை ஒழுங்காகச் செய்யாதவர்களுக்கு கடவுளின் அருள் கிட்டாது; மாறாக பாவமே கிட்டும்.

## சமுதாய உணர்வு

மற்றவர்கள்மேல் அன்பு பாராட்டி அரவணைத்து அவர்களுக்கு உதவி செய்து வாழ்வதை **ஒப்புரவு** என்று கூறுவார்கள். ஒருவருக்கொருவர் ஒப்புரவோடு வாழ்வதற்குப் பயிற்சியளிப்பனவாகவே எங்கள் சமய விரதங்களும் பண்டிகைகளும் விழாக்களும் அமைகின்றன. விரதபூர்த்தியின்போது பிற உயிர்களுக்கும் ஏழைகளுக்கும் உணவு கொடுத்தபின்பே நாம் உண்ணவேண்டும் என்பது விரத நியதிகளுள் ஒன்று. பண்டிகைகளின்போது உறவினர், அயலவர், நண்பர்களுடன் கூடி மகிழ்கிறோம்; பட்சணங்கள் செய்து எல்லோருக்கும் பரிமாறுகிறோம். விழாக்களின்போது ஒன்றுபட்டுச் செயற்படுகிறோம். பாடசாலையில் சரஸ்வதி பூசையின்போது நாம் எவ்வளவு ஒற்றுமையோடு கூடிச் செயற்படுகிறோம்! கோயில்களில் இடம்பெறும் திருவிழாக்களைப் பாருங்கள்! திருவிழாக்கள் தனிமனிதர் ஒருவராலோ அல்லது தனிக்குடும்பம் ஒன்றினாலோ மாத்திரம் நிகழ்த்தக் கூடியன அல்ல. ஊரே கூடித் திரண்டு ஒற்றுமையாக நிகழ்த்துவனவே திருவிழாக்கள். 'ஊர் கூடித் தேர் இழுத்தல்' என்று நம்மத்தியில் வழங்கும் மரபுத்தொடர் அந்த ஒற்றுமை உணர்வையே வலியுறுத்துகின்றது.

நம்மிடையே வளரும் ஒற்றுமையுணர்வு சமுதாயப் பயன் உடையதாக அமையவேண்டும். வீண் ஆடம்பரங்களுக்காக அதிகம் செலவு செய்யாது, சமுதாயத்துக்கு இன்றியமையாத அறப்பணிகளில் ஒற்றுமையோடு ஈடுபடவேண்டும். கல்வி, கலை முதலானவற்றை வளர்க்கவும் ஆதரவற்றவர்களுக்கு ஆதரவு நல்கவும் பொது நிறுவனங்களை அமைத்துப் பணியாற்ற வேண்டும். பொருள் வசதி மிக்கவர்கள் அத்தகைய பணிகளுக்கு உதவுவார்களாயின் அதனால் விளையும் பயன் மிகப் பெரியது.

**ஊருணி நீர் நிறைந்தற்றே உலகவாம்**
**பேரறிவாளன் திரு.** (திருக்குறள்)

அல்லற்பட்டவர்களுக்குச் செய்யும் சேவையே இறைவனுக்கு உகந்த சேவையாகும். இறைவனுக்குச் செய்யும் சேவை மக்களுக்குப் போய்ச் சேர்வதில்லை. ஆனால் மக்களுக்குச் செய்யும் சேவை இறைவனாலும் விரும்பி ஏற்கப்படுகின்றது.

**படமாடக் கோயில் பகவற்கு ஒன்று ஈயில்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா;**
**நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயில்**
**படமாடக் கோயில் பகவற்கு அது ஆமே.** (திருமந்திரம்)

## கலையுணர்வு

நமது சமய வாழ்க்கையில் கலைகளுக்கு மிகுந்த முக்கியத்துவம் உண்டு. இலக்கியம், கட்டடம், சிற்பம், ஓவியம், இசை, நடனம், நாடகம் முதலாக பல்வேறு கலைகள் நமது சமயத்தோடு ஒன்றித்து விளங்குகின்றன. இறைவனை நாம் கலாரூபமாகவே காண்கிறோம். இறைவன் நாதரூபமாக விளங்குகிறான்; நடராஜனாகத் திகழ்கிறான்.

இறைவன் வீற்றிருக்கும் திருக்கோவில்கள், அங்கு எழுந்தருளியிருக்கும் தெய்வத் திருவுருவங்கள், பிற சிற்பங்கள், ஓவியங்கள், வழிபாட்டின்போது பாடப்பெறும் தேவாரம் திருவாசகம் முதலான திருப்பாடல்கள், கீர்த்தனை முதலான இசைப்பாடல்கள், இசைக்கப்பெறும் வாத்தியங்கள், ஆடல்கள், இறைவனுக்குச் செய்யப்பெறும் அலங்காரங்கள், நிவேதனப் பொருள்கள் என்று அனைத்தும் கலையின் கூறுகளாகவே விளங்குகின்றன.

கலை தெய்வத்தன்மை வாய்ந்தது. அதனாலேயே கலைகளின் அதி தேவதை யான சரஸ்வதியைப் போற்றுகிறோம். சிவனை நடராஜராகப் போற்றுகிறோம்.

நமது சமயம் போற்றும் கலை அனைத்திலும் பக்தியும் தர்மமும் இணைந்தே உள்ளன. நமது வீட்டு வாசலில் போடப்பெறும் மாக்கோலம் அழகுக் கலையாகவும் எறும்பு முதலான வாயில்லாப் பூச்சிகளுக்கு உணவளிக்கும் அறமாகவும் விளங்கு கின்றது. கோயிலை மையமாகக் கொண்டு எத்தனையோ கலைஞர்கள் வாழ்கிறார்கள். கோயில், கலைகளை வளர்க்கும் கலாசாலைகளாகவும் கலைகளை ஆற்றுகை செய்யும் பொது அரங்குகளாகவும் திகழ்கின்றன. நமது சமயத்தின் பெருமை அது வளர்த்த கலைகளிலும் தங்கியுள்ளது. தெய்வார்ப்பணமான கலைகளுக்கும் கலைஞர்களுக்கும் மதிப்பளித்து வாழ்வது நமது கடமையாகும். கலைகளின் தாற்பரியத்தை விளங்கி அனுபவிக்கும் ஆற்றலையும் நாம் பெற முயலவேண்டும்.

## கல்வியுணர்வு

சமய வாழ்வில் கல்வி பிரதான இடம் வகிக்கின்றது. அறிவுக்கும் தொழி லுக்குமாகவே நாம் கற்கிறோம். உலகத்தின் இயல்பினை அறிந்து அதற்குத் தக நல்வழியில் நடத்தலே பிரதானமான அறிவாகும். ஆகையால் நாம் சமய நூல்களையும் கற்கவேண்டும். முன்னைய காலங்களில் திண்ணைப் பள்ளிகளிலும்

கோயில்களிலும் அத்தகைய கல்வி வழங்கப்பட்டது. தற்காலத்தில் அறநெறிப் பாட சாலைகள் அதற்காக நிறுவப்பட்டுள்ளன. நமது சமயம், பக்தி இலக்கியங்களும் தத்துவ சாத்திரங்களும் மக்களை வழிப்படுத்தும் புராண இதிகாசம் முதலானவையும் நிரம்பப் பெற்ற வளமான சமயமாகும். அவற்றைக் கற்றுத் தெளிதல் நமது சமய வாழ்வின் ஓர் அங்கமாகும். கல்வியின் பயன் உயர்ந்த தொழில்களையும் செல்வத்தையும் ஈட்டுவது மாத்திரம் அல்ல. பணிவையும் பிற உயர் பண்புகளையும் தராத கல்வியால் பயன் இல்லை. இறையுணர்வை ஏற்படுத்தாத கல்வியால் எந்தப் பயனும் இல்லை என்கிறார் திருவள்ளுவர்.

**கற்றதனால் ஆய பயன் என்கொல், வாலறிவன்**
**நற்றாள் தொழாஅர் எனின்?** (திருக்குறள்)

ஆகவே நாமும் நல்லபடி கற்று, ஒழுக்கம் உள்ளவர்களாக, இறைபக்தி உள்ளவர்களாக, வாழ்க்கையில் முன்னேறுவோமாக.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. புற ஆசாரங்களைப் பேணுவது மட்டும் போதாது என்று கூறப்பட்டமைக்கான காரணம் யாது?
2. இறையுணர்வோடு வாழவேண்டியதன் அவசியம் யாது?
3. ஒவ்வொருவரும் தத்தம் கடமைகளைச் செவ்வனே செய்யாது விடுவதால் ஏற்படும் விளைவு யாது?
4. இறைவழிபாட்டுக்கு இன்றியமையாதவை என்று இங்கு குறிப்பிடப் பட்டுள்ளவை எவை?
5. அட்டபுஷ்பங்கள் எனப்படுபவை யாவை? அவை ஏன் அட்டபுஷ்பங்கள் எனப்படுகின்றன?
6. இறைவன் உவக்கும் மலர்களாக விபுலாநந்தர் குறிப்பிடுபவை யாவை?
7. ஒப்புரவு என்றால் என்ன?
8. ‘படமாடக்கோயில்...’ எனத் தொடங்கும் திருமந்திரப் பாடலால் வலியுறுத்தப் படும் உண்மை யாது?
9. எமது சமயத்தோடு கலைகள் இரண்டறக் கலந்தவை என்பதை உதாரணம் தந்து விளக்குக.
10. கல்வி பற்றித் திருவள்ளுவர் கூறும் கருத்தை விளக்குக.

## செயற்பாடு

சைவ வாழ்வை எவ்வாறு வாழலாம் என்பது பற்றிக் கலந்துரையாடி, குழுக்களாக உங்கள் கருத்துக்களை முன்வைக்குக.

# 3 சைவ விழுமியங்கள்

விழுமியம் என்றால் மேலான பண்பு என்பது பொருள். எனவே சைவ விழுமியம் என்றால் சைவசமயம் வலியுறுத்துகின்ற மேலான பண்புகள் - குணங்கள் எனலாம்.

சைவம், உயிர்களின் ஆன்ம விடுதலையையே மேலான இலட்சியம் எனக் கொண்டு அதற்கான வழிவகைகளை வகுத்துக்காட்டுகின்றது. அந்த இலட்சியம் வீடுபேறு என்றே கொள்ளத்தக்கது. அந்த இலட்சியத்தை அடைவதாயின் இம்மையில் - அதாவது இந்தப் பிறவியில் நாம் நன்னெறியினின்றும் தவறாது வாழவேண்டும். அதன் பொருட்டு, பல நெறிமுறைகளை சைவசமயம் வலியுறுத்துகின்றது. மனிதனது வாழ்க்கைமுறை ஏனைய விலங்குகளின் வாழ்க்கைமுறை போன்றதல்ல. பகுத்தறிவு உடையவனான மனிதன், குறித்த நெறிமுறைகளுக்கு அமைவாகவே வாழவேண்டும்.

அன்புடைமை, வாய்மை, பணிவுடைமை அடக்கமுடைமை, செய்ந்நன்றி மறவாமை முதலான அக ஆசாரங்களே மனித விழுமியங்கள் என மதிக்கப்படுவன. சைவம் வலியுறுத்தும் விழுமியங்களுள் அன்புடைமை, வாய்மை என்பன பற்றி இங்கு நோக்குவோம்.

## அன்புடைமை

ஒருவர் தன்னோடு தொடர்புடையவர்களிடத்திலே காட்டுகின்ற ஈடுபாடே அன்பு என்று கொள்ளப்படுகின்றது. தன் மனைவி, கணவன், தன்மக்கள், தன் பெற்றோர், தன் சகோதரர், தன் நண்பர் என்று தம்மோடு தொடர்புபட்டவர்களிடத்தில் அன்பு வைக்கிறார்கள். தொடர்புடையவர்களிடம் மாத்திரம் அன்றி அல்லாத வரிடத்திலும் அக்கறை காட்டவேண்டும். அப்படிக் காட்டும் அக்கறையே அருள் என்று சிறப்பிக்கப்படுகிறது. அருள் என்பது அன்பின் முதிர்ச்சி எனலாம்.

மனிதரிடத்தில் மாத்திரம் அன்றி விலங்குகளிடத்தும் அன்புகாட்ட வேண்டும் என்றே சைவம் வலியுறுத்துகின்றது. அதனாலேதான் கொலை, களவு, புலாலுண்ணல் முதலானவற்றை பாவகாரியங்கள் என்று சைவம் விலக்குகின்றது.



சிவபிரான் பன்றிக்குட்டிகளுக்குப் பால்கொடுத்த கதை சீவகாருண்யத்தையே வலியுறுத்துகின்றது. சைவம் அன்பைக் கடவுளாகவே கருதுகின்றது. உயிர்களிடம் அன்பு வைப்பவன் தெய்வநிலை எய்திவிடுகிறான் என்கிறார் திருமூலர்.

**அன்பும் சிவமும் இரண்டு என்பர் அறிவிலார்**
**அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்**
**அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்**
**அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே.** (திருமந்திரம்)

இறைவன் அன்பே வடிவானவன். அவன் அறியாமையுள் மூழ்கியுள்ள உயிர்களை அந்த அறியாமையிலிருந்து நீக்கி பேரின்பத்தைக் கொடுப்பதற்காகவே அவற்றுக்கு தனு கரண புவன போகங்களைக் கொடுக்கிறான் என்று சைவசித்தாந்தம் கூறுகின்றது. அதாவது இறைவன் எம்மீது கொண்ட பெருங்கருணை காரணமாகவே இந்த உடலோடு, இந்த உலகத்திலே வாழும் பிறவி எமக்குக் கிடைத்தது. ஒருவரோடு ஒருவர் அன்பு பாராட்டுவதற்காகவே எலும்பு, தசை, தோல் முதலானவற்றோடு கூடிய இந்த உடம்பு எமக்குக் கிடைத்தது என்கிறார் திருவள்ளுவர்.

**அன்போடு இயைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு**
**என்போடு இயைந்த தொடர்பு.** (திருக்குறள்)

ஆகவே நாம் ஒருவரோடு ஒருவர் அன்பு பாராட்ட வேண்டும். சகல உயிர்களிடத்தும் கருணை காட்டவேண்டும்.

அன்போடு நடந்துகொள்பவருக்கு உலகம் முழுவதும் நண்பர்கள் அமைவார்கள். பகைவர் என்று ஒருவரும் இருக்கமாட்டார்கள். பகைவர் என்று வரும்போதுதான் ஒருவன் கோபம், கடுஞ்சொற்பேசுதல், புறங்கூறுதல், பொய் பேசுதல், கொலை முதலான பாவகாரியங்களைச் செய்ய முற்படுகிறான். ஆகையால் அன்பு என்கின்ற விழுமிய பண்பு ஒன்று இருந்தாலே ஏனைய எல்லா விழுமிய பண்புகளும் நம்மிடம் உண்டாகும். நாம் மற்றவர்களிடம் அன்புகாட்டக் காட்ட மற்றவர்கள் நம்மிடம் அன்புகாட்டுவார்கள். பரஸ்பர அன்பு இருக்கும்போது ஒருவருக்குத் துன்பம் வரும்போது மற்றவர் துணைக்கு வருவார். மற்றவர்கள் எம்மீது காட்டும் அக்கறையே எமது துன்பத்தில் பெரும்பங்கைப் போக்கிவிடும். அதனால் துன்பம் அகன்றுவிடும்; எங்கும் எதிலும் இன்பமே நிலவும்.

பிறவித் துன்பத்தை நீக்குவதற்கு, தவம் செய்ய வேண்டும் என்று சொல்வார்கள். தவம் என்றவுடன் உண்ணாமை, உறங்காமை முதலான கடும் நியதிகளையே நாம் கருதுவோம். அப்படியல்ல. பிறரிடம் அன்பு காட்டுதலே உயர்ந்த தவமாகும். அன்பாகிய தவத்தைச் செய்தால் இன்பம் தானாகவே வந்துசேரும். மஹாகவி சுப்பிரமணிய பாரதியார், தன் நெஞ்சை நோக்கிச் சொல்லுகிறார்:

**செய்க தவம்! செய்க தவம்! நெஞ்சே, தவம் செய்தால்**
**எய்த விரும்பியதை எய்தலாம் - வையத்தில்**
**அன்பிற் சிறந்த தவம் இல்லை; அன்புடையார்**
**இன்புற்று வாழ்தல் இயல்பு.**

## வாய்மை

உண்மை பேசுதலே வாய்மை எனப்படுவது. தன்னலம் கருதி, நடந்தவற்றை மறைத்தல் பொய்மை. எதனையும் மறையாது வெளிப்படுத்துதல் வாய்மை. அது வாயினால் வெளிப்படுவதால் வாய்மை எனப்பட்டது.

வாய்மை என்றால் என்ன என்பதற்கு திருவள்ளுவர் தரும் வரைவிலக்கணம் உயர்வானது. யாருக்கும் எவ்வகையிலும் தீமை பயக்காதவற்றைப் பேசுவதே வாய்மை என்கிறார் வள்ளுவர்.

**வாய்மை எனப்படுவது யாது எனின், யாதொன்றும்**
**தீமை இலாத சொலல்.** (திருக்குறள் )

*அவர் மேலும் ஒருபடி சென்று பொய்மையும் சிலவேளைகளில் வாய்மையாகக் கருதப்படும் என்கிறார். ஒரு பொய்யினால் நன்மை உண்டாகுமாக இருந்தால் அந்தப் பொய்யும் வாய்மையாகவே கொள்ளத்தக்கது. ஆனால் அந்த நன்மை சுயநலமானதாக அல்லாமல் குற்றம் அற்றதாக - புரை தீர்ந்ததாக - இருக்கவேண்டும்.*

**பொய்மையும் வாய்மை இடத்த, புரைதீர்ந்த**
**நன்மை பயக்கும் எனின்.** (திருக்குறள்)

*உதாரணமாக, ஒருவனைக் கொல்வதற்கு சிலர் அவனைத் துரத்தி வருகிறார்கள். அவன் நம்மிடம் சரணடைந்து தனக்குவரும் ஆபத்தை எடுத்துரைக்கிறான். அந்த வேளையில், அவனை மறைவிடத்தில் ஒளித்துவிட்டு, அவனைக் கொல்லவந்தவர்கள் வந்து அவனைப் பற்றி விசாரிக்கும்போது 'அப்படியொருவனை நான் காணவில்லையே' என்று சொல்வது பொய்யின்பாற்பட்டதாகாது.*

*ஒருவன் தனது நன்மையின் பொருட்டோ அல்லது தனக்குப் பிடிக்காதவருக்குத் தீமை ஏற்படவேண்டும் என்பதற்காகவோ பொய்பேச முற்படுகிறான். அதனாலே அவன் நன்மை அனுபவிக்கப்போவதில்லை; பாவம் செய்தவனாகி இறைவனுடைய தண்டனைக்கு ஆளாவான். அதுமாத்திரமல்ல, அவனது மனச்சாட்சியே அவனை வருத்தும். ஆகையால் பொய் பேசுவதைத் தவிர்த்துக் கொள்ளவேண்டும். ஒருவர் உள்ளத்தால் தூயவராக இருக்கின்றாரா என்பதற்கு அத்தாட்சியாக அமைபவை அவர் பேசும் வார்த்தைகளே. அவை உண்மையாக அமையும் போது அவர் அகத்தூய்மை உடையவர் என்பது உணரப்படும். ஆதலால்தான் வள்ளுவர், பொய்பேசாதவன் உலகத்தாரால் மதிக்கப்படுவான் என்று கூறுகிறார். அதிலும் ஒருபடிமேலாக தவம், தானம் முதலானவற்றைச் செய்பவர்களைவிட உண்மை பேசுபவர்கள் உயர்வானவர்கள் என்கிறார்.*

**உள்ளத்தால் பொய்யாது ஒழுகின், உலகத்தார்**
**உள்ளத்துள் எல்லாம் உளன்.** (திருக்குறள்)

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானம் செய்வாரின் தலை. (திருக்குறள்)

பொய்மையிலிருந்து விலகி மெய்மையைக் காண்பதே சமய வாழ்க்கை. நமது வேதம், சத்தியம் ஒன்றே வெல்லும் என்று பொருள்படுவதான **சத்தியமேவ ஜயதே** என்ற வாசகத்தைக் கொண்டமைந்துள்ளது. **சத்தியம் வத** (உண்மை பேசு) என்பது எமது உபநிடத மகா வாக்கியங்களுள் ஒன்றாக அமைகின்றது.

நமது புராணங்களிற் காணப்படும் அரிச்சந்திர மகாராஜாவின் கதை, வாய்மையாகிய அறத்தைப் பேணுபவன், எத்தகைய துன்பங்களுக்கு ஆளான போதிலும் ஈற்றில் இறையருளுக்கும் புகழுக்கும் பாத்திரமாவான் என்பதை வலியுறுத்துகின்றது. நவீன யுகத்து அரிச்சந்திரன் எனப் போற்றப்பெறும் மஹாத்மா காந்தியடிகளின் ஆளுமை உருவாக்கத்தில் அரிச்சந்திரன் கதை செலுத்திய செல்வாக்கை உலகம் அறியும். மஹாத்மா காந்தி உண்மை பேசுபவராக வாழ்ந்தபடியாலேயே அவரால் அஹிம்சாவழியில் வெல்ல முடிந்தது. அவர் உலகத்தார் உள்ளத்தில் எல்லாம் இன்றும் உள்ளார். நாமும் உண்மைபேசி உத்தமராய் வாழ்வோம்.



## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சைவ விழுமியம் என்றால் என்ன?
2. சைவவிழுமியங்களுள் மூன்றினைக் குறிப்பிடுக.
3. அன்புக்கும் அருளுக்கும் இடையிலான தொடர்பு யாது?
4. திருமூலரின் கருத்தின்படி தெய்வநிலை எய்துபவர் யார்?
5. திருவள்ளுவரின் கருத்தின்படி இந்த உடல் எமக்குக் கிடைத்தது எதற்காக?
6. பாரதியார் கூறும் தவம் யாது? அதனால் ஏற்படும் பயன் யாது?
7. வாய்மை என்பதற்கு வள்ளுவர் கூறும் வரைவிலக்கணம் யாது?
8. பொய்மையும் எப்போது வாய்மையாகும்?
9. ஒருவர் அகத்தூய்மை உடையவர் என்பதற்கு அத்தாட்சியாக அமைவது எது?
10. தவம், தானம் என்பவற்றைச் செய்பவர்களைவிட உயர்ந்தவராக வள்ளுவர் யாரைக் கருதுகிறார்?

## செயற்பாடு

அன்புடைமை, வாய்மை ஆகிய விழுமிய பண்புகளைக் கைக்கொண்டு வாழ்ந்த உத்தமர்களின் கதைகளைத் தேடியறிந்து வகுப்பறையில் சமர்ப்பிக்குக.

# 4 காலக் கணிப்பு



காலம் என்பது எல்லையற்றது. எனினும் மனிதன் தன் வசதிக்காக காலத்தை, குறித்த சில முறைகளிலே பகுத்துக் கணிப்பிடுகிறான். அவ்வகையில் ஆண்டு, மாதம், கிழமை, நாள் முதலியன ஒருவகையான காலக் கணிப்பு அலகுகள் எனலாம். இத்தகைய காலக்கணிப்புக்கு சூரியன், சூரியனைச் சுற்றிவரும் பூமி, பூமியின் உபகோளான சந்திரன், அவற்றோடு தொடர்புபட்ட நட்சத்திரங்கள், இராசிகள் என்பவற்றின் இயக்கங்கள் அடிப்படையாக அமைகின்றன.

நடைமுறையில் உள்ள கால அலகுகளுள் பெரியது ஆண்டு எனலாம். பன்னிரண்டு மாதங்கள் கொண்டது ஒரு ஆண்டு எனப்படும். மாதம், ஆண்டு ஆகியவற்றின் கணிப்பீடுகள் சந்திரனை அடிப்படையாகக் கொண்டும் சூரியனை அடிப்படையாகக் கொண்டும் மேற்கொள்ளப்படுகின்றன.

சந்திரனை அடிப்படையாகக் கொண்டு கணிப்பிடும் முறைக்கு **சந்திரமானம்** என்று பெயர். சூரியனை அடிப்படையாகக் கொண்டு கணிப்பிடும் முறைக்கு **சௌரமானம்** அல்லது **சூரியமானம்** என்பது பெயர்.

**சந்திரமான** முறையில் மாதத்தைக் கணிப்பிடுவது இரு வகைப்படும். ஒன்று நிறைமதியை அதாவது பூரணையை இறுதிநாளாகக் கொண்டு மாதத்தைக் கணிக்கும்

*முறை. அதற்கு **பூர்ணிமாந்த முறை** (பூர்ணிம + அந்தம்) என்று பெயர். மற்றையது: உவாமதியை அதாவது அமாவாசையை இறுதி நாளாகக் கொண்டு மாதத்தைக் கணிப்பிடும் முறை; அதற்கு **அமாந்த முறை** (அம + அந்தம்) என்று பெயர்.*

*பண்டைக் காலத்தில் தமிழர்கள் சந்திரமான நெறியில் பூர்ணிமாந்த முறையைக் கடைப்பிடித்து மாதங்களை வகுத்தனர். நிறைமதி(பௌர்ணமி) எந்த நட்சத்திரத்துடன் சேர்ந்து நிற்கிறதோ அந்த நட்சத்திரத்தின் பெயரையே அந்த மாதத் தின் பெயராக அமைத்தனர். உதாரணமாக சித்திரை மாதம் என்பது சித்திரை நட்சத் திரத்தோடு திங்கள் (பூரண சந்திரன்) சேர்ந்து நிற்பதால் வந்த பெயர்; வைகாசி மாதம் என்பது விசாக நட்சத்திரத்தோடு திங்கள் சேர்ந்து நிற்பதால் வந்த பெயர்.*

*மதியின் அடிப்படையிலே கணிப்பிடப்படுவதன் காரணமாகவே மாதம் என்ற பெயர் ஏற்பட்டது. மாதத்தை மதி என்றும் குறிப்பிடுவதுண்டு. மாதத்தைக் குறித்துத் தமிழில் வழங்கும் மற்றொரு பெயர் திங்கள் என்பது. திங்கள் என்ற சொல் சந்திரனையும் குறிப்பதாகும்.*

*முற்காலத்தில் தமிழ் ஆண்டு, தை முதல் மார்கழி ஈறாக கணிக்கப்பட்டது. சில காலப்பகுதிகளில் ஆவணி முதல் ஆடி ஈறாகவும் ஆண்டு கணிப்பிடப்படும் வழக்கம் இருந்துவந்துள்ளது. அத்தகைய கணிப்பீடுகளில் ஏற்பட்ட சில சங்கடங்களைத் தவிர்ப்பதற்காக, பிற்காலத்தில், இன்றுள்ளது போல சூரியமானப்படி, ஆண்டுக்கணிப்பீட்டை மேற்கொள்ளத் தொடங்கினார்கள். அதாவது சூரியன் மேடராசியில் பிரவேசிக்கும் நாள்(சித்திரை வருடப்பிறப்பு) முதல், மீனராசியை விட்டுப் பிரியும் நாள்(வருடப்பிறப்புக்கு முதல் நாள்) வரை ஓர் ஆண்டு எனக் கணிப்பிடத் தொடங்கினார்கள்.*

*உரோமர், கிரேக்கர், வட இந்தியர் முதலானவர்களும் ஆரம்ப காலத்தில் சந்திரமான நெறிப்படியே காலக்கணிப்பீட்டை மேற்கொண்டு, பின் அதனைக் கைவிட்டு, சௌரமான நெறியைக் கைக்கொண்டார்கள். அவ்வாறு சவுரமான நெறியைக் கைக்கொள்ளத் தொடங்கிய பின்னரும் திங்கள்(சந்திரன்) என்ற பொருளின் அடிப்படையில் உருவான மந்த் (Month) என்ற பெயராலேயே அவர்களும் மாதத்தைக் குறிப்பிட்டு வருகின்றனர்.*



## கிழமை

கிழமை, வாரம் என்னும் சொற்கள் இரண்டும் உரிமை என்ற ஒரே பொருளைத் தருவன. நவக்கிரகங்கள் எனக் கொள்ளப்படுவனவற்றுள் இராகு, கேது என்னும் இரண்டையும் தவிர்த்து ஏனைய ஏழு கிரகங்களின் அடிப்படையிலேயே கிழமைப் பெயர்கள் அமைகின்றன. எல்லாக் கிரகங்களையும் ஈர்த்து அவற்றின் நடுநாயகமாக நிற்கும் சூரியனை(ஞாயிறு) முன்னிட்டு முதலாவது நாள் ஞாயிற்றுக்கிழமை எனப்படு கின்றது.

கிழமை, வாரம் என்ற சொற்கள் உரிமை என்ற பொருளைத் தருவன என்று முன்பே கூறப்பட்டது. அவ்வகையில் ஞாயிற்றுக்கு உரிமையுடைய நாள் ஞாயிற்றுக் கிழமை என்று ஆகின்றது. அவ்வாறே சந்திரன் (திங்கள்), செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்னும் ஏனைய கிரகங்களுக்குரிய நாள்கள் முறையே திங்கட்கிழமை, செவ்வாய்க்கிழமை, புதன்கிழமை, வியாழக்கிழமை, வெள்ளிக்கிழமை, சனிக்கிழமை என்று பெயர் பெறுகின்றன.

கிழமை, வாரம் என்னும் சொற்கள் மேற்படி ஏழு நாட்களின் தொகுதியைக் குறிப்பனவாகவும் வழங்குகின்றன. ஆங்கிலத்தில் ஏழுநாள் கொண்ட அத்தொகுதி Week என்ற சொல்லால் சுட்டப்பெறுகிறது. உலகளாவிய ரீதியில் ஒரு வாரம் என்பது ஏழு நாள்களைக் கொண்டதாகவே கொள்ளப்படுகின்றது. எனினும் ஒருநாள் (Day) தொடங்கி அது முடியும் நேரத்தைப் பொறுத்தவரையில் மதங்களுக்கிடையே வேறுபட்ட கணிப்பீடுகள் உண்டு. இந்துக்களாகிய நம்மைப் பொறுத்தவரையில் ஒருநாள் என்பது, ஒருநாள் சூரிய உதயம் முதல், அடுத்தநாள் சூரிய உதயம் வரையான காலப்பகுதியாகும். கிறித்துவ முறையில் நள்ளிரவு முதல் அடுத்தநாள் நள்ளிரவு வரையான காலப்பகுதியே ஒருநாள் எனப்படுகிறது. இஸ்லாமியருக்கு ஒருநாள் என்பது, சூரிய அஸ்தமனம் முதல் அடுத்தநாள் சூரிய அஸ்தமனம் வரையிலான காலப்பகுதியாகும்.

இங்கு நோக்கியவற்றால் நமது இந்துமரபில் வழக்கிலுள்ள காலக்கணிப்பீடு இயற்கையோடு ஒட்டியது என்பது விளங்கும். நமது சமய மரபுகளில் காலக்கணிப்பீடு இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது. வழிபாடுகள், விரதங்கள், பண்டிகைகள், விழாக்கள் முதலியவற்றுக்குரிய தினங்கள் இத்தகைய காலக்கணிப்பீட்டின் அடிப்படையிலேயே நிர்ணயிக்கப்படுகின்றன. ஆண்டு, மாதம், வாரம் ஆகியவை பற்றிய இந்த அடிப்படை அறிவு பஞ்சாங்கத்தை விளங்கிக்கொள்வதற்கு அவசியமானதாகும்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. கால அலகுகள் எவை?
2. காலக்கணிப்புக்கு உதவுபவை எவை?
3. சந்திரமானம் என்பது யாது?
4. சூரியமானம் என்பது யாது?
5. சந்திரமானக் கணிப்பீடு எத்தனை வகைப்படும்? அவை எவை?
6. பண்டைத் தமிழர் மாதங்களின் பெயரை எவ்வாறு அமைத்தனர்?
7. சூரியன் எந்த இராசியில் பிரவேசிக்கும்போது தமிழ் ஆண்டு பிறக்கிறது?
8. கிழமைப் பெயர்கள் எந்த அடிப்படையில் இடப்பட்டுள்ளன?
9. இந்துக்களைப் பொறுத்தவரையில் ஒருநாளின் எல்லை யாது?
10. காலக்கணிப்பீடு இந்து மரபில் பெறும் முக்கியத்துவம் யாது?

## செயற்பாடு

பாடத்தை வாசித்து குறுவிடை வினா அடங்கிய சிற்றேடு ஒன்றைத் தயாரிக்குக.

# 5 விரதங்கள்



"இந்தச் சரீரம் கிடைத்தது நாம் இறைவனை வணங்கி முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்" என்பார் ஆறுமுகநாவலர்.

ஆணவ வயப்பட்டு அறியாமையுள் மூழ்கிக் கிடந்த ஆன்மாவுக்கு தனு கரண புவன போகங்களை வழங்கி, அந்த ஆன்மா மெய்யறிவு பெறுவதற்கு இறைவன் துணைசெய்கின்றான். அந்தவகையிலேயே நமக்கு இந்த உடலும் உலக வாழ்வும் கிடைத்தன. ஆகையால் இந்தப் பிறவியின் நோக்கத்தை உணர்ந்து இந்தப் பிறவியைத் தந்த இறைவனை இடையறாது வழிபடுதலே நமது கடமையாகும். எனினும் உலக வாழ்வில் அமிழ்ந்திவிட்ட எமக்கு அந்த நிலைமை பூரணமாகக் கைகூடுவதில்லை. ஆகவே இறைவனை வழிபடுவதற்காகவென்று விசேடமான வழிபாட்டு முறைகளை நமது சமயம் நமக்கு வகுத்துத் தந்துள்ளது. அவற்றுள் ஒன்றே விரதமாகும்.

விரதமாவது, மனம் பொறிவழிப் போகாது நிற்றற்பொருட்டு உணவை விடுத்தேனும் சுருக்கியேனும் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலும் இறைவனை மெய்யன்போடு விதிப்படி வழிபடல் ஆகும். இது ஆன்ம ஈடேற்றம்

கருதிச் செய்யப்படும் ஒருவகைச் சாதனையாகும். விரதம், நோன்பு என்பன ஒரு பொருள் தரும் சொற்கள்.

> **''உற்ற நோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை**
> **அற்றே தவத்திற்கு உரு''**

என்கிறார் திருவள்ளுவர்.

அதாவது தனக்கு வரும் துன்பங்களைத் தாங்கிக் கொள்வதும் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாமையுமே தவம் என்கிறார். உணவைத் தவிர்த்தல், உறக்கத்தைத் தவிர்த்தல் முதலியன எமக்கு வரும் துன்பங்களைத் தாங்கிக் கொள்வதற்கான ஒருவகைப் பயிற்சிகளாகும். நமக்கு வரும் துன்பங்களைத் தாங்கும்போது பிற உயிர்கள் படும் வேதனைகளையும் எம்மால் உணர்ந்து கொள்ள முடியும். அப்போது நாம் பிறருக்கு, பிற உயிர்களுக்கு துன்பம் செய்வதிலிருந்து தவிர்ந்து கொள்வோம்.

விரதம் அனுட்டிப்பதால் நமது மனம், புத்தி முதலியன தூய்மை அடையும். அதனால் ஞானம் கைகூடும். எனினும் உலகியல் நன்மை கருதியும் சில விரதங்கள் அனுட்டிக்கப்படுவதுண்டு.

## புரட்டாதிச் சனி

சனி என்னும் கிரகத்துக்கு உரிமையுடைய நாள் சனிக்கிழமையாகும். எல்லா சனிக்கிழமையும் சனீஸ்வர வழிபாட்டிற்கான நாளாக இருந்தபோதிலும், புரட்டாதி மாதத்தில் வரும் சனிக்கிழமை சிறப்பிடம் பெறுகின்றது.

இத்தினத்தில், கறுப்பு எள்ளைப் பொட்டலமாகக் கட்டி, நல்லெண்ணெய் விட்டு எரித்து சனீஸ்வரனை வழிபடுவார்கள், கறுப்புஎள், நல்லெண்ணெய் முதலிய வற்றைத் தானம் செய்வதும் உண்டு.

புரட்டாதிச் சனியன்று, விரதமிருந்து சனீஸ்வர பகவானுக்கு, கறுப்பு அல்லது நீலப்பட்டாடை சாத்தி, நீல நிற மலர்களால் அர்ச்சித்து, எள்சாதம் நைவேத்தியம் செய்து வழிபடுதல் மேலான பலனைத் தரும். காகத்திற்கு உணவிட்டபின் விரதத்தை நிறைவு செய்வர்.

## கந்தசஷ்டி

கந்தசஷ்டி, முருகனுக்குரிய விரதங்களுள் விசேடமானது. ஐப்பசி மாதம் அமாவாசையை அடுத்த பிரதமை முதல் (வளர்பிறைப் பிரதமை) சஷ்டி ஈறாக ஆறு நாட்கள் இவ்விரதம் அனுட்டிக்கப்படும்.

தினமும் காலையில் நீராடி, முருகப்பெருமானை திரிகரண சுத்தியோடு வழிபட்டு, ஆறு நாட்களும் உபவாசமிருப்பர். ஏழாம் நாள் காலையில் சிவனடியார் களுடன் பாரணை செய்து விரதத்தை நிறைவு செய்வர்.

மேற்படி நியமத்தைக் கடைப்பிடிக்க இயலாதவர்கள் முதலைந்து நாட்களும் ஒரு பொழுது உண்டு சஷ்டியில் உபவாசம் இருப்பர். இவ்விரதத்தை ஆறு ஆண்டுகள் அனுட்டித்தல் நன்று.

சூரபத்மனை முருகன் சங்காரம் செய்தது இந்த சஷ்டி தினத்திலேயாம். இத்தினத் தில் விசேடமாக முருகன் ஆலயங்களில் சூரன்போர் இடம் பெறும். விரதகாலம் ஆறு நாட்களும் ஆலயங்களில் கந்தபுராண படனம் இடம்பெறும்.

மனிதரிடம் உள்ள காமம், வெகுளி, ஈயாமை, மயக்கம், செருக்கு, பொறாமை முதலிய அசுரப் பண்புகளை அழித்து, தெய்விக நிலையில் பெருவாழ்வு வாழ இவ்விரதம் துணைசெய்யும்.

## விநாயகசஷ்டி

இது விநாயக விரதங்களில் மிகச் சிறப்பான விரதமாகும். இவ்விரதம், கார்த் திகை மாதத் தேய்பிறைப் பிரதமை முதல், மார்கழி மாத வளர்பிறை சஷ்டி வரையுள்ள இருபத்தொரு நாட்கள் அனுட்டிக்கப்படும்.

விரதகாலத்தில் தினமும் விநாயகருக்கு இளநீர், கரும்பு, மோதகம், அவல், எள்ளுருண்டை முதலானவற்றை நிவேதித்து வழிபாடு செய்வர். முதல் 20 நாட்களும் பகல் ஒரு பொழுது உணவு உண்பர். சிலர் இரவில் பால், பழம் அருந்துவர். இறுதித் தினத்தில் உபவாசம் இருப்பர். விரதகாலத்தில் திரிகரண சுத்தியோடு விநாயகரை வழிபடுவர்.

இவ்விரதத்தை 21 வருடங்கள் அனுட்டிப்பது சிறப்பு. இயலாதவர்கள் 7 வருடங்கள் அனுட்டிக்கலாம். விரத நாட்களில் ஆலயங்களில் பிள்ளையார் கதை படிக்கும் வழக்கம் உள்ளது.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. எமது பிறப்பின் நோக்கம் யாது?
2. ஆன்மாவுக்கு தனு கரண புவன போகங்களை இறைவன் எதற்காக வழங்கு கிறான்?
3. விரதம் என்றால் என்ன?
4. 'தவம்' என்பதற்கு, திருவள்ளுவர் கூறும் வரைவிலக்கணம் யாது?
5. விரதம் அனுட்டிப்பதால் ஏற்படும் நன்மைகள் யாவை?
6. புரட்டாதிச்சனி விரதம் எவ்வாறு அனுட்டிக்கப்படுகின்றது?
7. கந்தசஷ்டி விரதம் எப்போது அனுட்டிக்கப்படுகிறது?
8. கந்தசஷ்டி விரதகாலத்தில் ஆலயங்களில் படிக்கப்படும் புராணம் யாது?
9. விநாயகசஷ்டி விரதம் எப்போது அனுட்டிக்கப்படுகிறது?
10. இவ்விரத காலத்தில் பாராயணம் செய்யப்படும் நூல் யாது?

## செயற்பாடு

புரட்டாதிச்சனி, கந்தசஷ்டி, விநாயகசஷ்டி ஆகிய விரதங்களை அனுட்டிக்கும் முறைகளையும் அவ்வவ் விரத காலத்தில் பாராயணம் செய்ய வேண்டிய தோத் திரப் பாடல்களையும் காட்சிப்படுத்துக.

# 6 தீபாவளி

எங்கள் விரதங்களும் பண்டிகைகளும் சமயம் வேறு, வாழ்வு வேறு அன்று, வாழ்க்கையோடு இணைந்ததுதான் சமயம் என்பதைப் புலப்படுத்துவனவாக அமைந் துள்ளன. அவை நம் வாழ்வில் இரண்டறக் கலந்துவிட்டன. இறையுணர்வை வளர்த்துக் கொள்ளவும் அதன்மூலம் சிந்தனை, சொல், செயல் என்பவை புனிதப்படவும் விசேட நாட்கள் எமக்கு வழிகாட்டுகின்றன.

தைப்பொங்கல், வருடப் பிறப்பு, தீபாவளி, முதலான பண்டிகைகளின் போதும் சிவராத்திரி, பிரதோஷம், நவராத்திரி, திருவாதிரை போன்ற விரத நாட்களிலும் நாம் வீட்டையும் சுற்றுப்புறத்தையும் தூய்மைப்படுத்துகின்றோம். வீட்டைக் கழுவுவதும் மெழுகுவதும் தோரணங்கள், கோலங்களால் அலங்கரிப்பதும் நீராடிப் புதிய ஆடை தரிப்பதும் புறத்தூய்மையின்பாற்படுவனவே. புதிய பாத் திரங்களிலே உணவைச் சமைத்து, இறைவனுக்கு அதை நிவேதனமாக்கி, உறவினர் விருந்தினருடன் கூடி உண்பது என்பனவெல்லாம் விசேட நாட்களில் நாம் கைக்கொள்ளும் வழக்கங்களாக அமைந்துள்ளன. இவையெல்லாம் உள்ளத் தூய்மையை வளர்ப்பதற்கு வழியாக அமைபவை.

சூரியனுடைய நிலைமாற்றத்தால் பூமியில் பருவ மாற்றங்கள் உண்டாகின்றன. இயற்கை எழில் நிறைந்த இளவேனில் கால ஆரம்பமே சித்திரைப் புதுவருடப் பிறப்பாக மலர்கிறது. திருக்கோயில்களில் பகலிலே நிகழும் பூசை சூரிய வழி பாட்டுடனும் இரவிலே சந்திர வழிபாட்டுடனும் தொடங்குவதை நாம் பார்க்கிறோம். இவ்வாறாக எமது பண்டிகைகள், விரதங்கள், வழிபாடுகள் யாவும் இயற்கையோடு இயைந்தனவாக அமைகின்றன. நாம் கொண்டாடும் அத்தகைய பண்டிகைகளுள் ஒன்றான தீபாவளி பற்றி இங்கு நோக்குவோம்.



ஐப்பசி மாதத்திலே தீபாவளிப் பண்டிகையைக் கொண்டாடுகிறோம். ஆவளி என்ற சொல்லுக்கு வரிசை என்பது பொருள். எனவே தீப + ஆவளி என்றால் தீபங்களை வரிசையாக ஏற்றிவைத்தல் என்பது பொருளாகும். ஐப்பசி மாதத்திலே கிருஷ்ண பட்ச (தேய்பிறை) சதுர்த்தசி தினத்தில் தீபாவளி கொண்டாடப்படுகின்றது. இப்பண்டிகை ஒரு புராணக் கதையுடன் தொடர்புடையது.

புராணங்களிலே அசுரர்கள், தேவர்கள் என இரு வகையினர் கூறப்படுகின்றனர். இவர்களுக்கிடையே போர் நடைபெற்று அசுரர் அழிவதாகவும் தேவர்களின் வாழ்வதாகவும் எடுத்துரைக்கப்படுகின்றது. நரகாசுரன் என்னும் ஓர் அசுரன் ''நானே பெரியவன்'' என்று அகங்காரம் கொண்டிருந்தான். அவன் எல்லோரையும் வருத்தினான். ஆலயங்களிலே பூசைகள், விழாக்களை நிறுத்தினான். வீடுகள், கோயில்கள் யாவும் இருளில் மூழ்கிக் கிடந்தன. மக்களின் வாழ்க்கையே இருள்மயமாகிவிட்டது. மக்கள் இறைவனிடம் முறையிட்டனர். அவ்வேளை காத்தற் கடவுளாகிய விஷ்ணுமூர்த்தி துவாரகாபுரியில் கிருஷ்ண பகவானாக அவதரித்திருந்தார். ''நல்லவர்களைக் காத்து தீயவர்களை அழிக்கவும் தர்மத்தை நிலைநாட்டவும் காலந்தோறும் நான் தோன்றுகிறேன்'' என்று பகவத்கீதையில் அருளிய அக்கிருஷ்ண பகவான், நரகாசுரனை அழிக்கத் திருவுளங்கொண்டார். பகவானின் கையால் இறக்கும் வேளையில் நரகாசுரன் உண்மையை உணர்ந்தான்; இறப்பதற்கு முன் பகவானிடம் ஒரு வரம் வேண்டினான்.

''சுவாமி நான் இறக்கும் இத்தினத்திலே உன்னை அருச்சித்து வழிபடுவோருக்கு அருள் புரிய வேண்டும்'' என்றான். அந்த வரம் வழங்கப்பட்டது. அன்று தொட்டுத் தீபாவளி கொண்டாடப்படுகிறது.

நரகாசுரன் இறந்தபோது இருள் நீங்கியது; தேவர் முதலானோர் தாம் இழந்தவற்றை மீண்டும் பெற்றுக் களிப்படைந்தனர்; சிறைப்பட்டிருந்தவர்கள் விடுதலை பெற்று மகிழ்ச்சியோடு விளக்குகள் ஏற்றி வழிபாடு செய்தனர்; உலகம் ஒளிமயமாகத் திகழ்ந்தது.

நரகாசுரனின் அழிவையும் அதனால் தேவரும் மனிதரும் அடைந்த சுதந்திர வாழ்வையும் நினைவுகூருமுகமாகவே ஆண்டுதோறும் தீபாவளிப் பண்டிகை கொண்டாடப்படுகிறது. உண்மையில் மனிதனது மனதுக்குள் உள்ள தீய எண்ணங்கள் அசுரர் என்றும் நல்ல எண்ணங்கள் தேவர் என்றும் உருவகிக்கப்படுகின்றன. நம்மிடம் உள்ள தீய எண்ணங்களைப் போக்கி நல்ல எண்ணங்களை வளர்த்துக்கொள்வதே அர்த்தமுள்ள உண்மையான தீபாவளிக் கொண்டாட்டமாக அமையும்.

தீபாவளி தினத்தில் அதிகாலையில் எழுந்து, எண்ணெய் வைத்து, நீராடி, புதிய ஆடைகள் அணிந்து, இறைவனை வணங்கி, சுவையான உணவுகளை உற்றார் உறவினருடன் கூடி உண்டு மகிழ்கிறோம். ஒவ்வொருவரும் ஞானமாகிய ஒளியை அடைவதுதான் தீபாவளியின் தத்துவமாகும். நல்லெண்ணமாகிய எண்ணெயை நம் உடம்பிற் பூசுதல் வேண்டும். சித்தமாகிய அரப்பினால் அழுக்காறு, வெகுளி ஆகியவற்றைத் தேய்த்துப் போக்குதல் வேண்டும். ஞானமாகிய தூய உடைகளை உடுத்துப் புனிதமாக இருத்தல் வேண்டும். விளக்கேற்றிப் புற இருளை நீக்கும்பொழுது, எமது அக இருளும் நீங்க வேண்டும். அப்பொழுது நம்மை அறியாமலே நம் அகத்தில் ஒருவித ஒளி தோன்றும். நமக்கு என்றுமில்லாததோர் ஆனந்த நிலை உண்டாகும்.



## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. விரதங்களும் பண்டிகைகளும் எமக்கு எதைப் புலப்படுத்துகின்றன?
2. இந்துக்கள் கொண்டாடும் பண்டிகைகள் மூன்றினைக் குறிப்பிடுக.
3. விசேட நாட்களில் நாம் கைக்கொள்ளும் வழக்கங்கள் யாவை?
4. தீபாவளி என்பதன் பொருள் யாது?
5. தீபாவளி எப்போது கொண்டாடப்படுகிறது?
6. தீபாவளி எவ்வாறு கொண்டாடப்படுகிறது?
7. அசுரர், தேவர் என உருவகிக்கப்படுவன யாவை?
8. தீபாவளி உணர்த்தும் தத்துவம் யாது?

## செயற்பாடு

தீபாவளியுடன் தொடர்புடைய புராணக் கதையை நாடகமாக நடித்துக் காட்டுக.

# 7 திருமணச் சடங்கு



இந்துக்களாகிய எங்களது வாழ்க்கை சடங்குகளோடு பின்னிப் பிணைந்தது. ஒருவரது பிறப்பு முதல் தொடங்கும் சடங்கு, அவர் இறந்த பின்னரும் தொடருகின்றது. பிறப்பு முதல் இறப்பு வரை இடம்பெறும் சடங்குகள் - கிரியைகள் - பூர்வகிரியைகள் எனப்படும். இறப்பிற்கு பின்னர் இடம்பெறும் சடங்குகள் அபரகிரியைகள் எனப்பெறும்.

பூர்வகிரியைகளுள் அன்னப்பிராசனம், வித்தியாரம்பம், திருமணம் முதலியவை அடங்கும். ஈமக்கிரியை, சபிண்டீகரணம், அந்தியேட்டி, சிரார்த்தம் முதலியன அபர கிரியையுள் அடங்கும்.

பூர்வகிரியைகளுள் திருமணம் முக்கியமானதாகும். பிரமச்சரிய நிலையிலிருந்த ஒருவரை இல்லறத்திற் புக அங்கீகரிப்பதாக இச்சடங்கு அமைகிறது. திருமணக் கிரியைகள் இல்வாழ்க்கையில் இணையும் இருவருக்கும் வழிகாட்டுவனவாக அமைகின்றன.

பெற்றோர், தமது பிள்ளைக்குப் பொருத்தமான துணையைத் தேர்ந்தெடுத்து, சுபதினமொன்றில் பெரியோர் ஆசீர்வாதத்துடன் திருமணத்தை நிகழ்த்தி வைப்பர். மங்கல நீராட்டுதல், காப்புக் கட்டுதல், கன்னிகாதானம், மங்கலநாண் பூட்டுதல், மாலை மாற்றுதல், அக்கினி வலம்வருதல், அம்மி மிதித்தல், அருந்ததி பார்த்தல் என்று பல அம்சங்கள் திருமணக் கிரியையில் அடங்குகின்றன.

## பூர்வாங்க சம்பிரதாயங்கள்

திருமணப் பொருத்தம் உறுதியானதும், பெண்வீட்டார் மணமகன் வீட்டுக் கும் மணமகன் வீட்டார் பெண்வீட்டுக்கும் மங்கலப் பொருள்களுடன் சென்று திருமணத்தை நிச்சயம் செய்வர். தொடர்ந்து நடைபெறும் பொன்னுருக்கு வைபவம் முக்கியத்துவம் வாய்ந்தது. தாலி செய்வதற்கு நல்லநாள் பார்த்து மாப்பிள்ளை வீட்டில் ஆசாரி ஒருவரால் பொன்னுருக்கல் செய்யப்படும். மணமக்கள் வீடுகளில் கன்னிக்கால் நடுவர். இரு வீட்டார் வளவுகளிலும் ஈசானமூலையில் பெரியோர்களால் முள்முருக்கை மரம் நட்டு நவதானியம் இடப்படும்.

## திருமண சம்பிரதாயங்கள்

திருமண நாளன்று மணமகனுக்கும் மணமகளுக்கும் அவரவர் வீட்டில் பால், அறுகு வைத்து மங்கல நீராட்டல் இடம்பெறும். மணமகனை அலங்கரித்து மணக் கோலத்துடன் மணமகள் வீட்டுக்கு அழைத்து வருவர். மணமகள்வீட்டு வாசலில் பூரணகும்பம் வைத்து மங்கல ஆரத்தி எடுத்து மாலை சூட்டி அவரை வரவேற்பர். மாப்பிள்ளைத்தோழன் மணமகனின் காலில் நீர்வார்த்து மரியாதை செய்வார். மணமகன் தோழனுக்கு மோதிரம் அணிவித்து மரியாதை செய்வார்.

மங்கல வாத்தியங்கள் முழங்க மணமேடைக்கு அழைத்து வரப்படும் மணமகன் மணமேடையில் இடதுபுறமாக அமர்வார். திருமணக் கிரியைகளை மேற்கொள்ளும் சிவாச்சாரியார் சங்கற்பம் செய்வித்து, எடுத்தகாரியம் தடையின்றி நிறைவேற விநாயகரை வழிபாடு செய்து, மணமகனின் கையில் காப்புக் கட்டுவார். அதன்பின் மணமகளை அழைத்துவந்து மணமகனின் வலது புறத்தில் அமர்த்துவர். மணமகளுக்கும் காப்புக் கட்டப்படும்.

மணமக்களுக்குக் காப்புக்கட்டியபின் மணமக்களின் பெற்றோர் மண மேடைக்கு அருகில் வந்து அமர்வர். மணமகளின் பெற்றோர் தம் மகளை மணமகனிடம் ஒப்படைக்கும் சடங்கு இடம் பெறும். இதுவே கன்னிகாதானம் எனப்படும்.

பெரியவர்களின் ஆசீர்வாதம் பெறப்பட்ட மாங்கல்யம், கூறை, மாலை முதலான மங்கலப் பொருள்கள் கொண்ட தட்டினை மணமகன் மணமகளிடம் கையளிப்பார். மணமகள் கூறை மாற்றி வந்ததும் மணமகனின் வலதுபுறம் அமர்வார்.

சுபமுகூர்த்தத்தில் வேத மந்திரங்கள் ஒலிக்க, மங்கல வாத்தியங்கள் முழங்க, சபையோர் மலர்தூவி வாழ்த்த மணமகன் மணமகளின் வலதுபுறம் நின்று வடக்கு நோக்கி நின்று சிவசக்தியை நினைந்து மணமகளின் கழுத்தில் மாங்கல்யத்தைக் கட்டுவார்.

தாலி கட்டிய பின் அவர்களைச் சிவசக்தி ரூபமாக அமர்த்தி கிரியை நிகழ்த்துவர். சிவன் தனது இடப்பாகத்தை சக்திக்குக் கொடுத்துள்ளார் என்ற தத்துவத்தின் அடிப்படையிலேயே தாலி கட்டிய பின் மணமகளை மணமகனின் இடது பக்கமாக அமரச்செய்கிறார்கள்.



தொடர்ந்து மாலைமாற்றும் சடங்கும் பால், பழம் புசித்தலும் இடம்பெறும். அக்கினி சாட்சியாகக் கைப்பிடித்தல் என்பதை உணர்த்துமுகமாக மணமகன் மணமகளின் கையைப் பிடித்தபடியாக அக்கினியைச் சுற்றி மூன்றுமுறை வலம் வருவார். இவ்வாறு வலம்வரும்போது அம்மி மிதித்தல் சடங்கு இடம்பெறும். மணமகன் மணமகளின் காலை அம்மி மீது தூக்கி வைத்து விரலில் மெட்டி அணிவிப்பார். தொடர்ந்து அருந்ததி பார்த்தல் எனும் நிகழ்வு இடம்பெறும்.

வசிட்டமாமுனிவரின் மனைவியான நட்சத்திரமாக ஒளிர்ந்து கொண்டிருக்கும் அருந்ததியை வணங்கி இல்லறம் சிறக்க வேண்டும் என்று வேண்டுவர்.

மணமக்கள் மீண்டும் மணமேடைக்கு வந்து வெற்றிலை, பாக்கு, பழம் என்பவற்றை ஓமகுண்டத்தில் சொரிந்து வழிபாடு செய்வர். சிவாச்சாரியார் மந்திரம் கூறி வாழ்த்துவார். மணமக்கள் அவருக்குத் தட்சணை, தானம் கொடுத்து வணங்குவர். மணமக்கள் பெற்றோரை வணங்கி ஆசீர்வாதம் பெறுவர். சபையோர் அட்சதை

தூவி மணமக்களை வாழ்த்துவர். ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரூன்றி வாழ வாழ்த்திய அனைவருக்கும் இருவீட்டாரும் சேர்ந்து விருந்துபசாரம் செய்து மகிழ்வர். மணமக்கள் தம் குலதெய்வத்தை வணங்கும் பொருட்டு குடும்பத்தினர் சகிதம் ஆலயம் சென்று வழிபடுவர். தமது இல்லத்திற்குச் சென்று மன நிறைவோடு இல்வாழ்க்கையைத் தொடங்குவர்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. பூர்வகிரியை, அபரகிரியை என்பவற்றுக்கு இடையிலான வேறுபாடு யாது?
2. பூர்வகிரியைக்கும் அபரகிரியைக்கும் மும்மூன்று உதாரணம் தருக.
3. திருமணத்தை ஒட்டிய பூர்வாங்க சம்பிரதாயங்கள் எவை?
4. திருமணக் கிரியையில் இடம் பெறும் முக்கிய அம்சங்கள் யாவை?
5. மங்கல நாண் பூட்டிய பின், மணமகள் மணமகனின் இடது புறம் அமர்வதன் காரணம் யாது?
6. கன்னிகாதானம் எனப்படுவது யாது?
7. அக்கினியைச் சுற்றி மணமக்கள் வலம் வருவதற்கான காரணம் யாது?
8. ‘அருந்ததி பார்த்தல்’ ஏன் இடம் பெறுகிறது?

## செயற்பாடு

திருமணக் கிரியையில் அடங்கும் முக்கிய அம்சங்களைப் பட்டியற்படுத்தி அவை பற்றிய விளக்கக் குறிப்புக்களை எழுதுக.

# 8 வேதங்கள்

இந்து சமயம் பல உட்பிரிவுகளை உடையது. எமது நெறியாகிய சைவம் சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டது. அதுபோலவே திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்டது வைஷ்ணவம்; சக்தியை முழுமுதற் கடவுளாகப் போற்றுவது சாக்தம்; கணபதியை முழுமுதலாகப் போற்றுவது காணாபத்தியம்; குமரக்கடவுளை (முருகனை) முழுமுதற் பொருளாகப் போற்றுவது கௌமாரம்; சூரியனை முழுமுதலாகப் போற்றுவது சௌரம். இந்து சமயத்தின் இந்த ஆறு பிரிவுகளையும் சண்மதம் என்பர்.

இந்து சமயத்தின் முதல் நூல்களாகப் போற்றப்பெறுவன வேதங்களும் ஆகமங்களும். அவற்றுள் வேதங்கள் இந்து சமயத்தின் உட்பிரிவுகள் அனைத்துக்கும் பொதுவானவை. ஆதலால் அவை பொதுநூல் என்று வழங்கப்பெறுவன. ஆகமங்கள், அவ்வாறன்றி சைவம் முதலான உட்பிரிவு ஒவ்வொன்றுக்கும் வேறுவேறாக அமைபவை. அதனால் அவை சிறப்புநூல் என்று வழங்கப்பெறுகின்றன.

இந்த உண்மையை, திருமந்திரம் பின்வருமாறு கூறும்:

**வேதமோடு ஆகமம் மெய்யாம் இறைவன் நூல்**
**ஓதும் பொதுவும் சிறப்பும் என்று உன்னுக.**

## வேதங்கள்

இந்து சமயத்துக்கு ஆதாரமான திருநூல்கள் வேதங்களே. 'வேதம்' என்ற சொல்லின் பொருள் அறிவு என்பதாகும். மெய்யறிவைத் தருவன என்ற பொருளிலேயே வேதங்களை அச்சொல் சுட்டி நிற்கின்றது.

வேதங்கள் 'சுருதி' என்றும் சுட்டப்பெறும். 'சுருதி' என்றால் காதால் கேட்கப்படுவது என்று பொருள். சுருதி, இறைவனால் மெய்ஞானியருக்கு உபதேசிக்கப்பட்டது. அவர்களது ஞான பரம்பரை காலாதிகாலமாக வேதங்களை செவிவழியாகவே பேணி வந்தது. அவை எழுதப்படவில்லை. அதனால் வேதத்தை **எழுதாமறை** என்பர்.

வேதங்கள் இறைவனால் அருளப்பட்டவை; மனிதனால் படைக்கப்படாதவை. அதனால் அவற்றை **அபௌர்ஷேயம்** என்பர். அவை ரிஷிகளுக்கு உபதேசிக்கபட்ட நிலையான உண்மைகளைக் கொண்டவை. அதனால் அவற்றுக்கு அழிவில்லை; அவை நித்தியமானவை.

'ரிஷி' என்ற சொல் 'காண்' என்னும் பொருள் கொண்ட 'த்ருஷ்' என்ற சொல்லிலிருந்து பிறந்தது. 'ரிஷி' என்ற சொல்லின் பொருள் 'காண்பவன்' என்பதாகும். ரிஷிகள் உண்மைகளைக் கண்டு, கேட்டு உணர்ந்தவர்கள்.

இந்து சமயம் எந்த ஒரு நபரினாலும் உருவாக்கப்பட்டது அன்று. காலாதி காலமாக வெளிப்பட்ட உண்மைகளை ரிஷிகள் - ஞானியர்கள் கண்டுணர்ந்தார்கள். அந்த உண்மைகள் அவர்கள் உண்டாக்கி வெளிப்படுத்தியவை அல்ல. ரிஷிகள் கண்டுணர்ந்த ஆன்மிக உண்மைகள் அவர்களது ஞானபரம்பரையால் தொடர்ந்து பேணப்பட்டும் போதிக்கப்பட்டும் வந்தன.

வேதங்கள் நான்கு. அவை **இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்** எனப்படுகின்றன.

**இருக்குவேதம்** - இது வேதங்களுள் முதலாவதும் முக்கியமானதுமாகும். அதில் அடங்கும் மந்திரப் பாடல்கள் பல, ஏனைய வேதங்களிலும் இடம்பெறுகின்றன. இருக்கு என்பதற்குப் பாட்டு என்பது பொருள். பாட்டுக்களின் தொகுப்பாகிய இருக்கு வேதம் இருக்குவேத சங்கிதை எனப்படும் (சங்கிதை - தொகுப்பு). இருக்கு வேதசங்கிதையிலே காணப்படும் பாடல்கள் அக்கினி, இந்திரன், சூரியன், உருத்திரன், வாயு, வருணன், பிருதுவி, உஷை முதலான தெய்வங்களைப் புகழ்ந்து பாடுவன.

இருக்கு வேதப் பாடல்கள் இயற்கைக் கூறுகளைத் தெய்வ நிலைப்படுத்தி நோக்குகின்றன. அதனால் அங்கே பல தெய்வங்கள் பற்றிப் பேசப்படும். ஆயினும் பரம்பொருள் ஒன்று என்பதே வேதத்தின் முடிவு. 'உள்பொருள் ஒன்றே; அதனையே அறிந்தோர் பல பெயர்களால் வழங்குவர்' என்று பொருள்படும் சுலோகம் இருக்குவேதத்தில் இடம்பெறுகின்றது.

**யசுர்வேதம்** - வேள்வியில் ஓத வேண்டிய மந்திரங்களையும் கிரியைகளை ஆற்ற வேண்டிய முறை பற்றிய விளக்கங்களையும் கொண்டதாக அமைகின்றது.

**சாமவேதம்** - இசையோடு கூடிய பாடல்களைக் கொண்டது. அவை யாகத்தின்போது இசைக்கப்படுவன. சாமவேதம், ஒருவகையில் இசை நூலாகவும் கொள்ளத்தக்கது. அவ்வகையில் அதுவே காலத்தால் முந்திய இந்திய இசைநூல் எனலாம்.

**அதர்வணவேதம்** - நீண்ட ஆயுள், செல்வம், நோய்நீக்கம், பகைநீக்கம் முதலானவற்றைத் தரவல்ல மந்திரங்களின் தொகுப்பாக அமைகின்றது.

இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் ஆகிய வேதம் ஒவ்வொன்றும் நான்கு பகுதிகளை உடையது. அப்பகுதிகள் மந்திரங்கள், பிராமணங்கள், ஆரணியகங்கள், உபநிடதங்கள் எனப்படுவன.

**மந்திரங்கள்** - தெய்வங்களை நோக்கிப் பாடும் துதிப்பாடல்கள் ஆகும். தெய்வங்களிடம் இம்மை, மறுமை இன்பங்களை வேண்டுவனவாக அவை அமைகின்றன.

**பிராமணங்கள்** - யாகங்களின்போது மேற்கொள்ளவேண்டிய சடங்கு முறைகளை விளக்குவன.

**ஆரணியகங்கள்** - சடங்குகள் பற்றிய தத்துவ விளக்கங்களை உருவகக் கதைவடிவில் எடுத்துரைப்பன.

**உபநிடதங்கள்** - வேதங்களின் இறுதிப் பகுதியாக அமைவன. வேதங்களில் கூறப்படுகின்ற உண்மைகளின் முடிவாக விளங்குகின்றன. இந்த இரண்டு கருத்திலும் அவை 'வேதாந்தம்' (வேத+அந்தம்) என்றும் சுட்டப்பெறுகின்றன. மிக ஆழமான ஆன்மிக உண்மைகளை விளக்குவனவாக, ஓரிறைக்கோட்பாட்டை வலியுறுத்துவனவாக உபநிடதங்கள் அமைகின்றன. உண்மையில் உபநிடதங்களே இந்துமதத்தின் - இந்து தத்துவங்களின் அடிப்படையாக அமைகின்றன.

வேதங்களில் அடங்கியுள்ள விடயங்கள் மற்றொரு அடிப்படையில் மூன்று வகையாகப் பிரித்து நோக்கப்படுகின்றன. அப்பிரிவுகளாவன:

1. **கர்மகாண்டம்** - இது கிரியைகள், மத ஆசாரங்கள் பற்றிக் கூறும் பகுதியாகும். மந்திரங்களும் பிராமணங்களும் கர்ம காண்டத்தைச் சேர்ந்தவை.

2. **உபாசனாகாண்டம்** - தியானத்துக்கு உரிய விடயங்களை உள்ளடக்கியதாகும். ஆரணியகங்கள் இப்பகுதியைச் சேர்ந்தவை.

3. **ஞானகாண்டம்** - இது தத்துவ விளக்கங்களை உள்ளடக்கிய பகுதி எனலாம். உபநிடதங்கள் ஞானகாண்டத்தைச் சேர்ந்தவையே.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சண்மதம் என்றால் என்ன? சண்மதங்கள் யாவை?
2. இந்து சமயத்தின் முதனூல்கள் எவை? அவை பொது நூல், சிறப்பு நூல் எனப் பெயர் பெறுவதற்கான காரணம் யாது?
3. 'வேதம்' என்பதன் பொருள் யாது?
4. வேதங்கள் சுருதி எனவும் எழுதாமறை எனவும் அபௌர்ஷேயம் எனவும் பெயர் பெறுவதற்கான காரணம் யாது?
5. நான்கு வேதங்களும் எவை?
6. இருக்கு வேதம் புகழ்ந்துரைக்கும் தெய்வங்கள் யாவை?
7. யசுர் வேதத்தின் உள்ளடக்கம் எத்தகையது?
8. மந்திரங்களின் தொகுப்பாக அமைந்தது எது?
9. வேதங்களின் நான்கு பகுதிகளும் எவை?
10. வேதங்களின் மூன்று காண்டங்களும் யாவை?

## செயற்பாடு

வேதங்களை வகைப்படுத்தும் எண்ணக்கரு வரைபடம் ஒன்றைக் காட்சிப்படுத்துக.

# 9 திருமுறைகள்



சிவபிரானுடைய பெருமைகளைப் பேசும் அருட் பாடல்களின் தொகுப்பு **திருமுறை** எனப்படும். திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் முதல், சேக்கிழார் சுவாமிகள் வரையுள்ள இருபத்தேழு அருளாளர்களால் பாடப்பட்ட பனுவல்கள் திருமுறையில் அடங்கியுள்ளன. அவை பன்னிரண்டாக வகைப்படுத்தப் பட்டுள்ளன. திருமுறை இராஜராஜ சோழனின் விருப்பப்படி, நம்பியாண்டார் நம்பியால் தொகுக்கப்பட்டது. திருமுறை என்பது தெய்வத்தன்மை பொருந்திய நூல் எனப் பொருள்படும். திருமுறைப்பாடல்கள், பாடுவோரையும் கேட்போரையும் இறையுணர்வில் ஆழ்த்துபவை. திருமுறைப்பாடல்களைப் பண்ணுடன் பாடுவதால் எம்மிடம் மன அமைதி, ஆன்மிக உணர்வு ஆகியவை மேலோங்கும்; இம்மை மறுமை நலன்களோடு ஈற்றில் முத்திப்பேறும் கிட்டும். திருமுறைத் தொகுதியிலிருந்து சில திருப்பாடல்கள் இங்கு தரப்பட்டுள்ளன. அவற்றைப் பொருளுணர்ந்து ஓதுவோம்.

## தேவாரம் - சம்பந்தர்

திருஞானசம்பந்தப் பெருமான் திருமருகல் தலத்திற்குச் சென்று பெருமானை வழிபட்டார். அப்போது மருகற் பெருமான், திருச்செங்காட்டங்குடி கணபதீச் சரத்திலுள்ள திருக்கோலத்தைக் காட்டியருளினார். அந்த அருட்காட்சியைக் கண்டு திருஞானசம்பந்தப் பெருமான் பாடிய பதிகத்தில் அமைந்த ஒரு பாடல் இது. திருமருகற் பெருமானை நோக்கி ''கணபதீச்சரம் காமுறக் காரணம் என்ன?'' என்று வினவும் பாங்கில் இப்பதிகம் அமைந்துள்ளது.

தலம் : திருமருகலும் திருச்செங்காட்டங்குடியும் பண் : நட்டபாடை

திருச்சிற்றம்பலம்

அங்கமும் வேதமும் ஓது நாவர் அந்தணர் நாளும் அடிபரவ
மங்குல் மதி தவழ் மாடவீதி மருகல் நிலாவிய மைந்த சொல்லாய்
செங்கயல் ஆர்புனல் செல்வம் மல்கு சீர்கொள் செங்காட்டங்குடி அதனுள்
கங்குல் விளங்கெரி ஏந்தி ஆடும் கணபதீச்சரம் காமுறவே.

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை

வேதங்களையும், அவற்றின் அங்கங்களையும் ஓதுகின்ற நாவினை உடைய அந்தணர்கள், உமது திருவடிகளை எப்போதும் துதிக்க, வானத்தில் உள்ள சந்திரன் தவழுகின்ற மாடமாளிகைகள் நிறைந்த வீதியுள்ள திருமருகலில் உறையும் வல்லாளரே! கயல்மீன்கள் புரள்கின்ற நீர்வளமும் செல்வமும் நிறைந்த, சிறப்பு வாய்ந்த திருச்செங்காட்டங்குடியில் இரவிலே ஒளிவீசுகின்ற அனல் ஏந்தி ஆடும் கணபதீச்சரத்தை விரும்பியதற்கான காரணத்தைக் கூறுவீராக.

திருஞானசம்பந்தப் பெருமான் திருத்தல யாத்திரை செய்து, மீண்டும் பிரமபுரம் எனப்படும் சீர்காழியாகிய தமது பதிக்கு வந்தார். அங்கு வீற்றிருக்கும் இறைவனைத் தரிசித்த ஆனந்த மிகுதியால் பெருமானைப் பாடிய பதிகத்தில் அமைந்த ஒரு பாடல் இது.

தலம் : திருக்கழுமலம் (பிரமபுரம்)    பண் : பழம்பஞ்சுரம்

திருச்சிற்றம்பலம்

உற்றுமை சேர்வது மெய்யினையே உணர்வது நின்னருள் மெய்யினையே
கற்றவர் காய்வது காமனையே கனல்விழி காய்வது காமனையே
அற்றம் மறைப்பதும் உன் பணியே அமரர்கள் செய்வதும் உன்பணியே
பெற்று முகந்தது கந்தனையே பிரம புரத்தை உகந்தனையே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

இறைவா! உமாதேவியார் பிரியாது சேர்ந்திருப்பது உனது திருமேனியையே. ஞானிகள் உணர்வதும் உனது மெய்மையையே. கற்றுணர்ந்த துறவிகள் வெறுப்பது சிற்றின்பங்களையே. கனல் வீசுகின்ற உனது நெற்றிக் கண் எரித்தது மன்மதனையே. உனது மானத்தை மறைப்பது பாம்பே. தேவர்கள் செய்வது உனது தொண்டினையே. நீ பெற்று அணைத்தது முருகனையே. அத்தகைய நீ பிரமபுரத்தை விரும்பி உறைகின்றாய்.

இப்பாடலில் மெய், காமன், பணி என்னும் சொற்கள் சிலேடையாக இருபொருள் உணர்த்துகின்றன.

| | | |
|---|---|---|
| **மெய்** | - | திருமேனி, மெய்மை (உண்மைப் பொருள்) |
| **காமன்** | - | சிற்றின்பம், மன்மதன் |
| **பணி** | - | பாம்பு, தொண்டு |

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருமுறை என்பதன் பொருள் யாது?
2. திருமுறைகளைத் தொகுத்தவர் யார்? தொகுப்பித்தவர் யார்?
3. திருமருகலில் சம்பந்தர் கண்ட காட்சி யாது?
4. 'உற்றுமை சேர்வது…' எனும் தேவாரத்தில் இறைவனின் சிறப்பு எவ்வாறு எடுத்துரைக்கப்பட்டுள்ளது?
5. 'பிரமபுரம்' வேறு எப்பெயர்களால் அழைக்கப்படுகிறது?

## தேவாரம் - அப்பர்

திருநாவுக்கரசர் சிதம்பரத்திற்கு யாத்திரை செய்தார். அங்கே நடராசப் பெருமானின் அருட்கோலத்தைக் கண்ணுற்றார். அந்தப் பூரிப்பில் திருப்பதிகம் பாடியருளினார். அப்பதிகத்தில் உள்ள ஒரு பாடல் வருமாறு:

தலம் : சிதம்பரம்

திருச்சிற்றம்பலம்

குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால்வெண்ணீறும்
இனித்தம் உடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
மனித்தப்பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

வளைந்த புருவங்களையும், கொவ்வைப் பழம் போன்ற வாயில் புன்சிரிப்பினையும், குளிர்ச்சியான சடையினையும், பவளம் போன்ற மேனியில் பால் போன்ற வெண்ணீற்றையும் பேரின்பத்தைத் தருகின்றதும் பொன்மயமானதுமான தூக்கிய திருவடியையும் காணும் பேறு கிடைத்தால் (வேண்டாம் என ஒதுக்கத்தக்க) மனிதப் பிறவியும் வேண்டியதேயாகும்.

சைவசமயத்திலிருந்து சமணசமயத்துக்கு மாறிய மருணீக்கியாரை சூலைநோய் கொடுத்து ஆட்கொண்டருளினார் சிவபெருமான். மருணீக்கியார் சைவத்துக்கு மீண்டார். இறைவனைப் புகழ்ந்து பதிகங்கள் பாடி திருநாவுக்கரசர் என்னும் பெயர் பெற்றார். சமணர்கள் அவர்மேல் கோபம் உற்றனர். திருநாவுக்கரசரை தண்டிக்க வேண்டும் என்று அரசனிடம் கூறினர். அரசன் அமைச்சரிடம் அவரை அழைத்து வருமாறு கட்டளை இட்டார். திருநாவுக்கரசர் ஒரு பதிகத்தின் வாயிலாக அரசனின் அழைப்பை மறுத்துரைத்தார். அப் பதிகத்தில் அமைந்த ஒரு பாடலே இது.

திருச்சிற்றம்பலம்

நாம் ஆர்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணி அறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை
தாம் ஆர்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற் சங்க வெண்குழை ஓர் காதிற்
கோமாற்கே நாம் என்றும் மீளா ஆளாய்
கொய்ம்மலர்ச் சேவடி இணையே குறுகினோமே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

நாம் யாருக்கும் அடிமை அல்லர்; இயமனுக்கும் அஞ்சமாட்டோம்; நரகத்துன் பமும் எமக்கு இல்லை; வேறு துன்பங்களும் எமக்கு இல்லை; என்றும் மகிழ்ந்திருப்போம்; பிணி அறியோம்; யாருக்கும் பணிய மாட்டோம்; எமக்கு எக்காலத்திலும் இன்பமே அன்றித் துன்பம் இல்லை; தாம் யாருக்கும் கீழ்ப்படாத தன்மையரும் அடியார்களுக்கு சுகத்தை செய்பவரும் (சங்கரனும்) தனது ஒரு காதிலே குழை அணிந்தவருமாகிய அத்தலைவருக்கே நாம் மீளா அடிமையானோம். கொய்த மலர்களால் அர்ச்சிக்கப்படுகின்ற அவருடைய திருவடிகளையே அடைந்தோம்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. அப்பர்பெருமான் சிதம்பரத்தில் இறைவனது எக்கோலத்தைத் தரிசித்து மகிழ்ந்தார்?
2. அக்கோலத்தினை அப்பர்பெருமான் எவ்வாறு வருணித்துப் பாடியுள்ளார்?
3. சமணர்கள் அப்பர்பெருமான்மீது கோபமுற்றமைக்கான காரணம் யாது?
4. அப்பர்பெருமான், அரசனின் அழைப்பை எவ்வாறு மறுத்துரைத்தார்?

## தேவாரம் - சுந்தரர்

சுந்தரமூர்த்தி நாயனார், சங்கிலியாரைப் பிரியேன் எனச் செய்த சத்தியத்தை மீறி அவரைப் பிரிந்து திருவொற்றியூரை விட்டு அகன்றார். சத்தியத்தை மீறிய சுந்தரர் கண்பார்வை இழந்தார். அந்நிலையில் திருப்புன்கூர்ப் பெருமானை வேண்டிப் பாடிய பதிகத்தில் உள்ள ஒரு பாடல் இது.

தலம் - திருப்புன்கூர் பண் - தக்கேசி

திருச்சிற்றம்பலம்

அந்தணாளன் உன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரணமாக
வந்த காலன்தன் ஆருயிர் அதனை
வவ்வினாய்க்கு உன்தன் வண்மைகண்டு அடியேன்
எந்தை நீ எனை நமன் தமர் நலியில்
இவன் மற்(று) என் அடியான் என விலக்கும்
சிந்தையால் வந்து உன் திருவடி அடைந்தேன்
செழும் பொழில் திருப்புன்கூர் உளானே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

*செழிப்பான சோலைகள் சூழ்ந்த திருப்புன்கூரில் எழுந்தருளியிருக்கும் பெருமானே! உன்னை அடைக்கலமாக அடைந்த (மார்க்கண்டேயன் என்னும்) அந்தணனைக் காப்பதற்காக, அவனது உயிரை எடுக்க வந்த இயமனுடைய உயிரையே எடுத்த உன்னுடைய அந்த பெருந்தன்மை வாய்ந்த குணத்தைக் கண்டு, என் தந்தையாகிய நீ, இயமதூதர்கள் வந்து என்னை வருத்துகிற வேளையிலும் ''இவன் என் அடியவன்'' என்று தடுப்பாய் என்ற நம்பிக்கையில் உனக்கு அடிமையாக, உன் திருவடியை வந்தடைந்தேன்.*

*சத்தியத்தை மீறியதால் இரண்டு கண்ணையும் இழந்த சுந்தரர் திருவேகமச் சத்தில் இடக்கண் பெற்று, திருத்துருத்தியில் உடற்பிணி நீங்கித், திருவாரூரை வந்தடைந்தார். திருவாரூர் மூலட்டானரை வணங்கி 'மற்றைக்கண் தாரீர்' என இரந்து வேண்டி வலக்கண்ணையும் மீளப்பெற்றார். அப்போது அவர் பாடிய பதிகத்தில் அமைந்த ஒரு பாடல் இது.*

தலம் - திருவாரூர் பண் - செந்துருத்தி

திருச்சிற்றம்பலம்

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தால் மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங்கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

*திருவாரூரில் வீற்றிருப்பவரே! பிறர் எவரையும் நாடாது, உமக்கே நிரந்தர அடிமைபூண்டு ஆட்பட்டிருக்கும் அடியவர்கள், மூண்டு எரியாத நெருப்புப் போல (வெளிப்படக் காட்டாது) உள்ளே மனம் வருத்தி, மிகவும் முகம்வாடி, தங்கள் துன்பத்தை எடுத்துரைக்கும்போது, (அதற்குப் பரிகாரமாக) எதுவும் செய்யாது இருப்பவரே! நீர் நன்கு வாழ்ந்து போவீராக!*

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. *சுந்தரர் கண்பார்வையை இழந்தமைக்கான காரணம் யாது?*
2. *'அந்தணாளனுன்...' என்ற தேவாரம் எத்தலத்தின் மீது பாடப்பட்டது?*
3. *இத்தேவாரத்தில் இடம்பெறும் புராணக்கதை எது?*
4. *சுந்தரர் தமது கண்பார்வையை மீளப் பெற்றுக் கொண்ட தலங்களைக் குறிப் பிடுக.*
5. *'மீளா அடிமை' எனும் தேவாரத்தில் அடியார்கள் படும் துன்பம் எவ்வாறு எடுத்துரைக்கப்பட்டுள்ளது?*

## திருவாசகம் - மாணிக்கவாசகர்

*சீகாழி என்னும் தோணிபுரத்தில் அருளிச் செய்யப்பட்டது. இறைவனைச் சிக்கெனப்பற்றிப் பிடித்தமையைக் கூறும் பாடல்கள் பத்தினைக் கொண்டமைந்ததால் பிடித்த பத்து எனப்படலாயிற்று.*

தலம் : சீகாழி

திருச்சிற்றம்பலம்

**பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்**
**பரிந்து நீ பாவியேனுடைய**
**ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி**
**உலப்பிலா ஆனந்தமாய**
**தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த**
**செல்வமே சிவபெருமானே**
**யான் உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்**
**எங்கு எழுந்தருளுவது இனியே.**

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை

*(குழந்தையின் பசியை) நினைந்து (குழந்தை கேட்பதன்முன் தானாகவே) பால் ஊட்டுகின்ற தாயைவிட மிகவும் இரங்கி, பாவியாகிய என்னுடைய உடம்பை உருகச் செய்து, உள்ளே (ஞானமாகிய) ஒளியைப் பெருகச் செய்து, அழிவற்ற பேரின்பமாகிய தேனைச் சொரிந்து, என்பின்னே தொடர்ந்து திரிந்த என் செல்வமே! சிவபெருமானே! நான் உன்னைத் தொடர்ந்து இறுகப்பற்றிக் கொண்டேன். இனி நீ என்னைவிட்டு எங்கே செல்வாய்? (என்னை விட்டு உன்னால் விலக முடியாது).*

தலம் : தில்லை

திருச்சிற்றம்பலம்

தந்தது உன்தன்னை கொண்டது என்தன்னை
சங்கரா ஆர் கொலோ சதுரர்
அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்
யாது நீ பெற்றதொன்று என்பால்
சிந்தையே கோயில் கொண்ட எம் பெருமான்
திருப்பெருந்துறை உறை சிவனே
எந்தையே ஈசா உடல் இடம் கொண்டாய்
யான் இதற்கு இலன் ஓர் கைம்மாறே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

*என் மனதையே கோயிலாகக் கொண்ட எம்பெருமானே! திருப்பெருந்துறையில் எழுந்தருளியுள்ள சிவனே! என் தந்தையே! ஈசனே! என் உடலையே இடமாகக் கொண்டவனே! உன்னை எனக்குத் தந்தாய் (அதற்குப் பதிலாக) என்னை உன்னுடையனவாக்கிக் கொண்டாய். (இந்தக் கொள்ளல் கொடுத்தலில்) யார் கெட்டிக்காரர்? (நானே!). நான் எல்லையில்லாத இன்பம் எய்தப்பெற்றேன்! நீ என்னிடமிருந்து எதனைப் பெற்றுக் கொண்டாய்? (ஒன்றும் இல்லை!). இதற்கு என்னிடம் எந்தப் பிரதி உபகாரமும் இல்லையே!*

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. 'பால்நினைந்தூட்டும்' என்ற திருவாசகம் இடம்பெறும் பதிகம் யாது?

2. அப்பதிகம் அப்பெயர் பெற்றமைக்கான காரணம் யாது?

3. இறைவனது கருணைத்திறத்தை எடுத்துரைக்கும் அடி எது?

4. 'சங்கரா ஆர்கொலோ சதுரர்' என்ற தொடரை விளக்குக.

5. மணிவாசகர் இவ்வாறு கேட்டமைக்கான காரணம் யாது?

## திருவிசைப்பா - சேந்தனார்

திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பன ஒன்பதாம் திருமுறையுள் அடங்குகின்றன. திருவிசைப்பாப் பதிகங்கள் சேந்தனார், திருமாளிகைத்தேவர் முதலான ஒன்பது அருளாளர்களாற் பாடியருளப்பட்டன. திருப்பல்லாண்டு சேந்தனாரால் அருளப்பட்டது.

தலம் : திருவீழிமிழலை பண் : பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை
கரையிலாக் கருணை மாகடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கை
செற்றவர் புரங்கள் செற்ற எம் சிவனை
திருவீழிமிழலை வீற்றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டு கண்டு உள்ளம்
குளிர என் கண் குளிர்ந்தனவே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

(ஞான நூல்களைக்) கற்றறிந்தவர்கள் (பேராவலோடு) விழுங்கும் கற்பகக் கனியாக இருப்பவரை, எல்லையில்லாத பெரும் கருணைக் கடலானவரை, (மெய்ஞான நூல்களைக் கல்லாதவர்கள் அல்லது) பிறர் அறிந்து கொள்ள முடியாத மாணிக்க மலை போன்றவரை, மதித்து வழிபடுவர்களது மனதில் தூண்டாமணி விளக்குப்போல பிரகாசிப்பவரை, கோபித்தவர்களது (அசுரர்களது) முப்புரங்களையும் அழித்த பெருமானை, திருவீழிமிழலையில் எழுந்தருளியிருக்கும் பெருமானைக் கண்டு என்மனம் குளிர, கண்களும் குளிர்ந்தனவே.

## திருப்பல்லாண்டு - சேந்தனார்

தலம் - கோயில் பண் - பஞ்சமம்

திருச்சிற்றம்பலம்

பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிட
பாற்கடல் ஈந்த பிரான்
மாலுக்கு சக்கரம் அன்று அருள் செய்தவன்
மன்னிய தில்லைதன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற
சிற்றம்பலமே இடமாகப்
பாலித்து, நட்டம் பயில வல்லானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

(வியாக்கிரபாதர் என்னும் முனிவரது மகனான உபமன்யு என்னும்) பாலகன் பால் வேண்டி அழுதபோது, அவனுக்கு திருப்பாற்கடலையே அழைத்து உண்ணக் கொடுத்த பெருமானும், திருமாலுக்குச் சக்கரப் படையைக் கொடுத்தருளிய பெருமானும், நிலைபெற்ற தில்லை என்னும் திருப்பதியில் வேதங்களை இடையறாது ஓதுகின்ற அந்தணர்கள் வாழ்கின்ற தில்லைச் சிற்றம்பலத்தையே தனது இடமாகக் கொண்டு ஆனந்தத் தாண்டவம் ஆடுபவனும் ஆகிய சிவபெருமானைப் போற்றிப் புகழ்ந்து 'பல்லாண்டு வாழ்க' என வாழ்த்து வோமாக.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருவிசைப்பா பாடியோர் எத்தனை பேர்?

2. திருவிசைப்பா, திருப்பல்லாண்டு - இரண்டையும் பாடியவரின் பெயரைக் குறிப்பிடுக.

3. சேந்தனார், இறைவனை எவ்வாறெல்லாம் உருவகித்துப் பாடியுள்ளார்?

4. இறைவன் பாற்கடலை அளித்தமைக்கான காரணம் யாது?

5. 'பாலுக்குப் பாலகன்' எனும் திருப்பல்லாண்டுப் பாடலில் சிற்றம்பலம் எவ்வாறு சிறப்பிக்கப்படுகிறது?

## திருமந்திரம் - திருமூலர்

திருச்சிற்றம்பலம்

யாவர்க்குமாம் இறைவற்கு ஒரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவிற்கு ஒரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே.

திருச்சிற்றம்பலம்

### பொழிப்புரை

இறைவனுக்கு ஒரு பச்சிலை இட்டு அவரை வணங்குதல் யாவருக்கும் இலகுவாகச் செய்யக்கூடிய புண்ணியச் செயலாகும். பசுவுக்கு ஒருபிடி புல்லைக் கொடுத்தல் யாவரும் செய்யக்கூடிய நற்செயலாகும். பசித்து வந்தோர்க்கு இன்னார், இனியார் என்று பாராமல் ஒரு பிடி உணவு கொடுத்தல் யாவரும் இலகுவாகச் செய்யக் கூடிய நற்செயலாகும். பிறருடன் இனிய வார்த்தைகளைப் பேசுதல் யாவரும் இலகுவாகச் செய்யக் கூடிய நற்செயல் ஆகும்.

## மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை - கபிலதேவர்

பதினோராம் திருமுறை அருளாளர் பன்னிருவராற் பாடப்பட்ட திருமுருகாற்றுப்படை, திருவாலங்காட்டுத் திருப்பதிகங்கள், பொன்வண்ணத்தந்தாதி, திருத்தொண்டர் திருவந்தாதி முதலான நாற்பது பிரபந்தங்களின் தொகுதியாக அமைகின்றது. அவற்றுள் கபிலதேவ நாயனாரால் பாடப்பட்ட திருவிரட்டை மணிமாலையில் உள்ள ஒரு பாடல் இது.

திருச்சிற்றம்பலம்

**விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்**
**விநாயகனே வேட்கை தணிவிப்பான் - விநாயகனே**
**விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்**
**கண்ணிற் பணிமின் கனிந்து.**

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

விநாயகப் பெருமானே நாம் செய்த கொடிய வினையின் பயனை அடியோடு போக்கவல்லவன். விநாயகனே எம்மிடமுள்ள ஆசைகளைத் தீர்க்க வல்லவன். மண்ணுலகம் விண்ணுலகம் என்பவற்றுக்கும் அவனே தலைவனாக உள்ளான். ஆதலால் அவனை கண்போலக் கருதி அன்போடு போற்றிப் பணியுங்கள்.

## பெரியபுராணம் - சேக்கிழார்

சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய திருத்தொண்டத் தொகையில் குறிப்பிட்ட அடியார்களின் வரலாறுகளை விரித்து, சேக்கிழார் பாடிய காவியமே பெரியபுராணம் என வழங்கும் திருத்தொண்டர் புராணம்.

காவிய மரபுக்கேற்ப நாட்டுச் சிறப்பு நகரச் சிறப்புக்களையும் பெரியபுராணத் தின் தொடக்கத்தில் சேக்கிழார் பாடியுள்ளார். இப்பாடல் திருவாரூர் நகரச் சிறப்புக் கூறும் பகுதியில் மனுநீதி கண்ட சோழனின் நடுநிலை தவறா நீதியைக் கண்டு அவனுக்கு இறைவன் காட்சிகொடுத்து அருளியவாற்றைக் கூறுகின்றது.

திருச்சிற்றம்பலம்

தண்ணளி வெண்குடை வேந்தன் செயல்கண்டு தரியாது
மண்ணவர் கண்மழை பொழிந்தார் வானவர் பூமழை சொரிந்தார்
அண்ணலவன் கண்ணெதிரே அணிவீதி மழவிடைமேல்
விண்ணவர்கள் தொழ நின்றான் வீதிவிடங்கப்பெருமான்.

திருச்சிற்றம்பலம்

## பொழிப்புரை

மனுநீதிகண்ட சோழனின் நீதித் திறத்தைக் கண்டு தாங்கமுடியாத வர்களாய் மக்கள் மனம் நெகிழ்ந்து கண்ணீர் பெருக்கினார்கள். தேவர்கள் மலர்மழை பொழிந்தார்கள். அப்போது அப்பெருந்தகையோனான மனுநீதிகண்ட சோழனின் கண்முன்னே, தேவர்கள் வழிபடும்படியாக, வீதிவிடங்கப் பெருமான் (திருவாரூர் இறைவன்) இடபாரூடராகக் காட்சி கொடுத்தருளினான்.

## பயிற்சி-6

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருமந்திரப்பாடல் விளக்கிநிற்கும் புண்ணியச்செயல்கள் எவை?
2. பதினோராம் திருமுறையுள் அடங்கும் நூல்கள் மூன்றைக் குறிப்பிடுக.
3. விநாயகரைப் பணிவதால் கிட்டும் நன்மைகள் எவை?
4. அடியார் வரலாற்றை விரித்துரைக்கும் நூல் எது?
5. தண்ணளி வெண்குடை வேந்தன் யார்? அவனது எச்செயல் இங்கு போற்றப் பட்டுள்ளது?

## செயற்பாடு

1. திருமுறைகளைப் பண்ணுடனும் பக்தியுடனும் ஓதுக.
2. வரிக்கிரமமாக எழுதி, பொருள் தருக.
3. மேற்தரப்பட்ட திருமுறைப் பாடல்களில் காணப்படும் புராணக் குறிப்புகளை விரித்தெழுதுக.

# 10 திருக்கூட்டச் சிறப்பு



## அறிமுகம்

பெரியபுராணம் எனப்படும் திருத்தொண்டர் புராணம் அநபாயச் சோழனது முதலமைச்சராய் இருந்த சேக்கிழாரால் அருளப்பட்டதாகும். இப்புராணம் பன்னிரண்டாம் திருமுறையில் அமைந்துள்ளது. அறுபத்துமூன்று தனிஅடியார்களதும் ஒன்பது தொகையடியார்களதும் வரலாற்றையும் சிறப்புகளையும் கூறுகின்றது. 4286 விருத்தப்பாக்களால் அமைந்த இந்நூல் இரண்டு காண்டங்களையும் அவற்றுள் அடங்கும் பதின்மூன்று சருக்கங்களையும் கொண்டது.

பெரியபுராணத்தின் முதற் பகுதியாகிய திருமலைச் சருக்கத்தில் முதலிற் பாயிரமும் அடுத்து திருமலைச் சிறப்பு, திருநாட்டுச் சிறப்பு, திருநகரச் சிறப்பு, திருக்கூட்டச் சிறப்பு, தடுத்தாட்கொண்ட புராணம் என்பனவும் இடம்பெறுகின்றன.

*திருக்கூட்டச் சிறப்பில் சிவனடியார்களின் அளவற்ற பெருமைகள் விரித்துரைக்கப்பட்டுள்ளன. அடியார்கள் புறத்தூய்மையும், அகத்தூய்மையும் மிக்கவர்கள்; அவர்கள் இன்ப துன்பங்களின் பாதிப்போ, பொன் பொருளில் நாட்டமோ இல்லாதவர்கள்; இறைதொண்டையே தமது கடமையாகக் கொண்டவர்கள் என்று சேக்கிழார் பாடியுள்ளார். இங்கு திருக்கூட்டச் சிறப்பு பாடல்களையும் அவற்றின் பொருளையும் நோக்குவோம்.*

(1) **பூத நாயகர் புற்றிடம் கொண்டவர்**
**ஆதி தேவர் அமர்ந்த பூங்கோயிலில்**
**சோதி மாமணி நீள்சுடர் முன்றில்சூழ்**
**மூதெயில் திருவாயில் முன்னாயது.**

*பூதங்கட்கெல்லாம் நாயகரும், திருவாரூரில் புற்றின்மீது பேரொளி வடிவாய் வீற்றிருப்பவரும், ஆதிதேவனும் ஆகிய எம் பெருமானது கோயிலில், ஒளிபரக்கும் பெருமணிகளின் நீண்ட சுடருடன் பிரகாசிக்கும் திருமுற்றத்தினைச் சூழ்ந்து விளங்கும் பழமைவாய்ந்த மதிற்புறத்து முன்னாக உள்ளது (ஓர்மண்டபம். அதுதான்...)*

(2) **பூவார் திசைமுகன் இந்திரன் பூமிசை**
**மா வாழ் அகலத்து மால் முதல் வானவர்**
**ஓவாது எவரும் நிறைந்து உறைந்துள்ளது**
**தேவாசிரியன் எனும் திருக்காவணம்.**

*தாமரைப்பூமீது விளங்கும் பிரமன், இந்திரன், தாமரைப் பூமேல் இருக்கும் இலக்குமி வாழும் மார்பினையுடைய திருமால் முதலான தேவர்கள் எல்லாரும் நிறைந்து தங்கியிருப்பது தேவாசிரியன் என்னும் (அந்த) திருமண்டபம்.*

(3) **அரந்தை தீர்க்கும் அடியவர் மேனிமேல்**
**நிரந்த நீற்றொளியால் நிறை தூய்மையால்**
**புரந்த அஞ்செழுத்து ஓசை பொலிதலால்**
**பரந்த ஆயிரம் பாற்கடல் போல்வது.**

*எல்லாத் துயரையும் போக்கவல்ல அடியார்கள் தங்கள் மேனிமேல் நிறையப் பூசிய திருநீற்றின் ஒளியாலும், நிறைகின்ற அகத் தூய்மையாலும், எதனையும் காக்க வல்ல ஐந்தெழுத்தின் ஓசை அம்மண்டபத்தில் பொலிதலாலும், அந்த தேவாசிரிய மண்டபம் ஒன்றாய்ப் பரந்து விளங்கும் ஆயிரம் பாற்கடல் போன்றது.*

**(4) அகில காரணர் தாள் பணிவார்கள்தாம்**
**அகில லோகமும் ஆளற்குரியர் என்று**
**அகில லோகத்துளார்கள் அடைதலின்**
**அகில லோகமும் போல்வது அதனிடை.**

*அனைத்துக்கும் மூலகாரணராய எம்பெருமானுடைய திருவடியைத் தொழுப வர்களே இந்த அகில உலகையும் ஆண்டுகொள்ள உரிமை உடையவர்கள் என்று, தேவாசிரிய மண்டபத்தில் இருக்கின்ற அடியார்களை தரிசித்தற்காக அகில உலகத்திலும் இருப்பவர்களும் வந்தடைவதால் அந்த தேவாசிரிய மண்டபம் அகில உலகமும் போன்று விளங்குகின்றது. அம்மண்டபத்தில்...*

**(5) அத்தர் வேண்டி முன் ஆண்டவர் அன்பினால்**
**மெய்த்தழைந்து விதிர்ப்புறு சிந்தையார்**
**கைத் திருத்தொண்டு செய் கடப்பாட்டினார்**
**இத்திறத்தவர் அன்றியும் எண்ணிலார்.**

*(இவ்வணம் தேவாசிரிய மண்டபத்தில் உறைந்திடும் அடியார்கள்) எம்பெரு மானால் விரும்பி ஆண்டுகொள்ளப் பெற்றவர்களும் அன்பினால் உடல் பூரித்துப் பரவசமுறும் சிந்தையுடையவர்களும் தமது திருக்கைகளால் எம்பெருமானுக்கு திருத்தொண்டு செய்யும் கடப்பாடு உடையவர்களுமாய இத்தகையவர்கள் மாத் திரமன்றி இன்னமும் எண்ணில்லாதவர்கள்.*

**(6) மாசிலாத மணிதிகழ் மேனிமேல்**
**பூசு நீறுபோல் உள்ளும் புனிதர்கள்**
**தேசினால் எத்திசையும் விளக்கினார்**
**பேச ஒண்ணாப் பெருமை பிறங்கினார்.**

*இந்த திருக்கூட்டத்து அடியார்கள் மாசு இலாத அழகிய திருமேனியில் பூசுகின்ற வெண்ணீறு போன்று உள்ளமும் தூய்மையானவர்கள். தங்களது அருளொளியால் எல்லாத் திக்கிலும் உண்மை ஒளி பிரகாசிக்கும்படி செய்தவர்கள். இவர்கள் எம்மால் எடுத்துரைக்க முடியாத பெருமை விளங்கப் பெற்றவர்கள்.*

(7) **பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும்**
**மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார்**
**ஓது காதல் உறைப்பின் நெறிநின்றார்**
**கோதிலாத குணப்பெருங் குன்றனார்.**

*மண், நீர், நெருப்பு, காற்று, வானம் எனும் ஐந்தும் தமது முன்னைய நிலை கெட்டுக் கலங்கினாலும் உமையம்மையை ஒரு பாகத்திற் கொண்டவரான பெருமானின் மலர்போலும் திருவடிகளை மறவாதவர்கள். புகழ்ந்துரைக்கப்படுகின்ற அன்பு நெறியிலே உறுதியோடு நிற்பவர்கள். எத்தன்மையான குறைபாடுமிலாத நற்குணமாகிய பெருமலையை ஒத்தவர்கள்.*

(8) **கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்**
**ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்**
**கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி**
**வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.**

*(அவர்கள்) அழிதலும், வளர்தலும் அற்ற நிலையான செல்வம் உடையவர்கள். உடைந்த மட்பானையின் ஓட்டையும் பொன்னையும் ஒன்றாகவே மதிப்பவர்கள். மேலும் மேலும் வளரும் அன்பினால் இறைவனை கும்பிடுதலேயின்றி முத்தியின்பமாகிய வீடுபேற்றுக்கும் ஆசைப்படாத வீரம் உடையவர்கள்.*

(9) **ஆரம் கண்டிகை ஆடையும் கந்தையே**
**பாரம் ஈசன் பணிஅல தொன்றிலார்**
**ஈர அன்பினர் யாதும் குறைவிலார்**
**வீரம் என்னால் விளம்பும் தகையதோ?**

*(அவர்களுக்கு) மாலை உருத்திராக்கமே; ஆடை கத்தைத்துணியே; பொறுப்புவாய்ந்த கடமை இறைவனது தொண்டு அல்லாது வேறு எதுவும் இல்லை; (அவர்கள்) கசிவான அன்பினை உடையவர்கள்; எந்தக் குறையும் இல்லாதவர்கள்; (அத்தகையவர்களின்) திடசித்தம் என்னால் எடுத்துரைக்கத் தக்கதோ? (இல்லை).*

(10) **வேண்டுமாறு விரும்புறும் வேடத்தர்**
**தாண்டவப் பெருமான் தனித் தொண்டர்கள்**
**நீண்ட தொல்புகழார்தம் நிலைமையை**
**ஈண்டு வாழ்த்துகேன் என் அறிந்து ஏத்துகேன்.**

*(இந்தத் திருக்கூட்ட அடியார்கள் தம் திருவருட் செயலால்) வேண்டியபடியே விரும்புகின்ற வேடம் கொண்டவர்கள். நடராசப்பெருமானுடைய ஒப்பற்ற தொண்டர்கள். இவர்கள் எக்காலமும் அழிவின்றி நிலைத்திருக்கும் பழம்பெரும் புகழினை உடையவர்கள். இவர்கள் பெருமையை வாழ்த்துவேனே அல்லாமல் இவர்களது சிறப்பினை எவ்வாறு அறிந்து பாடித் துதித்திடப் போகின்றேன்!*

(11) **இந்த மாதவர் கூட்டத்தை எம்பிரான்**
**அந்தம் இல்புகழ் ஆலால சுந்தரன்**
**சுந்தரத் திருத் தொண்டத் தொகைத் தமிழ்**
**வந்து பாடிய வண்ணம் உரைசெய்வாம்.**

*இப்படியான பெருமைமிக்க தவத்தினை உடையோரது திருக்கூட்டத்தை எமது தலைவரும் அளவற்ற புகழுக்கு உரித்துடையவருமாகிய ஆலால சுந்தரன் (சுந்தரமூர்த்தி நாயனார்) திருத்தொண்டத்தொகை எனும் தமிழ்ப் பதிகத்தில் பாடியருளியவாற்றை எடுத்துரைப்போம்.*

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருக்கூட்டச் சிறப்பு என்றால் என்ன?
2. தேவாசிரியன் மண்டபம் எங்கே உள்ளது?
3. சிவனடியார்களின் தோற்றப் பொலிவை சுருக்கமாக விளக்குக.
4. சிவனடியார்களின் சிறந்த பண்புகளைப் பட்டியற்படுத்துக.
5. தேவாசிரியன் மண்டபச் சிறப்பை எடுத்துரைக்குக.
6. திருத்தொண்டர் தொகை என்னும் பதிகம் யாரால் பாடப்பட்டது?
7. தேவாசிரிய மண்டபம் ஆயிரம் பாற்கடல்போல ஒளிவீசுவதன் காரணம் யாது?
8. அது அகில உலகமும்போல் தோற்றமளிப்பதன் காரணம் யாது?

## செயற்பாடு

1. திருக்கூட்டச் சிறப்பு பற்றி சேக்கிழார் கூறியவற்றினைத் தொகுத்து எழுதுக.
2. சிவனடியார் பெருமைபற்றிய உரை ஒன்றினைத் தயாரித்து வகுப்பறையில் பேசுக.

# 11 திலகவதியார்



சைவ சமயத்துக்கு தொண்டாற்றியவர்களுள் திலகவதியாரும் ஒருவர். சைவ மரபில் சமய குரவர்களாக போற்றப்பெறும் நால்வருள் ஒருவரான திருநாவுக்கரசரின் தமக்கையாராக இருந்து, அவரை நெறிப்படுத்தியவர் அவர்.

திருமுனைப்பாடி நாட்டிலே திருவாமூர் என்ற ஊரிலே புகழனாரும் மாதினியாரும் நடாத்திய இல்லறத்தின் பயனாக அவர்களுக்குப் புதல்வியாக திலகவதியார் பிறந்தார். சில ஆண்டுகளின்பின் அவர்களுக்கு மகனாக மருணீக்கியார் பிறந்தார். மருணீக்கியார் இளவயதிலேயே பல கலைகளையும் கற்றுத் தேறினார்.

திலகவதியாருக்கு வயது பன்னிரண்டை எட்டியது. அக்கால வழக்கப்படி அந்த வயதிலேயே அவருக்குத் திருமணம் செய்துவைக்க, பெற்றோர் முடிவெடுத்தனர். சிவபக்தியும் ஒழுக்கமும் அறிவும் வீரமும் நிறைந்த கலிப்பகையாரைத் திருமணம் பேசி மணமகனாக நிச்சயித்தனர். கலிப்பகையார் அரசனின் படைவீரராகத் திகழ்ந்தார்.

திருமணம் நடைபெறுவதற்கு ஏற்பாடாகியிருந்த நிலையில் அயல்நாட்டு அரசனோடு மூண்ட போரில் பங்கேற்பதற்காக, கலிப்பகையார் செல்ல வேண்டியதாயிற்று.

போர் தொடர்ந்தது. அக்காலகட்டத்தில் திலகவதியாரின் தந்தையார் புகழனார் காலமானார். தாயார் மாதினியாரும் கணவனோடு உடனுயிர் நீத்தார். திலகவதியாரும் மருணீக்கியாரும் தனித்துவிடப்பட்டார்கள். பெற்றோருக்குச் செய்யவேண்டிய இறுதிக் கடமைகளை, உறவினர்களின் உதவியோடு இருவரும் செய்து முடித்தனர். அந்த நிலையில் போரிலே ஈடுபட்டிருந்த கலிப்பகையாரும் வீரசுவர்க்கம் அடைந்ததாகச் செய்தி வந்தது.

பெற்றோர்களால் தனது கணவனாக நிச்சயிக்கப்பட்ட கலிப்பகையார். இறந்தபின் தனக்கு இனி வேறு வாழ்க்கை இல்லை என்று முடிவெடுத்த திலகவதியார் தானும் உயிர்விடத் துணிந்தார். தாயையும் தந்தையையும் இழந்து இப்போது தமக்கையாரையும் இழக்கவேண்டிய நிலைக்கு ஆளானார் மருணீக்கியார். தமக்கையாரைப் பார்த்து தானும் உயிர்விடப் போவதாகக் கூறினார். தமக்கையாரால் அதைத் தாங்க முடியவில்லை. தம்பி வாழவேண்டும், அதற்காகத் தானும் வாழ வேண்டும் என முடிவெடுத்தார். உலக இன்பங்களையெல்லாம் துறந்து இல்லத்தி லேயே துறவறம் மேற்கொண்டு தவவாழ்க்கை வாழ்ந்தார். தமக்கையாரும் தம்பியும் தமது துயரங்களை ஒருவாறு மறந்து அறங்கள் பல செய்து வாழ்ந்தார்கள்.

மருணீக்கியார் தமது இளமைப்பருவத்திலே பெரும் இழப்புகளைச் சந்தித்து விட்டார். உலக நிலையாமை பற்றிய உணர்வு அவரிடம் உள்ளூர உறைந்திருந்தது. அக்காலத்தில் சமண சமயத்தவர்கள், உலக நிலையாமை முதலான தத்துவங்களை வலியுறுத்தி வந்தார்கள். சமணர்களைச் சார்ந்து அவர்களுடைய சமயதத்துவங்களை கேட்டுணர்ந்த மருணீக்கியார், ஆன்ம விடுதலை தரவல்ல மார்க்கம் சமண மார்க்கமே என்று கருதலானார். மருணீக்கியார், பாடலிபுரம் என்ற இடத்திலே

அமைந்த சமணப் பள்ளியை அடைந்து, சமண நூல்களையெல்லாம் கற்றுத் தேர்ந்து, இறுதியில் அவர்களுக்கெல்லாம் மேலாக தருமசேனர் என்ற நாமத்தோடு சமணர்தம் தலைவரானார்.

மருணீக்கியாருக்காகவே உயிர் வாழ்ந்த தமக்கையார் திலகவதியார், மிக்க துயரம் அடைந்தார். அவரை எவ்வாறேனும் சமணரிடமிருந்து மீட்டு தூய நெறியான சைவநெறியிற் சேர்க்கவேண்டும் எனத் தீர்மானித்தார்; திருவீரட்டானத் தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைச் சரணடைந்தார்; தொண்டுகள் பல புரிந்தார்; தம்பியாரைச் சமண சமயத்தினின்றும் மீட்டுச் சைவத்தைச் சார்வித்தருளுமாறு இறைவனிடம் மன்றாடினார். இறைவனும் திருவுளம் இரங்கினான்.

பாடலிபுரத்தில் சமணப்பள்ளியிலே தருமசேனராக இருந்த மருணீக்கியாருக்கு சூலை நோய் உண்டாகியது, வேதனை வயிற்றைக் குடைந்தெடுத்தது; வலிதாங்கமுடியாது விழுந்தார். கூட இருந்த சமணர்கள் எத்தனையோ பரிகாரங்கள் செய்து பார்த்தார்கள். வேதனை அதிகரித்ததேயன்றிக் குறைந்தபாடில்லை. சமணர்கள் செய்வதறியாதவர்களாய் அவரைக் கைவிட்டார்கள்.

மருணீக்கியாருக்கு துணை யாரும் இல்லை. வலி தாங்க முடியவில்லை. அப்போதுதான் அவருக்கு தமக்கையாரின் நினைவு வந்தது. தன் நிலைமையைச் சொல்லி அவரை அழைத்து வருமாறு ஒருவனை அனுப்பினார். அவனும் போய், விடயத்தைச் சொன்னான். ஆனால் திலகவதியாரோ, ‘‘சமணர் இடத்துக்கு நான் வரமாட்டேன்’’ என்று மருணீக்கியாருக்குத் தெரிவிக்கும்படி கூறி அனுப்பினார். இறைவன் அருள் கைகூட, மருணீக்கியாரும் சமணர் அறியாத வகையில், திருவதிகையை அடைந்து, திலகவதியாரிடம் அடைக்கலம் புகுந்தார். திலகவதியாரும் இறைவனது திருவருளை வியந்து, தம்பியாருக்குத் திருநீறு சாத்தி, அவரை வீரட்டானேஸ்வரர் கோவிலுக்கு அழைத்துச் சென்றார்.

மருணீக்கியார், வீரட்டானேஸ்வரரை வலம் வந்து வணங்கினார்; நிலத்திலே நெடுஞ்சாண் கிடையாக வீழ்ந்தார்; இறைவன் திருவருளால் திருப்பாடல்களைப் பாடும் உணர்வும் கைவரப் பெற்றார்; வயிற்றில் நின்று வருத்தும் சூலை நோயினின்றும் தம்மை விடுவிக்கக் கோரி ‘கூற்றாயினவாறு விலக்ககிலீர்’ எனத் தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடி இறைஞ்சினார். அவ்வளவில், அதுவரை அவரை வருத்தி

நின்ற சூலைநோய் இருந்த இடம் தெரியாது அகன்றது. பதிகம் பாடிய திறத்தை மெச்சி ''நாவுக்கரசர் என்னும் நாமம் உலகில் நிலைபெற்று வழங்குக'' என்று அசரீரி ஒலித்தது. தன் தம்பியாரின் உயர்நிலை கண்டு தமக்கையார் திலகவதியார் உள்ளம் பூரித்தார். திருநாவுக்கரசரும் காலமெல்லாம் - தன் தள்ளாத வயதிலும் - இறைவனுக்குத் திருப்பணி செய்தும் திருப்பதிகம் பாடியும் சைவமக்களுக்கு நன்னெறி காட்டி நின்றார். திலகவதியாரும் திருவதிகை மடத்திலே தங்கியிருந்து திருத்தொண்டு பலபுரிந்து முத்தி எய்தினார்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திலகவதியாரின் தாய், தந்தையர் பெயர் யாது?
2. திலகவதியார் உயிர்விடத் துணிந்தது ஏன்?
3. திலகவதியார் தவ வாழ்க்கையை ஏன் மேற்கொண்டார்?
4. மருணீக்கியார் தருமசேனர் எனப் பெயர் பெற்றதன் காரணம் யாது?
5. தருமசேனர் திருவதிகைக்கு ஏன் வரவேண்டி நேரிட்டது?
6. தருமசேனரின் சூலைநோய் எவ்வாறு நீங்கியது?
7. திலகவதியார் சைவசமயத்திற் கொண்ட பற்றுறுதி எவ்வாறு வெளிப்படுகின்றது?

## செயற்பாடு

திலகவதியார், காரைக்கால் அம்மையார், மங்கையற்கரசியார் ஆகியோரது பக்தித் திறம்பற்றி குழுநிலையில் கலந்துரையாடி விடயங்களை முன்வைக்குக.

# 12 திருக்கோயிலும் திருவிழாவும்

திருச்சிற்றம்பலம்

திருக்கோயில் இல்லாத் திருவிலூரும்
திருவெண்ணீறு அணியாத திருவிலூரும்
பருக்கோடிப் பத்திமையால் பாடாவூரும்
பாங்கினொடு பல தளிகள் இல்லாவூரும்
விருப்பொடு வெண்சங்கம் ஊதாவூரும்
விதானமும் வெண்கொடியும் இல்லாவூரும்
அருப்பொடு மலர் பறித்திட்டு உண்ணாவூரும்
அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே.

திருச்சிற்றம்பலம்

(திருநாவுக்கரசு நாயனார்)

## பூசைகள்

சைவ மக்களாகிய நாம் சிவபிரானையும் அவனிலிருந்து பிரிவில்லாத சிவ சக்தியையும் வழிபடுகிறோம். சிவனும் உமையும் பல்வேறு தோற்றங்களில் நின்று எங்களுடைய வழிபாடுகளை ஏற்றுக்கொள்கின்றனர். சிவன் நடராசர், கல்யாண சுந்தரர், பிட்சாடனர், சந்திரசேகரர், அர்த்தநாரீஸ்வரர், தட்சிணாமூர்த்தி முதலிய அறுபத்துநான்கு வடிவங்களைக் கொண்டருளுவார்.



இதே போன்று இறைவியும் ஆன்மாக்கள் வழிபடும்பொருட்டுப் பல்வேறு வடிவங்களைக் கொண்டருளுகிறார்.

இறைவன், இறைவி ஆகியோரின் வடிவங்களில் சிலவற்றையோ, பலவற்றையோ நாம் எமது விருப்பத்திற்கு ஏற்றவாறு வீட்டில் வைத்து வணங்குகிறோம். திருக்கோயில்களில் மூலமூர்த்திகளாகச் சதாசிவ மூர்த்தியும் உமையம்மையும் இருக்க, அவர்களின் தோற்றபேதங்களைக் குறிக்கும் விக்கிரகங்கள் பரிவார தெய்வங்களாகக் கோயிலின் உள்வீதியில் சிறு கோயில்களில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும்.

கோயில்களிலே தினமும் உஷக்காலப்பூசை, காலை சந்திப்பூசை, உச்சிக்காலப் பூசை, சாயங்காலப்பூசை, இரண்டாங்காலபூசை, அர்த்த சாமப்பூசை என ஆறுகாலப் பூசைகள் நடைபெறும். அதிகாலையில் சுவாமியை மங்கல வாத்தியங்களுடன் திருப் பள்ளியெழுச்சிப் பாடல்களைப் பாடி பள்ளி எழுந்தருளச் செய்து, திருமுழுக் கிட்டு, வஸ்திரஞ் சாத்தி, ஆபரணங்கள் அணிந்து பலவகை மலர் மாலைகளினால் அர்ச்சகர் அலங்கரிப்பார்; தூப தீபம் காட்டி, மலர்களால் அர்ச்சித்து, நைவேத்தியம் படைத்து, சகல உப சாரங்களும் செய்து வழிபாடியற்றுவார்.

விசேட விழாக் காலங்களில் சுவாமியை அம்பாள் சமேதராக சகல விருது களுடனும் வீதிகளில் உலாக் கொண்டு வருவர். இவ்விழாக்கள் ஆவணிச் சதுர்த்தி, நவராத்திரி, திருக்கார்த்திகை, மார்கழித் திருவாதிரை போன்ற விசேட தினங்களில் நடைபெறும். மேலும், ஆண்டுக்கொருமுறை கொடியேற்றிப் பெருவிழாவும் எடுக்கப் படும். இப் பெருவிழா மகோற்சவம் எனப்படும்.

## திருவிழாக்கள்

ஊரில் உள்ள ஆலயத்தில் மகோற்சவம் தொடங்கிவிட்டால் அங்குள்ள மக்களின் வாழ்க்கையிலே ஓர் உயிர்த்துடிப்பு ஏற்படுகிறது.

மகோற்சவம் தொடங்கியதும் ஊர் மக்கள் ஒன்று சேர்ந்து, கோயிலையும் வீதிகளையும் சுத்தம் செய்து, குலை வாழைகள் நாட்டி, தோரணங்கள் தொங்க விட்டுக் கோயிலை அலங்கரிப்பார்கள். விழாக்கள் நடைபெறும்போது நிகழும் பலதிறப்பட்ட கலை நிகழ்ச்சிகளைக் கண்டு மகிழ்ச்சி அடைவார்கள். எல்லோரும் தத்தம் வீடுகளைச் சுத்தம் செய்து, பத்தி சிரத்தையுடன் விரதமிருந்து, அயலூர்களிலிருந்து விழாக் காண வருபவர்களின் பசியாற்றி இன்பம் காண்பர்.

மகோற்சவம் இறைவனின் ஐந்தொழில்களை உணர்த்துகிறது. அங்குரார்ப் பணம், கொடியேற்றம், இரட்சாபந்தனம் முதலியன படைத்தலைக் குறிக்கும். வாகனத் திருவிழா, ஓமம், பலி முதலியன காத்தலைக் குறிக்கும். இரதோற்சவம், சூர்ணோற் சவம் முதலியன அழித்தலைக் குறிக்கும். மௌனோற்சவம் மறைத்தலையும், தீர்த்தத் திருவிழா அருளலையும் குறிக்கும்.

உற்சவத்தின் ஆரம்பத்திலே, ஊரைக் காவல் செய்யும் பாவனையில் வைரவ மூர்த்திக்குச் செய்யும் பூசை 'கிராம சாந்தி' எனப்படும். அதன்பின் வைக்கோல், தருப்பை முதலியவற்றால் செய்யப்பட்ட உருவம் ஒன்றைச் சிவாக்கினியோடு சேர்த்து வீதிவழியே இழுத்து, வீதியைச் சுத்தஞ் செய்யும் பாவனையில் 'வாஸ்து சாந்தி' நடைபெறும். அதன்பின்னர் சுத்தமான மண் எடுத்து, உலகின் தானிய விருத்தி கருதி நவதானியம் முளையிடப்படும். தொடர்ந்து, உற்சவம் இடையூறின்றி நிறைவேறும் பொருட்டு சிவாசாரியார் தமக்கும் உற்சவ மூர்த்திகளுக்கும் காப்புக் கட்டுவதான 'இரட்சாபந்தனம்' முதலான கிரியைகள் இடம்பெறும். இவற்றின்பின் கொடியேற்றத் திருவிழா நடைபெறும்.

ஆணவம் வலியிழந்து, ஆன்மா மலநீக்கம் பெறுதற் பொருட்டுத் திருவருளாகிய கொடியை ஏற்றுவதையே கொடியேற்றம் உணர்த்தி நிற்கிறது. கொடிமரம் பதியையும், கொடிச் சீலை பசுவையும், சீலையைச் சுற்றியுள்ள கயிறு பாசத்தையும் குறிக்கும்.

தீர்த்தத் திருவிழாத் தினத்தன்று இரவோ, அடுத்த நாளோ திருக்கலியாணம் நடப்பது வழக்கம். இது நம்போன்ற சாதாரண மக்கள் செய்யும் கலியாணம் போன்றதன்று என்பதை நாம் உணரவேண்டும். அருள் வடிவான சத்தி அறிவு மயமான சிவத்தோடு கலந்து பிரபஞ்சத்தை இயங்க வைப்பதையே இது குறிப்பதாகும்.

**மலையரையன் பொற்பாவை வாணுதலாள் பெண் திருவை**
**உலகறியத் தீவேட்டான் என்னும் அது என்னேடி**
**உலகறியத் தீவேளாது ஒழிந்தனனேல் உலகனைத்துங்**
**கலைநவின்ற பொருள்களெல்லாம் கலங்கிடுங்காண் சாழலோ**

என்றார் மணிவாசகர். நித்திய பூசைகளிலே ஏற்படுங் குறைபாடுகளை நைமித்திய பூசையாகிய திருவிழாக்கள் தீர்க்கின்றன என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

கர்ப்பிணிகள், நோயாளிகள் போன்றவர்கள் கோயிலுக்குப் போக முடியாமையினால் உள்ளே நிலையாக எழுந்தருளியிருக்கும் திருமேனிகளைக் கண்டு வணங்க முடியாதிருக்கின்றார்கள். இவர்கள் உற்சவ காலங்களில் விழாக் கோலம்கொண்டு எழுந்தருளி வீதி வலம் வரும் உற்சவ மூர்த்திகளைத் தரிசித்து இன்பம் பெறுவர்.

**''மண்ணினிற் பிறத்தார் பெறும் பயன் மதி சூடும்**
**அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்**
**கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டு ஆர்தல்''**

என்கிறார் சேக்கிழார் பெருமான். திருவிழாக்கள் ஊர் மக்களை ஒன்று சேர்க்கின்றன. ஐம்புலன்கட்கும் விருந்தளிக்கின்றன. மக்கள் மனத்தில் நற்பண்புகளை வளர்க்கின்றன. கவலைகளை மறந்து, அமைதி மிக்கதோர் புத்துலகில் அவர்களை வாழச் செய்கின்றன.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. கோயில்களில் தினமும் நடைபெறும் பூசைகள் எவை ?

2. மகோற்சவம் எவற்றை உணர்த்துகிறது ?

3. மகோற்சவத்தின் ஆரம்பத்தில் இடம் பெறும் கிரியைகள் யாவை ?

4. கொடியேற்றம் எதனை உணர்த்துகிறது ?

5. கொடிமரம், கயிறு, கொடிச் சீலை என்பன எவற்றைக் குறிக்கின்றன ?

6. நைமித்திய பூசைகள் ஏன் இடம் பெறுகின்றன ?

7. மகோற்சவங்களால் விளையும் நன்மைகள் யாவை ?

## செயற்பாடு

மகோற்சவத்திற்கும் பஞ்சகிருத்தியத்துக்குமான தொடர்பு பற்றிக் கலந்துரையாடுக.

# 13

# சமயகுரவர்



## திருஞான சம்பந்தர்

சோழ நாட்டிலே, சீர்காழியிலே, வாழ்ந்த சிவபாதவிருதயர் என்பவரும் பகவதி அம்மையாரும் செய்த தவப் பயனாக, உலகில் சைவம் தழைத்தோங்க, ஓர் ஆதிரை நன்னாளிற் பிள்ளை ஒன்று பிறந்தது. அப்பிள்ளை தன் மூன்றாம் வயதிலே ஒரு நாள் சீர்காழிக் கோயிலின் திருக்குளத்தில் நீராடச் சென்ற தந்தையாரின் பின்னே அழுதுகொண்டு சென்றது. அப்பிள்ளையையுங் கூட்டிச் சென்ற தந்தையார் அதனைக் குளக்கரையில் இருத்திவிட்டு, குளத்தில் இறங்கி நீராடினார். நீரினுள் மூழ்கிய தந்தையாரைக் காணாத பிள்ளை, கோயிற் கோபுரத்தைப் பார்த்து, 'அம்மையே, அப்பா' என்று அழுதது. அப்பிள்ளைக்கு அருள் புரியத் திருவுளங்கொண்ட சிவபெருமான் உமாதேவியாருடன் இடபாரூடராக எழுந்தருளினார். உமையம்மையார் ஞானப்பாலைப் பொற்கிண்ணத்தில் எடுத்து அப்பிள்ளைக்கு ஊட்டினார். சிவபெருமான் அப்பிள்ளையின் அழுகையைத் தீர்த்து உமாதேவியாரோடு மறைந்தருளினார்.

நீராடிவிட்டுக் கரையேறிய சிவபாதவிருதயர் பிள்ளையின் வாயிலிருந்து பால் வடிந்திருப்பதைக் கண்டார். ''யார் தந்த பாலை உண்டாய்?'' என்று அதட்டிக்

கேட்டார். அப்பொழுது வானிலே உமையம்மையாரோடு விடைமீது தமக்குக் காட்சி கொடுத்தருளிய சிவபெருமானைச் சுட்டிக் காட்டி, ‘தோடுடைய செவியன்’ என்று பிள்ளை பாடத் தொடங்கியது. தந்தையார், மிக மகிழ்ந்து பிள்ளையுடன் கோயிலுக்குச் சென்று தோணியப்பரை வணங்கினார். இறைவனால் ஆட்கொள்ளப்பட்டமையால் ‘ஆளுடைய பிள்ளையார்’ என்றும் சிவஞான சம்பந்தம் பெற்றமையால் ‘திருஞானசம்பந்தர்’ என்றும் அப்பிள்ளை பெயர் பெற்றது. அன்று தொடக்கம் பிள்ளையாரை அவருடைய தந்தையார் தம் தோளிலே சுமந்து கோயில்களுக்குச் சென்று வணங்குவது வழக்கமாயிற்று.

பிள்ளையார் ஒரு நாள் திருக்கோலக்கா என்னும் திருப்பதியை அடைந்தார். அங்கு அவர், தன் கையினால் தாளமிட்டு **மடையில் வாளை** என்னும் பதிகத்தைப் பாடினார். அவருடைய கை வருந்தும் எனக் கருணை கூர்ந்த இறைவன், ஐந்தெழுத்துப் பொறித்த பொற்றாளம் ஒன்றை அவர் கையிற் கிடைக்கச் செய்தார்.

ஆளுடைய பிள்ளையாரின் பெருமை சோழ நாடெங்கும் பரவியது. அடியார்கள் திரள்திரளாக வந்து பிள்ளையாரைத் தத்தம் பதிகளுக்கு எழுந்தருளுமாறு வேண்டினர். அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கிய பிள்ளையார் பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு சீர்காழிப் பதியை அடைந்தார். சிதம்பரத்தை அடுத்துள்ள திருவெருக்கத்தம்புலியூரில் வாழ்ந்து வந்த திருநீலகண்டப் பெரும்பாணரும் அவருடைய மனைவி மதங்க சூளாமணியும் சீர்காழிக்கு வந்து திருஞானசம்பந்தரை வணங்கிப் பாடினர். அதனைக் கேட்டு மகிழ்ந்த பிள்ளையார், தாம் பாடும் பதிகங்களை யாழில் இசைக்குமாறு பாணர்க்கு அருள்செய்தார்.

தந்தையார் தோளிற் சுமந்து செல்ல, சிதம்பரம் முதலிய பல தலங்களையும் தரிசித்த பின், பிள்ளையார் திருப்பெண்ணாகடத் திருத்தூங்கானை மாடத்தைத் தொழுதார். பின் திருவரத்துறையை வணங்குவதற்குத் தந்தையாரின் தோளிலிருந்து இறங்கித் தாமே நடந்துசென்றார். அவர் நடப்பதைப் பொறாத அரத்துறைநாதர், அவ்வூர் அந்தணர்களுக்குக் கனவிலே தோன்றி, ‘‘ஞான சம்பந்தன் நம்பால் அணைகின்றான். அவனுக்காக முத்துச் சிவிகையும் முத்துக்குடையும் முத்துச் சின்னங்களும் நம் திருக்கோயிலில் வைத்திருக்கின்றோம். அவற்றை அவன்பாற் கொண்டு செல்லுங்கள்’’ என்று பணித்தருளினார்.

பிள்ளையாருக்கும் அன்றிரவு கனவில் இறைவன் இச்செய்தியைத் தெரிவித்தார். பிள்ளையார் திருவருள் வடிவாக வந்த அச்சிவிகைமீது எழுந்தருளினார். முத்துக் குடை நிழற்றியது. முத்துச் சின்னங்கள் ஒலித்தன. தொண்டர்கள் ‘அரஹர’வொலி

செய்தனர். திருவரத்துறையை அடைந்த பிள்ளையார், இறைவனை வணங்கி **எந்தை ஈசன் எம்பெருமான்** என்று தொடங்கும் பதிகத்தைப் பாடினார்.

பாணரின் தாயாரின் பிறப்பிடமாகிய திருத்தருமபுரத்தைப் பிள்ளையார் அடைந்தபொழுது, பாணரின் சுற்றத்தார் அவர்களை எதிர்கொண்டு வணங்கினர். அப்பொழுது பாணர், பிள்ளையாரின் திருப்பதிகங்களை யாழிலிட்டு வாசிக்கும் பேறு தமக்குக் கிடைத்ததெனக் கூறினார். அதைக்கேட்ட பாணரின் உறவினர்கள், ''பாணர், திருப்பதிகங்களை யாழில் இட்டு வாசிப்பதனால் அவற்றின் சிறப்பு உலகில் விளங்குகின்றது'' என்றனர். உடனே பாணர் மனம் நடுங்கி, பிள்ளையாரை நோக்கி, ''சுவாமீ, தங்கள் திருப்பதிக இசை அளவுபடாத அரிய தன்மை உடையது என்பதனை எல்லோரும் அறிய ஒரு திருப்பதிகம் பாடவேண்டும்'' என்று வேண்டினார். பிள்ளையார் 'மாதர் மடப் பிடியும்' என்னும் பதிகத்தைப் பாடியருளினார். பாணரால் அதனை யாழில் இட்டு வாசிக்க முடியவில்லை. அவர், பிள்ளையாரை வணங்கி ''சுவாமிகளின் திருப்பாடல்களை யாழிலே ஏற்பேன் என்று கூறப்பண்ணியது இந்த யாழே'' என்று கூறி அதனை உடைக்க முற்பட்டார். பிள்ளையார் அவரைத் தடுத்து, ''இதனை உடைப்பதேன்? இறைவனின் அருட்டிறம் எல்லாம் இக்கருவியில் அமையுமோ? இயன்ற அளவு வாசித்தலே சால்பு'' என்று கூறினார். இப்பதிகப் பண் 'யாழ்முரி' என வழங்குகிறது.

திருஞானசம்பந்தர் திருப்பாச்சிலாச்சிரமத்தை அடைந்த பொழுது, அங்கு ஆலயத்தினுள்ளே கொல்லிமழவன் என்ற அரசனின் மகள், முயலகன் நோயினால் வருந்துவதைக் கண்டு, **துணிவளர் திங்கள்** என்ற பதிகத்தைப் பாடி அவளுடைய நோயை நீக்கினார். பின்னர் கொடிமாடச் செங்குன்றூர் என்னும் இடத்தில், பனியின் கொடுமையால், தம் அடியார்களும் பிறரும் குளிர்ச் சுரத்தால் வருந்துவதைக் கண்டு, **அவ்வினைக்கிவ்வினை** என்ற பதிகத்தைப் பாடி வருத்தம் தீர்த்தார். ஒருபொழுது பிள்ளையாருடைய தந்தையார் யாகம் செய்வதற்குப் பொன் தேவைப்பட்டது. அப்பொழுது **இடரினும் தளரினும்** என்ற பதிகம் பாடி, சிவனருளால் ஆயிரம் பொன் பெற்றுத் தந்தையாருக்குக் கொடுத்தார். பிள்ளையார் திருமருகலை அடைந்தபொழுது கன்னி ஒருத்தியுடன் வழிப் பயணமாக வந்த வணிகன் ஒருவன் அரவு தீண்டி இறந்து கிடந்தான். இதனைக் கண்டு இரக்கமுற்ற திருஞானசம்பந்தர் **சடையா யெனுமால்** என்னும் பதிகம் பாடி அவனை உயிர்ப்பித்தார். பின்னர் இருவருக்கும் திருமணம் செய்வித்து அனுப்பினார்.

திருவீழிமிழலைக்கு அவர் அப்பரடிகளுடன் சென்றபொழுது அங்கு மாரிவளம் குன்றிப் பஞ்சம் ஏற்பட்டிருந்தது. அடியார்கள் யாவரும் பசிப் பிணியால் வருந்தினர். திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் சிவபெருமானைப் பாடிப் படிக்காசு பெற்று, அடியார்க்கு அமுது செய்வித்தனர். திருமறைக்காட்டில், தேவாரம் பாடித் திருநாவுக்கரசர் திறந்த கதவை **சதுரம் மறை** என்ற பதிகத்தைப் பாடி மூடச் செய்தார்.

பாண்டி நாட்டை ஆண்ட கூன்பாண்டியன் என்பவன் சமணசமயத்தைத் தழுவியிருந்தான். அந்நாட்டு மக்களும் அச்சமயத்தைச் சார்ந்தனர். அதுகண்டு பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் மனம் வருந்தினர். சைவத்தைத் தழைத்தோங்கச் செய்ய வல்லவர் திருஞானசம்பந்தரே எனக் கண்டு அவர்கள் பிள்ளையாரை மதுரைக்கு அழைத்தனர். மதுரைக்கு வந்த பிள்ளையார் ஒரு மடத்தில் அடியார் குழாத்துடன் தங்கினார். அன்றிரவு சமணர்கள் அரசனுடன் சேர்ந்து ஆலோசித்துச் சூழ்ச்சி செய்து, அம்மடத்துக்குத் தீ இட்டனர். இதனை அறிந்த பிள்ளையார் **செய்யனே திருவாலவாய்** என்ற பதிகம் பாட, அத்தீயானது தணிந்து வெப்பு நோயாகச் சென்று பாண்டியனை வருத்தியது.

அரசனுடைய நோயைத் தீர்ப்பதற்குச் சமணர்கள் செய்த மந்திர தந்திரங்களினால் நோய் தீரவில்லை; மாறாக மிகுந்தது. அப்பொழுது அங்கு அழைத்துவரப்பட்ட பிள்ளையாரை அரசன் வேண்ட, அவர் சிவபெருமானை வணங்கி, **மந்திரமாவது நீறு** என்ற பதிகம் பாடி, அரசனுடைய மேனியிலே திருநீறு இட, வெப்பு நோய் தீர்ந்தது. பிள்ளையாரின் வெற்றியை ஏற்றுக்கொள்ளாத சமணர்கள் அவரை அனல் வாதத்திற்கு அழைத்தனர். பிள்ளையார் **போகமார்ந்த பூண்முலையாள்** என்ற பதிகம் எழுதப்பட்ட ஏட்டைத் தீயில் இட்டார். சமணர்களும் தமது சமய உண்மை எழுதப்பட்ட ஓர் ஏட்டைத் தீயில் இட்டனர். சமணர்களுடைய ஏடு எரிந்து சாம்பராக, பிள்ளையாரின் ஏடு எரியாது பசுமையாக இருந்தது. அதனையும் ஏற்காத சமணர்கள், பிள்ளையாரைப் புனல் வாதத்திற்கு அழைத்தனர். சமணர்கள், **அத்தி நாத்தி** என்று எழுதிய ஏட்டை வைகையில் விட, பிள்ளையார் **வாழ்க அந்தணர்** என்ற பதிகம் எழுதிய ஏட்டை இட்டார். சம்பந்தரின் ஏடு ஆற்றோட்டத்தை எதிர்த்துச் செல்ல, சமணரின் ஏடு ஆற்றோடு சென்றது. பிள்ளையார் தம் பதிகத்தில் 'வேந்தனும் ஓங்குக' என்று அருளியமையால் அரசனது கூன் நிமிர்ந்தது. அவன் சைவத்தைத் தழுவினான்.

சில நாள்கள் கழிந்தபின், பிள்ளையார் தம் அடியார்களோடு, இராமேஸ்வரத்தை அடைந்து திருப்பதிகம் பாடியருளினார். அங்கிருந்தே ஈழநாட்டிலுள்ள திருக்கேதீஸ்வரம், திருக்கோணேஸ்வரம் என்னுந் தலங்களையும் வணங்கித் திருப்பதிகம் பாடியருளினார்.

திருமயிலாப்பூரில், சிவநேசர் என்ற அடியாரின் மகள் பூம்பாவை என்பவள், பாம்பு தீண்டி இறந்தாள். தந்தையார் அவளுடைய அஸ்தியை ஒரு குடத்தில் இட்டு வைத்திருந்தார். மயிலாப்பூரை வந்தடைந்த சம்பந்தர் சிவநேசரின் வேண்டுதலுக்கு அமைய, அக்குடத்தைக் கபாலீசுவரர் திருமுன் வைத்து, 'மட்டிட்ட புன்னை' என்ற பதிகத்தைப் பாடி, பூம்பாவையை உயிர்ப்பித்தார்.

திருநல்லூர்ப்பெருமணத்தில் வாழ்ந்த நம்பாண்டார் நம்பிகளின் மகளைப் பிள்ளையாருக்குத் திருமணஞ் செய்து கொடுக்க ஏற்பாடாயிற்று. பிள்ளையார் மணமகளைக் கையிற் பிடித்து அக்கினியை வலம்வரும்பொழுது ''இந்த இல் லொழுக்கம் வந்து சூழ்ந்ததே, இவள் தன்னோடும் அந்தமில் சிவன்தாள் சேர்வன்'' என்று எண்ணி, 'கல்லூர்ப் பெருமணம்' என்னும் பதிகத்தைப் பாடினார். அப்பொழுது ''காதலியும் நீவிரும் திருமணம் காணவந்தோர் அனைவரும் நம்பாற் சோதியிற் கலமின்'' என்று ஓர் ஒலி கேட்க, சோதி ஒன்று தோன்றிற்று. பிள்ளையார் 'காதலாகிக் கசிந்து' என்னும் பஞ்சாட்சரப் பதிகத்தை ஓதி, எல்லோரையுஞ் சோதியுட் புகுமாறு பணித்தார்; பின்னர் தாமும் மணமகளுடன் அதனை வலம்வந்து அச்சிவசோதியுட் கலந்தார். ஒரு வைகாசி மாத மூல நட்சத்திரத்தன்று இந்த நிகழ்ச்சி இடம்பெற்றது.

## திருநாவுக்கரசர்

திருநாவுக்கரசர் சமணசமயம் சார்ந்து, பின் சைவத்துக்கு மீண்ட வரலாறு, அவரது தமக்கையாராகிய திலகவதியார் பற்றிய பாடத்திலே கூறப்பட்டது. அதனை அங்கே கண்டுகொள்க. சைவசமயம் சார்ந்தபின்னரான அவரது வரலாற்றைச் சுருக்க மாக இங்கு நோக்குவோம்.

நாவுக்கரசர் மீண்டும் சைவசமயம் சார்ந்தமையை அறிந்த சமணர்கள் தம் அரச னாகிய பல்லவ மன்னனிடஞ் சென்று முறையிட்டனர். சமண சமயமே மெய்ச்சமயம் என மருள் கொண்ட அம்மன்னவன் மிக வெகுண்டு, நாவுக்கரசரை தன்னிடம் அழைத்து வருமாறு தன் அமைச்சரை அனுப்பினான். அரசன் கட்டளையை அறிவித்த அமைச்சரைப் பார்த்து, **நாமார்க்கும் குடியல்லோம்** என்ற திருத்தாண்டகத்தைப் பாடி, அரசனிடஞ் செல்ல நாவுக்கரசர் மறுத்தார்; அமைச்சர் அவருடைய அடியில் வீழ்ந்து பன்முறை இரந்து வேண்டியதனால் இரக்கங்கொண்டு ''எல்லாவற்றுக்கும் எம்பெருமான் உளன்'' என்று தம் மனத்தை உறுதிசெய்துகொண்டு ஒருவாறு உடன்பட்டு அமைச்சருடன் சென்றார்.

நாவுக்கரசரைக் கண்ட அரசன், ''இனி இவனை என்ன செய்வது?'' என்று தன் பக்கத்திலிருந்த சமணர்களை வினவினான். அச்சமணர்கள், ''இவனை நீற்றறையில் விட வேண்டும்'' என்றனர். கொடுங்கோலனாகிய அவ்வரசன் ''அவ்வாறே செய்யுங்கள்'' என்றான். உடனே அச்சமணர்கள் இரும்பையும் உருக்கும் வெப்பம் நிறைந்த சுண்ணாம்பு அறையில் அவரை இட்டு அடைத்தனர். நாவுக்கரசர் சிவபெருமானை நினைந்து, 'மாசில் வீணையும்' என்னும் பதிகத்தைப் பாடினார். ஈசனின் இணையடி நிழலில் இருந்த நாவுக்கரசரை அந்நீற்றறை வருத்தவில்லை. ஏழு நாள் கழித்துச் சமணர்கள் நீற்றறையைத் திறந்தபொழுது, அவர் முன்னரிலும் நன்றாக இருக்கக் கண்டு திகைத்தனர்.

அரசன் அவர்மேல் யானையை ஏவப் பணித்தான். அப்பொழுது நாவுக்கரசர் சிறிதும் அஞ்சாது, 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்' என்னுந் தேவாரத்தைப் பாடி இறைவனைச் சரணடைந்தபொழுது, அந்த யானை அவரை வலம்வந்து வணங்கியது. சமணர்கள் நஞ்சு கலந்த பாற்சோற்றை நாவுக்கரசருக்கு உண்ணக் கொடுத்தனர். அது அவருக்கு அமிர்தமாக அமைந்தது.

ஈற்றில் சமணர்கள், அவரைக் கல்லுடன் கட்டிக் கடலில் போட்டனர். நாவுக்கரசர் இறைவனை நினைந்து 'சொற்றுணை வேதியன்' என்னும் பதிகத்தைப் பாட, அவரைக் கட்டியிருந்த கல் தெப்பமாக மிதந்தது. சமணர்கள் உறுதி குலைந்து தளர்வுற்றுத் திகைத்தனர். அரசனும் இவ்வற்புதங்களைக் கண்டு வியப்புற்று, சைவ சமயமே மெய்ச்சமயம் என உணர்ந்து அதனைத் தழுவினான்.

நாவுக்கரசர் திருவதிகையிலிருந்து சிலகாலம் சிவத்தொண்டு புரிந்தபின் தலயாத்திரை மேற்கொண்டார். அவர் தம் கையில் வைத்திருக்கும் உழவாரத்தினால் கோயிற் சுற்றுப்புறத்தைச் சுத்தஞ் செய்வார். அதனால் அவர் 'உழவாரப் படையாளி' என்று அழைக்கப்பட்டார்.

நாவுக்கரசர் திருவெண்ணெய் நல்லூர், திருக்கோவலூர் முதலிய திருத் தலங்களை வழிபட்டுத் திருப்பெண்ணாகடத்தை அடைந்து, அங்குள்ள திருத் தூங்கானைமாடக் கோயிலுக்குச் சென்றார். அங்கு இறைவனை நோக்கி ''எம் பெருமானே, புன்னெறியாகிய சமண சமயத்தில் இருந்து மாசுற்ற இந்த உடலோடு வாழ முடியவில்லை; இவ்வுடலுடன் வாழ்வதற்கு உன்னுடைய சூல, இடப இலச்சி னைகளை எனக்கு இட்டருளல் வேண்டும்'' என்று விண்ணப்பித்து **பொன்னார்**

**திருவடிக்கு ஒன்றுண்டு விண்ணப்பம்** என்று தொடங்குந் திருப்பதிகத்தைப் பாடினார். அப்பொழுது இறைவன் அருளால் சூல, இடப இலச்சினைகள் ஒருவரும் அறியாமல் நாவுக்கரசரின் தோளிற் பொறிக்கப்பட்டன.

நாவுக்கரசர் சிதம்பரத்தில் இருக்கும் நாளில் சம்பந்தரின் மகிமையை அடியார்கள் மூலம் அறிந்தார். அவரைத் தரிசிக்க வேண்டும் என்னும் ஆசை மிகுதியினால் சீர்காழியை நோக்கிப் புறப்பட்டார். சம்பந்தரைக் கண்ட நாவுக்கரசர் அவரின் திருவடிகளிலே வீழ்ந்து வணங்கினார். அப்பொழுது சம்பந்தர் அவருடைய கைகளைப் பிடித்து எழச்செய்து, தாமும் அவரை வணங்கி, ''அப்பரே'' என்று அழைத்தார். நாவுக்கரசர் ''அடியேன்'' என்றார். அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் சந்திக்கக் கிடைத்ததையிட்டு மிக மகிழ்ந்தனர்; சம்பந்தருடைய மடத்தில் சில காலம் தங்கியிருந்தனர்.

அப்பர் சம்பந்தரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு திருச்சத்திமுற்றம் என்னும் தலத்துக்குச் சென்று இறைவனை வழிபட்டு, தமக்குத் திருவடி தீட்சை செய்யுமாறு இறைவனிடம் விண்ணப்பித்தார். இறைவன், அவரை நல்லூருக்கு வருமாறு பணித்தருளினார். நாயனார் நல்லூரை அடைந்து இறைவனை வணங்கி மகிழ்ந்து எழும்பொழுது ''உன்னுடைய நினைப்பதனை முடிக்கின்றோம்'' என்று அவர் சென்னிமிசை திருவடி மலர் சூட்டியருளினார்.

திங்களூர் என்ற இடத்தில் அப்பூதியடிகள் என்ற அந்தணர் ஒருவர் இருந்தார். அவர் நாவுக்கரசரிடத்தில் மிகுந்த பக்தி கொண்டவர். தம் ஊரிலே தாம் செய்து வந்த அறப்பணிகளுக்கு அவர் நாவுக்கரசருடைய பெயரையே சூட்டினார். தம் பிள்ளைகளுக்கும் மூத்த திருநாவுக்கரசு, இளைய திருநாவுக்கரசு எனப் பெயரிட்டார். திருநாவுக்கரசர் திங்களூருக்கு வந்தசமயம் அவ்வூரில் காணப்பட்ட தண்ணீர்ப் பந்தல், கிணறு, குளம் முதலியவற்றுக்குத் தம் பெயர் இடப்பட்டிருத்தலைக் கண்டு அதிசயித்தார்; இவ்வாறு செய்தவரான அப்பூதியடிகளுடைய வீட்டுக்குச் சென்று அவரைச் சந்தித்தார். ''நீங்கள் செய்த அறப் பணிகளுக்கு வேறு ஒருவரின் பெயர் இட்டதன் காரணம் என்ன?'' என்று நாவுக்கரசர் அப்பூதியடிகளிடம் வினவினார். ''இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட திருநாவுக்கரசு நாயனாரை வேறொருவர் என்று கூறுகின்றீரே, நீர் யார்?'' என்று அவர் சினந்தார். ''சூலைநோய் தந்து ஆட்கொள்ளப்பட்ட சிறுமையேன் யானே'' என்று நாவுக்கரசர் விடை கூறினார். அப்பூதியடிகள் அளவிலா ஆனந்தம் அடைந்தார்; நாயனாரை அமுது செய்யுமாறு வேண்டினார். நாயனாரும் இசைந்தார்.

அமுது செய்வதற்கு ஆயத்தஞ் செய்யப்பட்டது. மூத்த திருநாவுக்கரசு வாழைக் குருத்து அரிவதற்காகத் தோட்டத்துக்குச் சென்றான். அங்கு அவனை ஒரு நாகம் தீண்டிற்று. அவன் வீட்டுக்கு ஓடிவந்து தாயாரிடம் வாழைக் குருத்தைக் கொடுத்து விட்டு வீழ்ந்து இறந்தான். இதனை அறிந்தால் நாயனார் அமுது செய்யார் என்று அப்பூதியடிகளும் மனைவியாரும் கலங்கினர். மகனுடைய உடலை மறைத்து வைத்து விட்டு, அமுது செய்யவேண்டும் என்று நாயனாரை இரந்தனர். அங்கு நிகழ்ந்தவற்றைத் திருவருட் குறிப்பினால் அறிந்து, அவர்கள்மேல் அளவிறந்த அருள் கொண்டு, அவ்வுடலை திருப்பழனத்து இறைவரது திருமுன் கொணர்வித்து, **ஒன்று கொலாமவர் சிந்தை** எனும் பதிகம் பாடினார். சிறுவன் உயிர்பெற்று எழுந்து அப்பர் சுவாமிகளை வணங்கினான்.

வாக்கின் வேந்தர் காவிரிக்கரையிலுள்ள பல சிவத்தலங்களையும் தரிசித்து, திருப்புகலூரை அடைந்து, முருக நாயனாரின் மடத்திலே தங்கியிருந்தார். அப்பொழுது அங்கு வந்த சம்பந்தருடன் அவர் அளவளாவி மகிழ்ந்திருந்தார். அதன்பின் இருவரும் திருவீழிமிழலை என்னுந் தலத்துக்குச் சென்றபொழுது, அங்கு மழையின்மை காரணமாகப் பஞ்சம் நிலவியதைக் கண்டு மிகவும் வருந்தினர். இறைவன் அருளால் படிக்காசு பெற்றுப் பஞ்சம் போக்கினார்கள்.

தலயாத்திரை செய்துகொண்டு இருவரும் திருமறைக்காட்டை அடைந் தனர். அங்கு முன்னர் வேதங்களாற் பூசிக்கப்பட்டுப் பூட்டப்பட்ட கதவு திறக்கப் பெறாமையால், அங்குள்ளவர்கள் வேறு வழியாற் சென்று இறைவனை வணங்குகின்றனர் என்பதை இருவரும் அறிந்தனர். நாவுக்கரசர் **பண்ணினேர் மொழியாளுமை பங்கரோ** என்று தொடங்கும் பதிகத்தைப் பாடி கதவை திறக்கச் செய்தார். அதன் பின், நாவுக்கரசரின் வேண்டுகோளுக்கு இணங்க, சம்பந்தர் ‘சதுரம் மறைதான்’ என்று தொடங்கும் பதிகத்தைப் பாடி கதவை மூடச்செய்தார்.

நாவுக்கரசர் திருப்பழையாறையை அடைந்து, அங்கு வடதளியிற் சிவலிங் கத்தைச் சமணர் வஞ்சனையால் மறைத்து, அக்கோயிலைத் தம் பள்ளியாக்கி வைத்திருந்ததைக் கேள்வியுற்றார். சமணர் செயல்கண்டு மனம் வருந்திய அப்பர் அப்பள்ளியினருகே ஓரிடத்தில் இருந்து, ‘சுவாமி, தேவரீரது வண்ணங் கண்டு வணங்கியன்றிப் போகேன்’ என்று கூறி உண்ணாவிரதம் இருந்து இறைவன் அருளால் மன்னனைக் கொண்டு சமணர் வசம் இருந்த அத்திருத்தலத்தை மீட்டுப் புனருத்தாரனம் செய்வித்தருளினார்.

அங்கிருந்து புறப்பட்டு பல தலங்களையும் வணங்கிப் பதிகம் பாடிச் சென்று, திருப்பைஞ்ஞீலியை நோக்கி நடந்தார். வழிநடந்து வந்த அப்பர் மிக இளைத்துப் பசியும் நீர் வேட்கையும் உடையவராய் இருந்தார். அந்நிலையில், திருப்பைஞ்ஞீலிப் பெருமான் சைவ வேதியர் கோலத்துடன், பொதிசோறு வைத்துக்கொண்டு அப்பர் வரும் வழியிலே ஒரு சோலையையும் குளத்தையும் அமைத்திருந்தார்.

அப்பர் அங்கு வந்ததும் அவருக்குச் சோறும் நீரும் வழங்கி அவரது இளைப்பைப் போக்கி அவரோடு திருப்பைஞ்ஞீலி வரை சென்று திடீரென மறைந்தார். அப்பர் அது கண்டு இறைவன் திருவருளை வியந்து, கண்ணீர் பொழிந்து அழுது, நிலத்தில் வீழ்ந்து வணங்கினார். கோயிலுக்குட் சென்று இறைவனை வணங்கிப் பதிகம் பாடினார். பின்னர் அங்கே சிறிதுகாலம் தங்கி உழவாரத் தொண்டு செய்தார்.

அப்பர் அங்கிருந்து புறப்பட்டு வழியிலுள்ள தலங்களை வணங்கித் தமிழ் மாலை பாடிச்சென்று தொண்டை நாட்டை அடைந்தார். அங்கே கண்ணப்பர் முத்தியடைந்த திருக்காளத்தியை அடைந்து, காளத்திநாதரை வழிபட்டு 'விற்றூணொன் றில்லாத' என்ற திருத்தாண்டகத்தைப் பாடினார். தென்கயிலை எனப்படும் திருக்காளத்தி, அப்பருக்கு வடகயிலையை நினைவூட்டிற்று. அவர் இமயமலையிலுள்ளதான வட கயிலையைத் தரிசிக்க மிகுந்த ஆர்வங் கொண்டார்; வடதிசை நோக்கிப் புறப்பட்டார்; தேசம் பல கடந்தார்; காசியை அடைந்தார்; விசுவநாதரை வணங்கினார்; தம்முடன் வந்தவர்களை அவ்விடத்திலே நிறுத்திவிட்டார்; இலை கிழங்கு, பழம் உண்பதையும் நீக்கினார்; அனல் உமிழும் கற்சுரங்கங்களிலே நடக்கலானார்; பாதங்கள் தேய்ந்தன; கைகளால் தாவிச் சென்றார்; கைகள் தேய்ந்தன; மார்பினால் ஊர்ந்தார்; மார்பும் தேய்ந்தது; எலும்புகளும் முறிந்தன; புரண்டு புரண்டு பார்த்தார்; உடம்பும் தேயலாயிற்று; மெல்ல மெல்ல நகர முயன்றார்; அதற்குமேல் அப்பர் செயலற்றவரானார். இந்நிலையில் இறைவன் முனிவர் வடிவில் அவரின் முன் வந்து ''திருக்கயிலாய மலை மனிதர் சென்றடைதற்கு எளிதன்று; இனித் திரும்பிச் செல்லுதலே நன்று'' என்று நாவுக்கரசருக்குக் கூறினார். அப்பொழுது,

> **''ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டு அல்லால்**
> **மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன்''**

என்று நாவுக்கரசர் உறுதியாகக் கூறிவிட்டார். உடனே முனிவர் மறைய, ''ஓங்கு நாவினுக்கு அரசனே எழுந்திரு'' என்று ஓர் ஒலி கேட்டது. கேட்டவுடன் அவருடைய உடல் வருத்தம் எல்லாம் நீங்கி, ஒளிபெற்றுத் திகழ்ந்தது. அப்பொழுது அவர்,

''திருக் கயிலையில் இருந்த நின் கோலம்

நண்ணி நான் தொழ நயந்து அருள்புரி''

எனப் பணிந்தார். அதற்கு இறைவன், ''நீ இந்தத் தடாகத்தில் மூழ்கித் திருவையாற்றை அடைவாய்'' நாம் கயிலாயத்தில் இருக்குங் கோலத்தை அங்கே காண்பாய்'' என்று மீண்டும் ஒலித்தார். இவ்வாறாக, அத்தடாகத்தில் மூழ்கிய நாவுக்கரசர் திருவையாற்றிலுள்ள ஒரு வாவியிலிருந்து கரையேறினார். இறைவன் தம்மீதுகொண்ட கருணையை நினைந்து கண்ணீர் பெருக, அவர் திருவையாற்றுக் கோயிலை நோக்கிச் சென்றார். அவர் கோயிலை அடைந்தபொழுது அது கயிலைமலை போலக் காட்சி அளித்தது. கயிலையில் நடைபெறும் நிகழ்ச்சிகளும் அங்கு நடைபெற்றன. தாம் கண்ட கயிலைக் காட்சியை **மாதர்ப் பிறைக் கண்ணியானை** என்ற பதிகத்தில் நாவுக்கரசர் பாடினார்.

அதன்பின் அப்பர் காவிரியின் இரு மருங்குமுள்ள தலங்களைத் தரிசித்துக் கொண்டு, திருப்பூந்துருத்தியை அடைந்தார். அங்குந் திருமடம் ஒன்று அமைத்து உழவாரப்பணி புரிந்துவந்தார். அப்பொழுது திருஞானசம்பந்தர் தம்மைக் காண விரும்பி வரும் செய்தி அறிந்து, எதிர்சென்று எவரும் அறியாத வகையிற் சம்பந்தரின் சிவிகையைச் சுமந்து வரலானார். நாவுக்கரசரைக் காணும் பெரு விருப்பில், ''அப்பர் எங்குற்றார்?'' என்று உடன் வருவோரைச் சம்பந்தர் வினவ, நாவுக்கரசர் ''உம்மடியேன் உம்மடிகள் தாங்கி வரும் பெருவாழ்வு வந்து எய்தப் பெற்று இங்குற்றேன்'' என்றார். உடனே சம்பந்தர் சிவிகையை விட்டுக் கீழே இறங்கி அப்பரை வணங்கினார். அவருக்குமுன் நாவுக்கரசர் அவரை வணங்கினார். இருவரும் அன்புடன் அளவளாவி மகிழ்ந்தனர்.

நாவுக்கரசர் பூம்புகலூர்க் கோயிலுக்குச் சென்று, உழவாரத் தொண்டு செய்துவரும் நாளில், அவருடைய பற்றற்ற நிலையை உலகத்தார்க்குக் காட்ட இறைவன் திருவுளங்கொண்டான். எனவே, அவருடைய உழவாரம் நுழையும் இடமெல்லாம் பொன்னும் மணியும் பொலிய இறைவன் அருள் செய்தான். நாவுக்கரசர், பொன்னையும் மணியையும் பருக்கைக் கற்களாவே கண்டு அகற்றினார். பின்னர் வானுலக அரம்பையர் வந்து, அவரின் முன் ஆடல் பாடல் புரிந்து, அவருடைய மனத்தைக் கலைக்க முயன்றபோதும் அவர் தம் நிலையிலிருந்து பெயராது, 'பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற' என்னும் பதிகத்தைப் பாடினார். அப்பொழுது அந்த விண்மடந்தையர் அவரைத் தொழுது அகன்றனர்.

*அப்பருக்கு எண்பத்தொரு வயது நிரம்பியபொழுது, அவ்வாண்டு சித்திரை மாத சதய நட்சத்திரத்திலே, திருப்புகலூர் என்ற தலத்தில்,*

**எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ**

**எம்பெருமான் திருவடியே எண்ணில் அல்லால்**

*என்று தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடினார். பாடல்களின் இறுதிதோறும்,*

**உன்னடிக்கே போதுகின்றேன்**

**பூம்புகலூர் மேவிய புண்ணியனே**

*என்று வைத்துப் பாடி, சிவனடி நிழலில் இரண்டறக் கலந்தார். நாவுக்கரசர் தாச மார்க்கத்தைக் கடைப்பிடித்துச் சிவனடி சேர்ந்தார். இவருடைய குரு பூசை தினம் சித்திரை சதயம் ஆகும்.*

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. திருஞானசம்பந்தர், ஆளுடைய பிள்ளையார் என்ற பெயர்களின் பொருளை விளக்குக.

2. ஆளுடையபிள்ளையார் பாடிய பதிகங்களை யாழில் அமைத்துப் பாடியவர் யார்?

3. பிள்ளையாருக்குப் பொற்றாளம், முத்துக்குடை, முத்துச்சிவிகை கிடைத்த மைக்கான காரணம் யாது?

3. யாழ்முரிப் பதிகம் பாடியதன் காரணம் யாது?

4. சம்பந்தப் பெருமான் மதுரையில் நிகழ்த்திய அற்புதங்கள் யாவை?

5. சம்பந்தப் பெருமான் எங்கிருந்தவாறு ஈழநாட்டுத் திருத்தலங்கள்மேல் திருப்பதிகம் பாடினார்?

6. ‘காதலாகிக் கசிந்து’ என்ற தேவாரம் பாடப் பெற்ற சந்தர்ப்பத்தை விளக்குக.

7. நாவுக்கரசர் உழவாரப்படையாளி என அழைக்கப்பட்டதன் காரணம் யாது?

8. திருத்தூங்கானை மாடத்தில் நாவுக்கரசருக்கு நிகழ்ந்த அற்புதம் யாது?

9. வடகயிலையைத் தரிசிக்கும் விருப்பு அப்பருக்கு எவ்வாறு ஏற்பட்டது?

10. கயிலாயக் கோலத்தை அப்பர் எங்கு கண்டு மகிழ்ந்தார்? அப்போது அவர் பாடிய தேவாரப்பதிகம் யாது?

11. இறைவன், நாவுக்கரசரை எவ்வாறெல்லாம் சோதித்தார்?

12. நாவுக்கரசர், முதலில் பாடிய பதிகம் யாது? ஈற்றில் பாடிய பதிகம் யாது?

## செயற்பாடு

1. குழுக்களாகப் பிரிந்து, சம்பந்தப் பெருமான் செய்த அற்புதங்களையும் அச் சந்தர்ப்பங்களில் பாடிய பாடல்களையும் எழுதிக் காட்சிப்படுத்துக.

2. சம்பந்தரும் அப்பரும் சேர்ந்து செய்த அற்புதங்கள் பற்றிக் கலந்துரையாடி நாட கமாக எழுதுக; நடித்துக் காட்டுக.

# 14 சந்தானகுரவர்

அன்பு வழியில் நின்று, பக்திப் பனுவல்களைப் பாடி சைவசமயத்தை வளப்படுத்திய பெரியோர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரையும் சமய குரவர் என அழைப்பது சைவமரபு. இவ்வாறே, அறிவு வழியாலும் இறைவனை அடையலாம் என்பதனைக் காட்டி, சைவசித்தாந்தக் கருத்துக்களை விளக்கம் செய்த பெரியோர்கள் நால்வரைச் சந்தானகுரவர் என அழைப்பதும் சைவமரபாகும்.

சந்தானம் என்றால் பரம்பரை என்றும், குரவர் என்றால் ஞானாசிரியர் என்றும் பொருள்படும். எனவே, சந்தானகுரவர் என்பது, தத்துவஞான பரம்பரையில் வந்த ஞானாசிரியர்களைச் சுட்டுகின்றது. இவர்கள் இரு வகையாகச் சுட்டப்பெறுகின்றனர். ஒரு வகையினர் அகச்சந்தானகுரவர் என்றும், மறு வகையினர் புறச்சந்தானகுரவர் என்றும் அழைக்கப்பெறுகின்றனர்.

பரம்பொருளாகிய ஸ்ரீ கண்ட பரமேஸ்வரனிடத்திலே ஞான உபதேசம் பெற்ற திருநந்தி தேவரும், அவரது மாணவர் பரம்பரையில் வந்த சனற்குமார முனிவர், சத்தியஞான தரிசினிகள், பரஞ்சோதி முனிவர் ஆகிய நால்வரும் அகச்சந்தானகுரவர் எனப்படுகின்றனர்.

பரஞ்சோதி முனிவரிடம் உபதேசம் பெற்ற மெய்கண்டதேவரும் அவர் மாணவ பரம்பரையில் வந்த அருணந்தி சிவாசாரியார், மறைஞானசம்பந்தர், உமாபதி சிவாசாரியார் ஆகிய நால்வரும் புறச்சந்தானகுரவர் எனப்படுகின்றனர். இங்கு புறச்சந்தான குரவர்களுள் முதலிருவரையும் குறித்து நோக்குவோம்.

## மெய்கண்டதேவர்

மெய்கண்டதேவர், திருமுனைப்பாடி நாட்டிலே வாழ்ந்த அச்சுதக்களப்பாளர் - மங்களாம்பிகை தம்பதிக்கு மகனாக அவதரித்தவர். இவரது காலம் கி.பி. பதின் மூன்றாம் நூற்றாண்டு என்பர். இவர், திருவெண்காட்டு இறைவனது அருளினால் பிறந்ததனால், பெற்றோர், சுவேதவனப் பெருமாள் எனும் நாமத்தை இவருக்குச் சூட்டினர். இவர், தமது மூன்றாவது வயதிலே பரஞ்சோதி முனிவரிடம் ஞான உபதேசம் கேட்ட சிறப்புடையவர். வான்வெளியில் சஞ்சரித்துக் கொண்டிருந்த பரஞ்சோதியார், பூவுலகில், தனது நண்பர்களுடன் விளையாடிக் கொண்டிருந்த சுவேதவனப் பெருமாள் எனும் இக்குழந்தையின் பரிபக்குவத்தை உணர்ந்து, அக்குழந்தைக்கு மெய்ஞ்ஞான உபதேசம் வழங்கினார்; **மெய்கண்டார்** எனும் தீட்சாநாமத்தை உபகரித்தார்.

பரஞ்சோதியாரிடம் தாம் அறிந்த மெய்ஞ்ஞானத்தைக் கொண்டு, தனது காலத்துக்கு முற்படத் தோன்றிய சைவத் திருமுறைகளிலே காணப்பெற்ற தத்துவக் கருத்துக்களை வகுத்தும் தொகுத்தும் சைவசித்தாந்தக் கோட்பாடாக மெய்கண்டார் வழங்கினார்.

சைவசித்தாந்த சாத்திர நூல்களுள் மிகுந்த புகழ்பெற்றது இவர் அருளிய **சிவஞான போதம்** ஆகும். அது, சித்தாந்த சாத்திர முதல் நூல் எனும் சிறப்பை உடையது; பன்னிரண்டு சூத்திரங்களால் ஆனது.

மெய்கண்டாரிடம் நாற்பத்தொன்பது மாணவர்கள் கல்வி கற்றனர் என்று கூறுவர். இவர்களுள் **அருணந்தி சிவாச்சாரியார்** தலை சிறந்தவராவார். மெய் கண்டாரின் இன்னொரு மாணவரான **மனவாசகம் கடந்தார், உண்மை விளக்கம்** என்னும் சித்தாந்த நூலை இயற்றினார். மெய்கண்டதேவர் ஐப்பசி மாத சுவாதி நட்சத்திரத்தில் இறை திருவடி அடைந்தார்.

## அருணந்தி சிவாசாரியார்

அருணந்தி சிவாசாரியார், திருத்துறையூரில் அவதரித்தவர். கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டிலே வாழ்ந்தவர். இளமையிலேயே ஆகமநூல் அறிவு மிகவும் நிரம்பப் பெற்றவர்; இதனால் **சகலாகம பண்டிதர்** எனும் சிறப்புப் பெயர் வழங்கப் பெற்றவர்; மெய்கண்டதேவரின் தந்தையான அச்சுதக்களப்பாளரின் ஆசிரியர்.

ஒருநாள், அருணந்தி சிவாசாரியார், தமது மாணவரான அச்சுதக ளப்பாளரின் மகனாகிய மெய்கண்டார், பலருக்குச் சைவசித்தாந்த பாடம் சொல்லிக் கொண்டிருப்பதைக் கண்டார்; குழந்தைதானே எனும் அலட்சியத்தோடு, ''ஆணவத்தின் சொரூபத்தை விளக்க முடியுமா?'' என, மெய்கண்டாரைக் கேட்டார். மெய்கண்டாரோ எதுவும் பேசவில்லை; தனது பிஞ்சுவிரலால் அருணந்தி சிவாசாரியாரையே சுட்டிக் காட்டினார். அந்நிலையில் மெய்ஞ்ஞான விழிப்புப் பெற்றார் அருணந்தி சிவாசாரியார்; குழந்தை என்றும் கருதாது மெய்கண்டாரைக் குருவாகக் கொண்டார்.

மெய்கண்டாரிடம் சைவசித்தாந்த உண்மைகளைப் பாடங்கேட்டு, அவரின் முதன் மாணாக்கராக விளங்கிய இவர், சிவஞான போதத்தின் வழிநூலாக, **சிவஞான சித்தியார்** எனும் பெருநூலை எழுதியருளினார்.

சைவசித்தாந்த முதனூலாகிய சிவஞான போதம் மிகவும் சுருக்கமானது; பன்னிரண்டு சூத்திரங்களால் ஆனது. அதன் பொருளை உள்ளவாறு உணர்ந்து, தத்துவ ஈடுபாடுள்ள அனைவரும் விளங்கத்தக்க வகையில் விரிவாக விளக்கி உரைத்த பெருமை, அருணந்தி சிவாசாரியார்க்கே உரியது. அவ்வகையில் சைவசித்தாந்த வரலாற்றில் இவர் அருளிய சிவஞான சித்தியார் மிகுந்த முக்கியத்துவம் பெறுகின்றது. ''சிவனுக்குமேல் தெய்வம் இல்லை; சித்திக்கு விஞ்சிய நூல் இல்லை'' என்பது ஆன்றோர் வாக்கு. இப்பெருநூல் **பரபக்கம், சுபக்கம்** எனும் இரண்டு பகுதிகளை உடையது. பிற சமய தத்துவங்களின் பொருந்தாமைகளைக் கண்டிக்கும் பகுதி பரபக்கமாகும். சைவசித்தாந்த அடிப்படைகளை விளக்கிநிற்கும் பகுதி சுபக்கமாகும்.

சிவஞான சித்தியார் தவிர, **இருபா இருபஃது** எனும் தத்துவ நூலையும் இவர் அருளினார். இதுவும் பதினான்கு சைவசித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றாக ஏற்கப்பட்ட சிறப்புடையது. சைவசித்தாந்தக் கருத்துக்களை, மாணவரின் வினா - ஆசிரியரின் விடை என்ற அமைப்பில் இந்நூல் விளக்கி உரைக்கின்றது.

புரட்டாதி மாதத்தில் வரும் பூர நட்சத்திரத்தில் அருணந்தி சிவாசாரியார் இறைவன் திருவடியை அடைந்தார்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சமயகுரவர் எனப்படுவோர் யாவர்? அவர்கள் சைவ சமயத்தை எவ்வாறு வளர்த்தனர்?
2. சந்தானகுரவர் எனப்படுவோர் யாவர்?
3. சந்தானகுரவர் என்பதன் பொருள் யாது?
4. அகச்சந்தானகுரவர் யாவர்?
5. புறச்சந்தானகுரவர் யாவர்?
6. சுவேதவனப்பெருமாளுக்கு 'மெய்கண்டார்' எனும் பெயர் எவ்வாறு ஏற்பட்டது?
7. சிவஞான போதத்தின் சிறப்பு யாது?
8. அருணந்தி சிவாசாரியாரின் குருவாக விளங்கியவர் யார்?
9. அருணந்தி சிவாசாரியார், சகலாகம பண்டிதர் என்ற பெயர் பெற்றமைக்கான காரணம் யாது?
10. சிவஞான போதத்தின் வழிநூல் யாது?
11. சுபக்கம், பரபக்கம் என்பவற்றின் உள்ளடக்கம் யாது?
12. அருணந்தி சிவாசாரியாரால் அருளப்பெற்ற நூல்கள் எவை?

## செயற்பாடு

மெய்கண்டதேவரை அருணந்தி சிவாசாரியார் குருவாக ஏற்றுக்கொண்ட சம்பவம் பற்றியறிந்து அதனை நாடகமாக நடித்துக் காட்டுக.

# 15 திருமூலர்

சைவசமய உண்மைகளை தமிழிலே எடுத்துரைத்த பெரியவர்கள் பலர். அவர்களுள் ஒருவர் திருமூலர். அவர் சைவநெறிசார்ந்த யோகியருள் ஒருவராகப் போற்றப்பெறுகிறார். அட்டமாசித்திகள் கைவரப் பெற்றோரே யோகியர் எனப்படுவர்.

திருமூலர் பெரியபுராணம் போற்றும் அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவராக விளங்குகிறார். சேக்கிழார் சுவாமிகளே திருமூலர் வரலாற்றைத் தமது பெரிய புராணத்தில் விரிவாகத் தந்தார். அதனைச் சுருக்கமாக இங்கு நோக்குவோம்.

யோகியார் ஒருவர், தமிழ்நாட்டிலே பொதிகை மலையில், சிலகாலம் தங்கியிருப்பதற்கு விரும்பிக் கயிலையினின்றும் புறப்பட்டார். வழியிலே காவிரிக் கரையிலே பசுக்கள் கூட்டமாக, கண்ணீர் வார நின்றமையைக் கண்டார். வழக்கமாக பசுக்களை மேய்த்துவரும் மூலன் என்னும் இடையன் ஏதோ காரணத்தால் இறந்துகிடந்தான். தம்மை அன்போடு பராமரித்துவந்த மூலனது இறப்பைத் தாங்கமாட்டாத பசுக்கள், உணவும் உறக்கமும் இன்றி அவ்விடத்திலேயே சுற்றிச் சுழன்று திரிவதைக் கண்ணுற்ற யோகியார், அவற்றின் துயரத்தைப் போக்க விரும்பினார். மூலன் உயிரோடு எழுந்தால் அன்றி அவற்றின் துயரம் நீங்காது என உணர்ந்த யோகியார், மூலனின் உடலுக்கு உயிர் கொடுக்க முடிவுசெய்தார். தனது உடலை மறைவான இடத்தில் விட்டு, கூடுவிட்டுக் கூடு பாயும் சித்தின் மூலம், மூலனின் உடலுட் புகுந்தார்.

மூலனது உடல் உயிர் பெற்று எழுந்தது. அதாவது மூலனது உடலில் யோகியார் எழுந்தார். மூலன் உயிர்பெற்றதாகக் கருதிய பசுக்கள் மகிழ்ச்சியோடு புல் மேய்ந்தன; மாலையானதும் தமது கன்றுகளை நினைந்து சாத்தனூரை நோக்கி நடக்கத் தொடங்கின. மூலனின் உடலுள் இருந்த யோகியாரும் அவற்றைத் தொடர்ந்து சென்றார்.

பசுக்கள் தங்கள் மேய்ப்பனின் வளவினுட் புகுந்தன. மூலனது உடலினுள் நின்ற யோகியார் அதனைப் பார்த்தபடி நின்றார். தாம் உள்ளே புகவில்லை. இதனை

அவதானித்த மூலனது மனைவி அவர் உள்ளே வராதது குறித்து வினவினாள். யோகியார் ஒன்றும் பேசாது அவ்விடத்தினின்றும் அகன்று, பொதுமடம் ஒன்றை அடைந்து, அங்கு யோக நிலையில் வீற்றிருந்தார்.

மூலனது மனைவி, செய்வது அறியாதவளாய், அடுத்த நாள் அதிகாலையில், அயலவர்களையும் அழைத்துக் கொண்டு மூலனைத் தேடியலைந்து அம்மடத்தை அடைந்தாள். யோகநிலையில் வீற்றிருந்த கோலத்தைக் கண்டு ''மூலன் யோகநிலை யுற்று விட்டான், இனி அவன் இவ்வாழ்க்கைக்கு உரியவன் அல்லன்'' என்று அயலவர்கள் தீர்மானித்தார்கள். மூலனது மனைவிக்கு ஆறுதல் கூறி, அவளை அழைத்துச் சென்றார்கள். நெடுநேரம் கழித்து யோகநிலையினின்றும் விடுபட்ட யோகியார், பசுக்கூட்டம் வந்த வழியில் நடந்து, தாம் தமது உடலை விட்டு அகன்ற இடத்தை அடைந்தார். அங்கே அவரது உடலைக் காணவில்லை. திகைத்த யோகியார் நடந்தவற்றையெல்லாம் இறைவன் திருவருளாகவே உணர்ந்தார்; திருவாவடு துறையினை அடைந்தார்; அங்கே கோயில் கொண்ட இறைவனை வணங்கினார்; கோயிலுக்கு வெளியே மேற்குத் திசையில் இருந்த அரசமரத்தின் அடியில் இறை சிந்தனையோடு சிவயோக நிலையில் அமர்ந்தார்.

அவ்வாறு அமர்ந்துகொண்டு ஊனுடம்பில் இருந்தபடியே பிறவித்துன்பத்தைப் போக்கினார். அதாவது சீவன்முத்தரானார். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு மலர்களாலான திருமந்திர மாலை என்னும் நூலை ஆண்டுக்கு ஒரு பாடல் என்ற வகையிலே மூவாயிரம் பாடல்களில் அருளினார். அதன்பின் திருக்கயிலையை அடைந்து இறைவனது திருப்பாதத்தில் ஒன்றினார்.

## திருமந்திரம்

திருமூல நாயனார் அருளிச்செய்த திருமந்திரம், சைவத்திருமுறையுள் பத்தாவதாக அமையப்பெறுகிறது; தோத்திர நூலாகவும் சாத்திர நூலாகவும் விளங்கு கின்றது; **தமிழாகமம்** என்று சிறப்பிக்கப்படுகிறது. திருமந்திரம் முன்னுரையாய் அமைந்த பாயிரத்தையும் தந்திரம் என்ற பெயரிலான ஒன்பது பிரிவுகளையும் கொண்டமைந்துள்ளது.

தந்திரம் என்பது ஆகமத்தைக் குறிக்கும் ஒரு சொல்லாகும். ஒன்பது ஆகமங்களின் சாராம்சங்கள் ஒன்பது தந்திரங்களிலும் அமைந்துள்ளன என்பர். அத்தந்திரங்களில், உலக வாழ்க்கைக்குத் தேவையான ஒழுக்கங்கள், உள்பொருள்

பற்றிய விளக்கங்கள், ஆன்மாக்கள் இறைவனை அடைவதற்கு உதவும் மார்க்கங்கள், சிவசின்னங்களின் முக்கியத்துவம், குருலிங்கசங்கம வழிபாடு, முத்தி முதலான பல விடயங்கள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

திருமூலர், போலித்தனமான சமய வாழ்க்கையைக் கடிந்துரைக்கிறார்; தர்மத்தை வலியுறுத்துகிறார்; நீதி தவறாது நடுநிலைமையோடு வாழும் வாழ்வையே சமய வாழ்வாக வலியுறுத்துகிறார்.

நடுவு நின்றார்க்கு அன்றி ஞானமும் இல்லை
நடுவு நின்றார்க்கு நரகமும் இல்லை
நடுவு நின்றார் நல்ல தேவரும் ஆவர்
நடுவுநின்றார் வழி நானும் நின்றேனே.

'அன்பே சிவம்' என்பது திருமூலர் வலியுறுத்தும் பேருண்மையாகும். பொய்யான விரதங்களாலும் ஆசாரங்களாலும் இறைவனை அடைய முடியாது. உண்மையான அன்பினாலே - பக்தியினாலேயே இறைவனை அடையலாம் என்கிறார் திருமூலர்.

என்பே விறகாய் இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போல் கனலில் பொரிய வறுப்பினும்
அன்போடு உருகி அகம் குழைவார்க்கு அன்றி
என்போல் மணியினை எய்த ஒண்ணாதே.

இறைவனிடம் போலவே சகல சீவராசிகளிடமும் அன்பு வைக்க வேண்டும். இறைவனை வணங்குவது, உயிர்கள் மேல் இரக்கம் காட்டுவது, ஏழைகளுக்கு உதவுவது, பிறரை அன்போடு அரவணைப்பது என்று இத்தகைய காரியங்களைச் செய்வதற்கு பொருளாதார வசதியோ ஆளணியோ தேவையில்லை; மனம் இருந்தால் அவை எல்லோருக்கும் ஆகக்கூடிய இலகுவான கருமங்களே.

யாவர்க்கும் ஆம் இறைவற்கு ஒரு பச்சிலை
யாவர்க்கும் ஆம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி
யாவர்க்கும் ஆம் பிறர்க்கு இன்னுரைதானே.

உயர்வான கருத்துக்களை மிக எளிய முறையில் எடுத்துரைக்கும் திருமந்திரம், நாம் எல்லோரும் படித்துப் பயன் பெறவேண்டிய நூலாகும்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. யோகியர் எனப்படுவோர் யாவர்?
2. பசுக்களின் துயர் நீக்க யோகியார் கையாண்ட உத்தி யாது?
3. யோகியார் திருமூலர் என்ற பெயரைப் பெற்றதற்கான காரணம் யாது?
4. திருமந்திரத்தின் சிறப்புகள் யாவை?
5. இறைவனை அடைவதற்கு திருமூலர் கூறும் வழி யாது?
6. திருமந்திரத்தின் பகுதிகள் தந்திரம் என்ற பெயரால் சுட்டப்பெறுவதன் காரணம் யாது?
7. திருமந்திரத்தில் எடுத்துரைக்கப்பட்டுள்ள விடயங்கள் யாவை?

## செயற்பாடு

குழுவாக இணைந்து மும்மூன்று திருமந்திரப் பாடல்களைத் தொகுத்துக் காட்சிப்படுத்துக.

# 16 சுவாமி விபுலாநந்தர்



சைவமும் தமிழும் தழைக்கப் பணியாற்றிய ஈழத்துச் சான்றோர்களுள் முக்கியமான ஒருவர் சுவாமி விபுலாநந்தர். அவர் ஆற்றிய பணிகள் பல திறப்பட்டன. சமயம், மொழி, இலக்கியம், கலை, கல்வி முதலான பல துறை சார்ந்தனவாக இருப்பினும் அவை எல்லாவற்றுக்கும் அவரது ஆன்மீக உணர்வே ஆதாரமாய் அமைந்துள்ளது. ஆன்மீகத்துக்கு அப்பாற்பட்டதாக அவருடைய வாழ்க்கையில் எதுவுமே இல்லை. அத்தகைய சுவாமிகளின் வாழ்க்கையைத் தரிசிக்கும் போக்கிலே அவர் ஆற்றிய பணிகளுள் பிரதானமான சிலவற்றை இங்கு நோக்குவோம்.

இலங்கையின் கிழக்குப் பகுதியில் மட்டக்களப்பு மாநகருக்குத் தெற்காக சுமார் 35 கி.மீ. தூரத்தில் கடலோரமாக அமைந்துள்ளது காரைதீவு. அங்கு சாமித்தம்பி -கண்ணம்மை தம்பதிக்குத் தவப்புதல்வனாக 03.05.1892 இல் சுவாமி விபுலாநந்தர் பிறந்தார். மயில்வாகனம் என்பது அவரது இயற்பெயர்.

மயில்வாகனம், தனது கிராமத்திலேயே ஆரம்பக்கல்வியைப் பெற்றார். ஆங்கில வழிக் கல்வியை கல்முனை மெதடிஸ்த ஆங்கிலப் பாடசாலையிலும் பின் மட்டக் களப்பு புனித மைக்கேல் கல்லூரியிலும் பெற்றுக்கொண்டார். 1908இல் கேம்பிறிச் சீனியர் (Cambridge Senior) தேர்வில் சித்தியடைந்ததும், தான் கற்ற கல்லூரிகளில் சிறிதுகாலம் ஆசிரியராகக் கடமையாற்றினார். பின், கொழும்பு ஆங்கில அரசினர் பயிற்சிக் கலாசாலையில் ஆசிரியப் பயிற்சிபெற்று, மீண்டும் ஆசிரியப் பணியில் இணைந்து கொண்டார். 1915இல் கொழும்பு தொழில்நுட்பக் கல்லூரியில் இணைந்து, விஞ்ஞானத்தில் பட்டயச் சான்றிதழ் (Diploma in Science) பெற்றார். கொழும்பில் இருந்த காலத்தில், தமிழறிஞர்கள் பலரோடு அவருக்குத் தொடர்பு உண்டானது. அவர்களிடம் பழந்தமிழ் இலக்கியங்களையும் இலக்கணத்தையும் பயின்றார். வடமொழியிலும் தேர்ச்சிபெற்றார். அவற்றின் காரணமாக மதுரைத் தமிழ்ச்சங்கப் பண்டிதர் பரீட் சைக்குத் தோற்றி, சிறப்புச்சித்தி எய்தினார். அதனால் ‘பண்டிதர் மயில்வாகனனார்’ என அழைக்கப்படலானார்.

மயில்வாகனனார் விஞ்ஞானத்தில் தேர்ச்சி பெற்றவராதலால் 1917இல் யாழ்ப்பாணம் புனித சம்பத்திரிசியார் கல்லூரியில், விஞ்ஞான ஆசிரியரானார். அங்கிருந்த காலத்திலேயே அவர், இலண்டன் பல்கலைக்கழக விஞ்ஞானமாணிப் பரீட்சைக்குத் தோற்றி (B.Sc.) பட்டதாரியானார். 1920இல் மானிப்பாய் இந்துக் கல்லூரியின் அதிபர் பொறுப்பினை ஏற்றுக்கொண்டார். அப்பொறுப்பினை ஏற்குமாறு அவரை வேண்டியவர், அக்கல்லூரியின் முகாமையாளரும் சைவசிந்தாந்தப் புலமையாளருமான மு.திருவிளங்கம் அவர்கள். அறிவுநாட்டம் காரணமாக இருவரும் நெருங்கிய நண்பர்களானார்கள். திருவிளங்கம் அவர்கள், எதிர்பாராத வகையில் காலமாக நேர்ந்தது. அவரது இழப்பு, மயில்வாகனனாரின் உள்ளத்தில் தீவிரமான துறவு நாட்டத்தை ஏற்படுத்தியது. அக்காலகட்டத்தில் அவர் யோகர் சுவாமிகளோடும் தொடர்புபட்டிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

உலகியலில் சலிப்புற்ற மயில்வாகனனார் தமது பதவியைத் துறந்து, 1922 இல் சென்னை நகரை அடைந்து, அங்கே மயிலாப்பூரில் அமைந்த இராமகிருஷ்ண மடத்தில் இணைந்து கொண்டார். அக்காலத்தில் இராமகிருஷ்ண சங்கம், உலகளாவிய நிலையில் செல்வாக்குப் பெற்றிருந்தது. அச்சங்கத்தைச் சார்ந்த துறவிகள் பலர், இலங்கை க்கு விஜயம் செய்து இந்துமக்கள் மத்தியில் ஆன்மிக உணர்வை வளர்த்தார்கள். மயில்வாகனனாரின் துறவு மனப்பான்மை வலுப்பெறுவதற்கு அவர்களது போதனை களும் காரணமாய் அமைந்தன. இராமகிருஷ்ண சங்கத்தினரால் உண்டான உத்வேகத்

தின் காரணமாகவே தமது துறவு வாழ்க்கைக்கான களமாக இராமகிருஷ்ண மடத்தை அவர் தேர்ந்துகொண்டார்.

அங்கு, ஆன்மிகப் பயிற்சிகளை முறையாகப் பெற்றுக்கொண்ட மயில் வாகனனார், **பிரபோதசைதன்யர்** என்ற பிரமச்சரிய நாமத்தோடு பணியாற்றினார். இராமகிருஷ்ண சங்கம் வெளியிட்டுவந்த **இராமகிருஷ்ண விஜயம்** என்னும் தமிழ் மொழிமூலச் சஞ்சிகைக்கும் **வேதாந்தகேசரி** என்னும் ஆங்கில மொழிமூலச் சஞ்சி கைக்கும் ஆசிரியராக விளங்கி, ஆன்மிக அறிவினைப் பரப்பினார்.

பிரபோதசைதன்யர், 1924இல் சித்திராபௌர்ணமி தினத்தில் துறவறத்தை மேவினார். மயிலாப்பூர் இராமகிருஷ்ண மடத்தின் தலைவராக விளங்கியவரும் இராமகிருஷ்ண பரமஹம்சரின் நேரடிச் சீடர்களுள் ஒருவருமான **சுவாமி சிவாநந்தர்,** அவருக்கு ஞானோபதேசம் செய்து விபுலாநந்தர் என்னும் துறவுத் திருநாமத்தைச் சூட்டினார். அன்றுமுதல் அவர் சுவாமி விபுலாநந்தர் ஆனார்.

தமது தீட்சாகுருவான சுவாமி சிவாநந்தரின் பணிப்பின்பேரில், 1925இல் இலங்கை திரும்பிய விபுலாநந்தர், இங்கே இராமகிருஷ்ண சங்கத்தின் சார்பாக பல பாடசாலைகளை மட்டக்களப்பு, திருகோணமலை முதலான இடங்களில் நிறுவினார். அவற்றுள் மட்டக்களப்பு கல்லடியில் நிறுவிய பாடசாலைக்கு **சிவாநந்த வித் தியாலயம்** என்று, தமது குருவின் பெயரையே சூட்டினார். இராமகிருஷ்ண சங்கத்தின் பாடசாலைகளின் பொது முகாமையாளராகவும் அவற்றுள் சிலவற்றின் அதிபராகவும் கடமையாற்றினார். இராமகிருஷ்ண சங்கத்தினூடாக இலங்கையில் வெளிவந்த **விவேகாநந்தன்** இதழின் ஆசிரியராகவும் 1926இலிருந்து கடமையாற்றினார்.

தமிழ் நாட்டில் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் தாபிக்கப்பட்டு, அங்கு தமிழ்த்துறை நிறுவப்பட்ட வேளையில் அத்துறைக்கான பேராசிரியராக சுவாமி விபுலாநந்தரே நியமிக்கப்பட்டார் (1931-1933). அதன்மூலம் உலகில் தமிழுக்கான முதலாவது பேராசிரியர் என்ற பெருமைக்கும் உரியவரானார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இருந்த காலத்தில், அவர் பல்வேறு ஆராய்ச்சிகளில் ஈடுபட்டார். அவற்றுள் பண்டைத் தமிழரின் இசை மரபு பற்றிய ஆராய்ச்சி, பின்னர் **யாழ்நூல்** என்ற பெயரில், நூலாக வெளிவந்தது.

சுவாமிகள், தமிழ்நாட்டில் இருந்த காலப்பகுதிகளில் மதுரைத் தமிழ்ச்சங்கம், கரந்தைத் தமிழ்ச்சங்கம், சைவசித்தாந்த மகாசமாசம், சென்னை மாகாணத் தமிழர்

சங்கம், சென்னைப் பல்கழைக்கழகம் முதலான பிற நிறுவனங்களோடும் தொடர்புபட்டு பல பணிகளை மேற்கொண்டார். நாடகத்துறை தொடர்பான ஒரு ஆராய்ச்சியை மேற்கொண்டு மதுரைத் தமிழ்ச்சங்கத்தில் ஆற்றிய ஒரு சொற்பொழிவு, 1926இல் அச்சங்கத்தால், **மதங்கசூளாமணி** என்ற பெயரில் நூலாக வெளியிடப் பட்டமை குறிப்பிடத்தக்கது. மேற்படி நிறுவனங்கள் பலவற்றின் மாநாடுகளில் சுவாமிகள் தலைமைவகித்தும் சொற்பொழிவாற்றியும் சிறப்பித்தார். அவற்றுள் 1936 டிசம்பர் மாதம் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் பச்சையப்பன் கல்லூரியில் இடம்பெற்ற கலைச்சொல்லாக்க மாநாட்டுக்குத் தலைமை வகித்தமை குறிப்பிடத்தக்கது. 1937இல் திருக்கயிலாயத்துக்கு யாத்திரை மேற்கொண்ட சுவாமிகள் தாய்நாடு திரும்பினார்.

சுவாமிகள் இலங்கை திரும்பியபின் சிறிது காலத்தில் மீண்டும் இந்தியாவுக்குச் செல்லவேண்டி ஏற்பட்டது. இராமகிருஷ்ண சங்க வெளியீடாக, இமயமலைச் சாரலில் அமைந்த மாயாவதி ஆசிரமத்திலிருந்து வெளிவந்து கொண்டிருந்த **பிரபுத்தபாரத** என்ற இதழின் ஆசிரியர் பொறுப்பினை ஏற்குமாறு வந்த அழைப்பை ஏற்று, 1939-1941 காலப் பகுதியில் மாயாவதி ஆசிரமத்தில் தங்கியிருந்து பணியாற்றினார்.

அக்காலகட்டத்தில் (1942) இலங்கைப் பல்கலைக்கழகக் கல்லூரி, பல்கலைக் கழகமாகத் தரமுயர்த்தப்பட்டது. அங்கு 1943இல் நிறுவப்பட்ட தமிழ்த்துறைக்கான பேராசிரியர் பதவியைப் பொறுப்பேற்குமாறு சுவாமிகள் கேட்டுக்கொள்ளப்பட்டார். மாயாவதியிலிருந்து நாடு திரும்பிய சுவாமிகள், அப்பதவியைப் பொறுப்பேற்றதன் மூலம் இலங்கைப் பல்கலைக் கழகத்தில் தமிழுக்கான முதலாவது பேராசிரியர் என்ற சிறப்புக்கு உரியவரானார். 1947 வரை அப்பதவியினை அவர் வகித்தார். தமிழ் நாட்டிலிருந்த காலத்தில் தொடங்கிய இசையாராய்ச்சி முற்றுப்பெற்ற நிலையில் **யாழ்நூல்** வெளியானது. அதன் அரங்கேற்றம் 1947 ஜூன் மாதம் தமிழ்நாடு திருக்கொள்ளம்பூதூர் ஆலயத்தில் வெகு விமரிசையாக இடம்பெற்றது. அந்த விழாவுக் குச் சென்று திரும்பிய சுவாமிகள், ஜூலை மாதம் 19 ஆம் திகதி இவ்வுலகை நீத்தார்.

சுவாமிகள், இளமைக் காலம் முதற்கொண்டு கல்வியில் நாட்டம் கொண்ட வராய் தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம் முதலான மொழிகளில் தேர்ச்சி பெற்றவராய் விளங்கியவர்; தமது பன்னிரண்டாவது வயதுமுதலாகவே கவிபாடுவதில் வல்லவராகத் திகழ்ந்தவர்; பத்திரிகை ஆசிரியராக, பாடசாலை நிறுவுநராக, ஆசிரியராக, அதிபராக, பல்கலைக்கழகப் பேராசிரியராக, ஆய்வாளராக விளங்கியவர்; இராமகிருஷ்ண மடம்

முதலான சமய நிறுவனங்கள், ஆரிய திராவிட பாஷாபிவிருத்திச் சங்கம் முதலான கல்வி நிறுவனங்களின் வளர்ச்சியில் பங்காளராகப் பணியாற்றியவர்; சமூகத் தொண்டராக, சுதந்திர ஆர்வலராகத் திகழ்ந்தவர். அவர் பல நூல்களை, ஏராளமான கட்டுரைகளை தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதிச் சென்றுள்ளார். இனிமையும் கருத்தாழமும் மிக்க கவிதைகளையும் விட்டுச் சென்றுள்ளார். அவையெல்லாம் எமக்கு என்றும் வழிகாட்ட வல்லன.

வெள்ளை நிற மல்லிகையோ வேறெந்த மாமலரோ
வள்ளல் அடியிணைக்கு வாய்த்த மலர் எதுவோ?
வெள்ளை நிறப் பூவும் அல்ல வேறெந்த மலரும் அல்ல
உள்ளக் கமலமடி உத்தமனார் வேண்டுவது.

- சுவாமி விபுலாநந்தர்

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. மயில்வாகனனார் துறவில் நாட்டம் கொள்ளத் தூண்டிய சம்பவம் யாது?
2. அவரின் ஆன்மிக வாழ்க்கைப் பயணத்துக்கு இராமகிருஷ்ண மடம் எவ்வாறு உதவியது?
3. சுவாமி விபுலாநந்தர் ஆசிரியராகத் திகழ்ந்த பத்திரிகைகள் யாவை?
4. சுவாமிகள் தொடர்புபட்ட பாடசாலைகளைப் பட்டியற் படுத்துக.
5. சுவாமிகள் நாடகத்துறை சார்ந்தும் இசைத்துறை சார்ந்தும் எழுதிய நூல்கள் யாவை?
6. மயில்வாகனனார் பல்வேறு துறைகளில் பெற்றிருந்த பாண்டித்தியம் பற்றி எடுத்துக் காட்டுக.

## செயற்பாடு

சுவாமி விபுலாநந்தரின் கல்விப்பணி, சமயப்பணி என்பனபற்றி குழுநிலையில் கலந்துரையாடி உரை நிகழ்த்துக.

# 17 இறைவனும் ஆன்மாவும்



உலகத்துப் பொருள்களை மூன்று வகையாகப் பகுக்கலாம்.

1. **அறிவிக்காமலே அறியும் பொருள்**
2. **அறிவித்தால் அறியும் பொருள்**
3. **அறிவித்தாலும் அறியமாட்டாத பொருள்**

இவற்றுள் முதலாவது வகையைச் சார்ந்த பொருள் ஒன்றே. அதுவே பரம்பொருள் - கடவுள் - பதி என்றெல்லாம் சுட்டப் பெறுவது. அது **சித்துப்பொருள்;** அறிவே வடிவமானது (சித்து -அறிவு).

இரண்டாவது வகையைச் சார்ந்தவை உயிர்கள். அவை பசுக்கள், ஆன்மாக்கள், ஜீவன்கள் என்றும் சுட்டப்பெறுபவை. அவை எண்ணற்றவை; தாமாய் எதனையும் அறியமாட்டாது, அறிவித்தால் மாத்திரம் அறியக்கூடியவை.

மூன்றாவது வகையைச் சார்ந்தவை பாசங்கள். ஆன்மாவைப் பீடித்திருக்கும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்றும் பாசங்கள் எனப்படும். பாசம் என்றால் கட்டு என்பது பொருள். அவை ஆன்மாவை அறியாமையிலே கட்டிவைப்பன. ஆன்மாக்களைப் பற்றியிருக்கும் அழுக்குகள் என்ற பொருளிலே அவற்றை மலம் என்றும் குறிப்பிடுவர். அவை அறிவற்றவை; அறிவித்தாலும் அறியமாட்டாதவை. ஆதலால் அவற்றை **அசித்து** என்பர்.

ஆன்மாக்கள் தாமாகவே அறியக்கூடியன அல்ல என்பதால் அசித்தாகவும் அறிவித்தால் அறிய வல்லன என்பதால் சித்தாகவும் விளங்குபவை. அதனால் அவற்றை **சிதசித்து** (சித் +அசித்து) என்பர். கடவுள் **சுத்தசித்து** ஆவார்.

சைவசித்தாந்தம் பதி, பசு, பாசம் என்னும் மூன்றையும் உள்பொருள்களாகக் கொள்கின்றது. அதாவது, அவை என்றும் உள்ள பொருள்கள் - நித்தியமானவை - அவற்றுக்கு அழிவில்லை. அவை **சத்துப் பொருள்கள்.** சத்து என்பதன் கருத்து உள்ள பொருள் என்பதாகும்.

பதி, பசு, பாசம் ஆகிய மூன்றும் உள்ள பொருள்களே - சத்துப் பொருள்களே யெனினும் பதியின் (கடவுளின்) பெருமையோடு ஒப்பிட்டு நோக்கும்போது ஆன்மா வானது இல்லாத பொருள் என்று நினைக்கத்தக்கதாய் இருக்கிறது. எவ்வாறு என்றால், நட்சத்திரங்கள் இரவிலே ஒளி தருவதுபோல பகலிலும் ஒளிதருகின்றன. ஆயினும் சூரியனுடைய ஒளி அவற்றின் ஒளியைவிட பலமடங்கு பிரகாசமாய் இருப்பதால், நட்சத்திரங்களின் ஒளியை நம்மால் உணர முடிவதில்லை. முழுவதும் சூரியனுடைய ஒளி என்றே எண்ணும்படியாக உள்ளது. இத்தகைய ஒப்பீட்டின் அடிப்படையிலேயே கடவுளை சத்து என்றும் ஆன்மாவை அசத்து என்றும் சொல்கிறோம். இவ்வாறாகவே பாசங்களையும் ஆன்மாவையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது பாசங்கள் அற்பமான வையாகவும் ஆன்மா மதிப்பு மிக்கதாகவும் தோன்றுகின்றன. அந்நிலையில் பாசங்கள் அசத்து என்றும் ஆன்மா சத்து என்றும் கொள்ளப்படுகிறது. ஒரு நிலையில் ஆன்மா சத்தாகவும் மற்றொரு நிலையில் அதுவே அசத்தாகவும் உணரப்படுவதால் அதனை **சதசத்து** (சத்+அசத்து) என்று குறிப்பிடுவர்.

கடவுள், ஆன்மா, பாசம் மூன்றும் தனித்தனியே நோக்கும்போது சத்துப் பொருள்களே. கடவுள் **சுத்தசத்து** ஆவார்.

ஆன்மாக்கள் பாசங்களாலே கட்டுப்பட்டிருப்பதால், அவை பேரின்பத்தை அனுபவிக்காமல் இருக்கின்றன. உலகிலே இன்பம் என்று அவை அனுபவிக்கும்

விடயங்கள், உண்மையில் துன்பங்களுக்குக் காரணமானவையே. (உதாரணமாக, சுவையான உணவை நாம் இன்பம் என்று கருதுகிறோம். ஆனால் அது உண்மையான இன்பம் அன்று. ஏனெனில் அந்தச் சுவையான உணவு நோய்க்கு காரணமாகும். அந்தச் சுவையான உணவு கிடைக்காது போகலாம். அப்போதெல்லாம் அது துன்பத்துக்கு காரணமாகிவிடுகிறது. அன்றியும் அந்த உணவின் சுவை சொற்பநேரமே எமக்கு இன்பத்தைத் தருகிறது. உலகப் பொருள்களின்மேல் வைக்கும் ஆசை துன்பத்துக்கே காரணமாய் முடிகிறது.) ஆகையால் உலக இன்பங்களெல்லாம் துன்பத்தோடு சம்பந்தப்பட்டனவே. பாசங்களைச் சார்ந்து நிற்கும் வரையில், ஆன்மாவுக்கு உண்மையான இன்பம் (சுத்த இன்பம்) இல்லை. உண்மையான இன்பம் கடவுளைச் சார்ந்து நிற்கும்போதே கிட்டும். கடவுள் இன்பமே வடிவானவர். அவர் **சுத்த ஆனந்தம்** ஆனவர்.

இவ்வாறு சத்தாயும் சித்தாயும் ஆனந்தமாயும் உள்ள பொருளே, பதி என்றும் கடவுள் என்றும் பரம்பொருள் என்றும் சுட்டப்பெறுகிறது. கடவுளுக்கு இருவகையான நிலைகள் - இலக்கணங்கள் சொல்லப்படுகின்றன.

1. **சொரூபலக்கணம்**
2. **தடத்தலக்கணம்**

சொரூபலக்கணமே கடவுளின் உண்மையான நிலையாகும் - ஸ்வரூபமான (சொரூப) இலக்கணமாகும். கடவுள், குணம் குறிகளுக்கு அப்பாற்பட்டவராய், மனம், வாக்கு காயங்களுக்கு எட்டாதவராய், ஆனந்தமயமானவராய், அறிதற்கு அரியவராய், உவமை இல்லாதவராய், அதிசூக்குமராய், விருப்பு வெறுப்புகளுக்கு அப்பாற் பட்டவராய், ஆன்மாக்களின் முத்திக்கு இருப்பிடமாய் விளங்குபவர். சைவசித்தாந்தம் சொரூபலக்கண நிலையில் கடவுளை **பரமசிவம்** என்று கூறும்.

மனம், வாக்கு, காயங்களுக்கு எட்டாத பரநிலையில் - சொரூப நிலையில் உள்ள இறைவன், ஆன்மாக்களை அவற்றைப் பீடித்துள்ள மலங்களினின்றும் விடுவித்து அவற்றுக்கு முத்திப்பேற்றினை வழங்க வேண்டும் என்ற பெருங்கருணையினாலே, தன்னுடைய பரநிலையினின்றும் இறங்கி, அருவம், உருவம், அருவுருவம் என்னும் மூவகைத் திருமேனிகளைக் கொண்டருளுகிறார்.

இறைவனின் அத்தகு நிலையே தடத்தநிலை எனப்படுகிறது. தடத்த நிலையிலேயே இறைவன் பஞ்சகிருத்தியங்களை (படைத்தல், காத்தல், அழித்தல்,

மறைத்தல், அருளல்) செய்தருளுகிறார். தடத்தநிலையிலேயே நாம் இறைவனுக்குக் குணங்குறிகளைக் கற்பிக்கிறோம்.

பாசங்களாற் பந்திக்கப்பட்ட ஆன்மாக்களே பசுக்கள் எனப்படுவன. ஆன் மாக்கள் அநாதியானவை, அநாதிகாலந்தொட்டே பாசத்தாற் கட்டுண்டு கிடப்பவை. ஆன்மாக்கள் எண்ணற்றவை; அறிவித்தால் அறியக்கூடியவை; பாசத்தையோ பதியையோ சார்ந்து நிற்பவை; சூக்குமமானவை; தனித்தனிச் சரீரங்களில் நின்று வினைகளைச் செய்து வினைப்பயன்களை அனுபவிப்பவை.

ஆன்மா அநாதியானது. ஆதலால் அதைப் பந்தித்திருக்கும் ஆணவமும் அநாதி யானதே. ஏனெனில் **ஆணவம்** அறிவில்லாத பொருள். ஆகையால் அது தானாகச் சென்று ஆன்மாவைப் பீடிக்காது. அது தீமையான பொருள். ஆதலால் கருணையே வடிவான கடவுள், அதனை ஆன்மாவோடு சேர்க்கமாட்டார். ஆதலால், ஆணவம் அநாதியாகவே ஆன்மாவோடு சேர்ந்துநிற்பதாகும். அதனால் அது **மூலமலம்** எனப் படும்.

ஆன்மாவை அநாதிகாலந்தொட்டுப் பீடித்திருக்கும் ஆணவ மலத்தை நீக்குவதற்காக, கடவுள் ஆன்மாக்களுக்குப் பிறவிகளைக் கொடுக்கிறார். பிறவிக்கு ஆதாரமான தனு, கரண, புவன, போகங்களைக் கொடுக்கிறார். பிறவியும் அனாதி யானதே. அதாவது, ஆன்மாக்களாகிய நாங்கள் இதற்கு முன்பும் பல பிறவிகளை எடுத் திருக்கிறோம். ஏனெனில், கடவுள் எப்போதும் இரக்கமே வடிவாய்த் திகழ்பவர். ஆதலால் ஆணவத்தினின்றும் எம்மை விடுவிப்பதற்காக எப்போதோ எமக்குப் பிறவியைத் தந்திருப்பார். பிறவிகள் எண்ணில்லாதவை. ஆணவம் வலிகுன்றிய நிலையிலேயே பிறவி நீங்கும்; **முத்தி** கைகூடும்.

பிறவி எப்போது உண்டோ அப்போதே செய்யப்படும் வினையும் உண்டு. அந்த வினைகளே கன்மம் எனப்படுகின்றன. கன்மமானது மனம், வாக்கு, காயங்களாற் செய்யப்படும் செயல்கள் ஆகும். அவை நல்வினை, தீவினை என இருவகைப்படும். இரு வினைகளும் பிறவிக்குக் காரணமாய் அமைகின்றன.

'நான் செய்கிறேன்' என்ற எண்ணத்தோடு - பற்றோடு செய்யும் வினைகளே பிறவிக்குக் காரணமாய் அமைவன. அவ்வாறன்றி 'கடவுளுடைய திருவருள் செய்விக் கின்றது' என்று, செயலைக் கடவுளிடம் ஒப்பித்துவிட்டால், அது நிலையற்ற உலக இன்பங்களைத் தராமல், நிலையான இன்பமாகிய முத்திக்குத் தகுதியுடைய வராக்கும்.

எந்தப் பற்றும் அற்ற நிலையிலே வினை ஆற்றும்போது ஆன்மாவைக் கன்மம் பீடிப்பதில்லை. ஆதலால் பிறவித்துன்பம் இல்லாதுபோகும்.

பசுக்கள் அநாதி காலமாகவே பாசங்களாற் கட்டுப்பட்டவை என அறிந்தோம். பசுவைப் பீடித்த பாசங்களின் அடிப்படையில், பசுக்கள் மூவகையாகக் கொள்ளப் படும். ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களாலும் பீடிக்கப்பட்ட ஆன்மாக்களை ***சகலர்*** என்பர். ஆணவம், கன்மம் என்னும் இரு மலங்களாற் பீடிக்கப்பட்ட ஆன்மாக்களை **பிரளயாகலர்** என்பர். ஆணவம் என்னும் ஒரு மலத்தாற் பீடிக்கப்பட்ட ஆன்மாக்கள் **விஞ்ஞானகலர்** எனப்படுவன.

ஆன்மாக்கள், மூலமலமாகிய ஆணவ மலத்தினின்றும் விடுபடுவதற்கு, அவை தாம் செய்த வினைப்பயன்களை அனுபவிக்கவேண்டும். அப்படி வினைகளைச் செய்வதற்காகத்தான் இறைவன் ஆன்மாக்களைச் சரீரங்களோடு கூடிப் பிறக்கச் செய்தலாகிய படைத்தல் தொழிலைச் செய்தருளுகின்றான். முன்செய்த கன்மத் தின் பலன்களாகிய இன்ப துன்பங்களை அனுபவிப்பதற்காகக் காத்தல் என்னும் தொழிலைச் செய்தருளுகிறான். பிராரத்த கன்மம் முடிந்தவுடன் தூலவுடம்பு மாத்திரம் அழிக்கப்படும். வேலை செய்து களைத்தவன், சும்மா இருந்து ஆறுதலெடுப்பதுபோல் பிறந்தும் இறந்தும் பல கன்மங்களைச் செய்தும் அனுபவித்தும் இளைத்த உயிர்கள், சில காலம் ஆறியிருக்கும்படியாகவே இறைவன் அழித்தல் என்னும் தொழிலைச் செய்தருளுகிறான்.

பல பிறவிகளுக்குட்பட்ட ஆன்மாக்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நால்வகை மார்க்கங்களைப் பின்பற்றி பக்குவ நிலையை அடையும்போது இருவினை ஒப்பு நிலையை அடைகின்றன. ஆன்மாக்கள், ஆணவமலத்தால் விளையும் குற்றங்களினின்றும் விடுபட்டு சுத்தம் அடையும்போது, உலக இன்பத் தைத் தரும் புண்ணியத்திலாவது துன்பத்தைத் தரும் பாவத்திலாவது மனம் செல்லாது, சிவஞானத்தைப் பெறும் காரியத்திலே மனம் செல்லும். இதுவே இருவினையொப்பு நிலை எனப்படும். இருவினை ஒப்பு ஏற்பட ஆணவமலம் வலிகுன்றும் (இது மலபரிபாகம் எனப்படும்). இதுவே மறைத்தல் என்னும் தொழிலாகும்.

இந்த நான்கு தொழில்களதும் பயனாக, ஆணவமலம் வலி கெட்டு நிற்கும்போது, இறைவன் மற்றைய மலங்களையும் நீக்கி, மெய்ஞ்ஞானத்தை அருளுகிறார். இந்நிலையில் இறைவனது அருள் ஆன்மாமீது பதிகிறது. இது அருளல் (சத்திநிபாதம்) எனப்படும். ஆகவே, இறைவன் ஐந்தொழிலால் ஆன்மாக்களை உய்திபெறச் செய்கிறான்.

இறைவனது அருள்மூலம் இறைவனை அடைதலே ஆன்மாக்களின் உயர் குறிக்கோளாகும். இதனை அடைய ஆன்மாக்களும் முயலவேண்டும் இறைவனும் அருள வேண்டும்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சித்து, அசித்து, சிதசித்து என்பதன் பொருளை விளக்குக.
2. சைவசித்தாந்தம் கூறும் முப்பொருள்களும் எவை ?
3. ஆன்மாக்கள் பேரின்பத்தை அனுபவிக்க முடியாமலிருப்பதற்கான காரணம் யாது ?
4. கடவுளுக்குரிய இரு நிலைகளும் யாவை ?
5. இறைவனின் மூவகைத் திருமேனிகளும் யாவை ?
6. ஆன்மாவின் இயல்புகள் யாவை ?
7. ஆன்மாக்களை அநாதிகாலமாகப் பீடித்திருக்கும் மலம் யாது ?
8. மூவகை ஆன்மாக்களும் எவை ?
9. இறைவனின் ஐந்தொழில்களும் எவை ? அவை எவ்வாறு ஆன்மாக்களை உய்தி பெறச் செய்கின்றன ?
10. பற்றற்ற வினையை எவ்வாறு ஆற்றலாம் ?

## செயற்பாடு

பதி, பசு, பாசம், வினைகள், மறுபிறப்பு, முத்தி, ஐந்தொழில், இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் பற்றிக் கலந்துரையாடிக் குறிப்பு எழுதுக.

# 18 திருவருட்பயன்



## 1. பதிமுது நிலை

1. அகர வுயிர்போ லறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கு நிறைந்து.

*நிகரில் இறை அகர உயிர்போல் நிற்கும்;*

*அறிவாகி நிற்கும்; எங்கும் நிற்கும்; நிறைந்து நிற்கும்.*

**நிகரில் இறை** - ஒப்பில்லாத இறைவன்,

**அகரவுயிர்போல் நிற்கும்** - எழுத்துக்களுக்கு அகரவுயிர் இன்றியமையாதது போல எல்லாப் பொருளுக்கும் இன்றியமையாததாகி நிற்கும்,

**அறிவாகி நிற்கும்** - சித்து, அசித்து இரண்டிற்கும் உள்ளறிவாகி நிற்கும்,

**எங்கும் நிற்கும்** - ஆன்மாக்களின் அறிவு விளங்குமிடமெங்கும் நிற்கும்,

**நிறைந்து நிற்கும்** - சர்வ வியாபியாகி அத்துவிதமாகிக் கலந்து நிற்கும்.

*கடவுள் சர்வ வியாபகர்.*

---

2. தன்னிலமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி
பின்னமிலா னெங்கள் பிரான்.

*எங்கள் பிரான், தன்னிலைமை மன்னுயிர்கள் சார*
*தரும் சத்தி பின்னம் இலான்.*

**எங்கள் பிரான்** - எங்கள் தலைவன்,

**தன் நிலைமை** - தனது சிவமாந்தன்மையை,

**மன்னுயிர்கள் சார** - நித்தியமான உயிர்கள் சார்ந்து அதன் வண்ணமாகும் பொருட்டு,

**தரும் சத்தி பின்னம் இலான்** - உபகரிக்கின்ற அருட்சத்தியின் வேறாகாதவன்.

*கடவுள் உயிர்களை உய்யக்கொள்ளும் சத்தியோடு கூடியவர்; கருணா மூர்த்தி.*

---

3. பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றி
னருமைக்கு மொப்பின்மை யான்.

*பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றின்*
*அருமைக்கும் ஒப்பு இன்மையான்.*

**பெருமைக்கும்** - பெருமையினாலும்

**நுண்மைக்கும்** - நுண்மையினாலும்

**பேரருட்கும்** - பெருங்கருணையினாலும்

| | | |
|---|---|---|
| **பேற்றின் அருமைக்கும்** | - | பெறுதற்கருமையினாலும் |
| **ஒப்பின்மையான்** | - | ஒப்பு இல்லாதவன். |

கடவுள் ஒப்பில்லாதவர்.

4. ஆக்கி யெவையு மளித்தா சுடனடங்கப்
போக்குமவன் போகாப் புகல்.

எவையும் ஆக்கி, அளித்து, ஆசுடன் அடங்கப்
போக்கும் அவன், போகாப் புகல்.

| | | |
|---|---|---|
| **எவையும் ஆக்கி அளித்து** | - | அவன், அவள், அது என்று அறியப்படுகின்ற உலகத்தை உயிர்களின் பொருட்டுப் படைத்துக் காத்து, |
| **ஆசுடன் அடங்கப்போக்குமவன்** | - | ஆணவத்தோடு உலகத்தையும் அடங்கும்படி அழிக்கின்ற அருட்குணமுடையான், |
| **போகாப் புகல்** | - | உயிர்களுக்கு நீங்காத புகலிடமாவன். |

கடவுள் ஆன்மாக்களுக்குப் பற்றுக்கோடாயுள்ளவர்.

5. அருவு முருவு மறிஞர்க் கறிவா
முருவு முடையா னுளன்.

அறிவாம் உருவம் உடையான்,
அறிஞர்க்கு, அருவும் உருவும் உளன்.

| | | |
|---|---|---|
| **அறிவாம் உருவம் உடையான்** | - | ஞான சொரூபியாகிய இறைவன், |
| **அறிஞர்க்கு** | - | தன்னை அறிவாராகிய ஞானிகளுக்கு, |
| **அருவும் உருவும் உளன்** | - | அருவாகியும் உருவாகியும் அருவுருவாகியும் இருப்பன். |

கடவுள் வாக்கு மனாதீதராயினும் தடத்த வடிவு முடையர்.

6. பல்லா ருயிருணரும் பான்மையென மேலொருவ
னில்லாதா னெங்க ளிறை.

*பல் ஆர் உயிர் உணரும் பான்மை என மேல் ஒருவன்*
*இல்லாதவன் எங்கள் இறை.*

***பல் ஆர் உயிர்*** - *பலவாய் நிறைந்த உயிர்கள்,*

***உணரும் பான்மையென*** - *உணர்த்த உணர்தல் போல,*

***மேல் ஒருவன் இல்லாதான்*** - *தனக்கு உணர்த்துவதற்குத் தன்னின் மேலாக ஒரு தலைவனை இல்லாதவன்,*

***எங்கள் இறை*** - *எங்கள் இறைவன்.*

*கடவுள் தடத்த வடிவினராயினும் அறிவிக்காமலே எல்லாம் அறிபவர்.*

---

7. ஆனா வறிவா யகலா னடியவர்க்கு
வானாடர் காணாத மன்.

*வானாடர் காணாத மன், அடியவர்க்கு*
*ஆனா அறிவாய் அகலான்.*

***வானாடர் காணாத மன்*** - *தேவர்களும் தேடிக் காணுதற்கு அரிய இறைவன்,*

***அடியவர்க்கு*** - *திருவருள்வழி நிற்பார்க்கு,*

***ஆனா அறிவாய்*** - *குறைதலில்லாத அறிவு மயமாய்,*

***அகலான்*** - *அந்நிலையினின்று நீங்கான்.*

*கடவுள் தம்வழி நிற்பாரறிவைத் தம்வயம் செய்து நிற்பர்.*

---

8. எங்கு மெவையு மெரியுறுநீர் போலேகந்
தங்குமவன் றானே தனி.

*அவன், எங்கும் எவையும் எரியுறு*
*நீர்போல் ஏகம் தங்கும்; தானே தனி.*

| | | |
|---|---|---|
| **அவன்** | - | இறைவன், |
| **எங்கும்** | - | சொற்பிரபஞ்சம் கருத்துப்பிரபஞ்சமாகிய எல்லா உலகங்களிலும், |
| **எவையும்** | - | எல்லா உயிர்களிலும், |
| **எரியுறு நீர்போல்** | - | வெந்நீரில் வெம்மைபோல, |
| **ஏகம் தங்கும்** | - | அவற்றோடு அவையேயாய் வேறற நிற்பன், |
| **தானே** | - | (வேறற நிற்பினும்) தானேயாய், |
| **தனி** | - | தனியாவான். |

*கடவுள் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நின்று உபகரிப்பவர்.*

---

9. **நலமில னண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்**
 **சலமிலன் பேர்சங் கரன்.**

*பேர் சங்கரன், நண்ணினர்க்கு நல்லன்,*

*நண்ணார்க்கு நலமிலன்; சலமிலன்.*

| | | |
|---|---|---|
| **பேர் சங்கரன்** | - | தலைவனது பெயர் சங்கரன் என்பது, |
| **நண்ணினர்க்கு நல்லன்** | - | அவனைச் சார்ந்தார் நன்மையடைவர். |
| **நண்ணார்க்கு நலம் இலான்** | - | சாராதார் நன்மை அடையார். |
| **சலம் இலான்** | - | சாராதார்பால் அவனுக்கு வெறுப்பில்லை. |

*கடவுள் தம்வழி நிற்பார்க்குச் சுகஞ் செய்பவர்.*

---

10. **உன்னுமுள தைய மிலதுணர்வா யோவாது**
 **மன்னுபவந் தீர்க்கு மருந்து.**

*மன்னு பவம் தீர்க்கு மருந்து, உளது;*

*ஐயம் இலது; மருந்து உணர்வாய் ஓவாது, உன்னும்.*

**மன்னுபவம் தீர்க்கும் மருந்து** - தொடர்ந்து வருகின்ற பிறவிப்பிணியை நீக்கியருளுகின்ற மருந்தொன்று,

**உளது** - உள்ளது,

**ஐயம் இலது** - அதற்கு ஐயமில்லை.

**மருந்து உணர்வாய் ஓவாது** - அந்த மருந்தாகிய இறைவன் ஆன்மாக்களின் அறிவுக்கறிவாகி நீங்காமல் நிற்பவன்,

**உன்னும்** - அந்த அருமருந்தை உணர்வின் உட்கொண்டு உய்ம்மின்.

*கடவுள் வழிபடற் பாலர்.*

---

## 2. உயிரவை நிலை

உயிர்க்கூட்டத்தினியல்பு. உயிர்கள் பதிபோல ஒன்றாகாது பலவாதலால் 'அவை' எனப்பட்டன.

1. பிறந்தநாண் மேலும் பிறக்குநாள் போலுந்
   துறந்தோர் துறப்போர் தொகை.

*துறந்தோர் தொகை துறப்போர் தொகை:*

*பிறந்த நாளும் மேல்பிறக்கு நாளும் போலும்.*

**துறந்தோர் தொகை** - அறியாமையைவிட்டோர் தொகையும்

**துறப்போர் தொகை** - அறியாமையை விடற்பாலார் தொகையும்

**பிறந்த நாளும்** - கழிந்த நாள்களின் தொகையையும்

**மேல்பிறக்கு நாளும்** - (இனிக்கழிய வேண்டியனவாய் உள்ள) எதிர்காலத்து நாள்களின் தொகையையும்

**போலும்** - ஒக்கும்.

*உயிர்கள் எண்ணில்லாதவை.*

---

2. திரிமலத்தா ரொன்றதனிற் சென்றார்க ளன்றி
யொருமலத்தா ராயு முளர்.

*திரிமலத்தார் ஆயும், அதனில் ஒன்று*

*சென்றார்களாயும், அன்றி, ஒரு மலத்தார் ஆயும், உளர்.*

| | | |
|---|---|---|
| ***திரிமலத்தார் ஆயும்*** | - | *ஆணவம், கன்மம், மாயை என்னும் மலங்கள் மூன்றும் உடையராயும்* |
| ***அதனில் ஒன்று சென்றார்கள் ஆயும்*** | - | *மும்மலத்தில் ஒன்றாகிய மாயை நீங்கப் பெற்று இருமலத்தாராயும்* |
| ***அன்றி*** | - | *இவ்விரு வகையினராயன்றி,* |
| ***ஒரு மலத்தாராயும்*** | - | *ஆணவமொன்றே உடையராயும்* |
| ***உளர்*** | - | *துறப்போர் மூவகையா யிருப்பர்.* |

*உயிர்களில் மூன்று வகை உண்டு.*

---

3. மூன்றுதிறத் துள்ளாரு மூலமலத் துள்ளார்கள்
தோன்றலர்தொத் துள்ளார் துணை.

*மூன்று திறத்துள்ளாரும் மூலமலத்து உள்ளார்கள்,*

*துணை உள்ளார் தொத்துத் தோன்றலர்.*

| | | |
|---|---|---|
| ***மூன்று திறத்துள்ளாரும்*** | - | *மூவகைப்பட்டவராகிய பெத்தர் அனைவரும்,* |
| ***மூலமலத்துள்ளார்கள்*** | - | *ஆணவத்துட் கிடப்பவர்கள்,* |
| ***துணை உள்ளார்*** | - | *அவர்களுள் துணையாகிய மாயையோடு கூடிய சகலர்கள்,* |
| ***தொத்துத் தோன்றலர்*** | - | *தாம் மலபந்த முடையரென்பதை அறியாதவர்கள்.* |

*உயிர்களிற் சகலர் தாம் மலபந்த முடையரென்பதை அறியார்.*

---

4. கண்டவற்றை நாளுங் கனவிற் கலங்கியிடுந்
திண்டிறலுக் கென்னோ செயல்.

*நாளுங் கண்டவற்றை, கனவில் கலங்கியிடும்,*
*திண் திறலுக்குச் செயல் என்.*

| | | |
|---|---|---|
| ***நாளுங் கண்டவற்றை*** | - | *நாள்தோறும் விழிப்பு நிலையிற் கண்ட பொருள்களை,* |
| ***கனவிற் கலங்கியிடும்*** | - | *கனவு நிலையிற் கலங்கிக் காணுகின்ற,* |
| ***திண் திறலுக்கு*** | - | *வலியில்லாத ஆன்மாவுக்கு,* |
| ***செயல் என்*** | - | *தன் செயலாக என்ன உண்டு; ஒன்று மில்லை.* |

*உயிர்கள் தம்வயமின்றி அவத்தையுறுபவைகள்.*

5. பொறியின்றி யொன்றும் புணராத புந்திக்
கறிவென்ற பேர்நன் றற.

*பொறி இன்றி ஒன்றும் புணராத புந்திக்கு,*
*அறிவு என்ற பேர் அற நன்று.*

| | | |
|---|---|---|
| ***பொறி இன்றி*** | - | *மெய், வாய், கண், மூக்குச் செவியாகிய பொறிகளின் உதவியின்றி,* |
| ***ஒன்றும் புணராத புந்திக்கு*** | - | *ஒரு விடயத்தையும் அறியமாட்டாத ஆன்மாவுக்கு,* |
| ***அறிவு என்ற பேர்*** | - | *சித்து என்கின்ற பெயர் -* |
| ***அற நன்று*** | - | *மிக அழகிது.* |

*உயிர்கள் மற்றொன்றைச் சார்ந்து அறிபவைகள்.*

6. ஒளியு மிருளு முலகு மலர்கட்
டெளிவி லெனினென் செய்.

*அலர் கண் தெளிவு இல் எனின்,*
*ஒளியும் உலகும் இருளும் என் செய்.*

***அலர் கண்*** - *பார்வையுள்ள கண்,*

***தெளிவு இல் எனின்*** - *முன் நிற்பதனை இது யாதாகற் பாற்று என்று நோக்காதாயின்,*

***ஒளியும்*** - *தன்னையும் உலகையுங் காட்டுகின்ற ஒளியும்,*

***உலகும்*** - *ஒளியால் விளங்கும் உலகமும்,*

***இருளும்*** - *ஒரு பொருளையும் காட்டாது கண்ணைக் குருடாக்கும் இருளும்,*

***என் செய்*** - *இருந்தென்!*

*உயிர்களுக்கு அறிகிற தன்மை உண்டு.*

---

7. **சத்தசத்தைச் சாரா தசத்தறியா தங்கணிவை**
   **யுற்றசத சத்தா முயிர்.**

*சத்து அசத்தைச் சாராது, அசத்து அறியாது,*

*அங்கண் இவை உற்ற சதசத்தாம் உயிர்.*

***சத்து அசத்தைச் சாராது*** - *சத்தாகிய பதி அசத்தாகிய பாசத்தைப் பற்றாது,*

***அசத்து அறியாது*** - *பாசம் அறிவில்லாதது,*

***அங்கண் இவை உற்ற சதசத்தாம் உயிர்*** - *அதனால், இவைகளைப் பொருந்தினவை சதசத்தாகிய உயிர்கள்.*

*சத்து + அசத்து = சதசத்து, ஆன்மா சத்துமாம் அசத்துமாம், உயிர்கள் சார்ந்ததன் வண்ணமானவைகள்; சதசத்துக்கள்.*

---

8. **இருளி லிருளாகி யெல்லிடத்தி லெல்லாம்**
   **பொருள்க ளிலவோ புவி.**

*இருளில் இருளாகி எல்லிடத்தில் எல்லாம்*

*பொருள்கள் புவி இலவோ.*

**இருளில் இருளாகி** - இருளைச் சார்ந்தவழி இருள் வண்ணமாகி,

**எல்லிடத்தில் எல்லாம்** - ஒளியைச் சார்ந்தவழி ஒளிவண்ணமாகின்ற,

**பொருள்கள்** - பண்டங்கள்,

**புவி இலவோ** - பூமியில் இலவா! இருக்கின்றனவே.

*சார்ந்ததன் வண்ணமாவன உள.*

---

9. **ஊமன்கண் போல ஒளியு மிகவிருளே**
**யாமன்கண் காணா தவை.**

*அவை, மன்கண் காணாது, ஊமன்*

*கண்போல ஒளியும் மிக இருளேயாம்.*

**அவை** - அநேகமாகிய ஆன்மா,

**மன்கண் காணாது** - திருவருளைச் சிந்தியாமல்,

**ஊமன்கண்போல** - ஒளி தனக்கு இருளாய் விடுகிற கூகையின் கண்ணைப் போல,

**ஒளியும் மிக இருளேயாம்** - சிவமாகிய பேரொளி தமக்கு இருளாம்படி நிற்கும்.

*உயிர்கள் ஞானக்கண்ணை இன்றியமையாதன.*

---

10. **அன்றளவு மாற்றுமுயி ரந்தோ வருள்தெரிவ**
**தென்றளவொன் றில்லா விடர்.**

*அளவு ஒன்று இல்லா இடர் அன்று அளவும்;*

*உயிர் ஆற்றும்; அருள் தெரிவது என்று; அந்தோ!*

**அளவு ஒன்று இல்லா இடர் அன்று அளவும்** - ஓரளவு சொல்லமுடியாத இடர்கள் அநாதியே உயிரைப் பொருந்தி நிற்கின்றன,

**உயிர் ஆற்றும்** - உயிர் அத்துன்பங்களையெல்லாம் ஒழிவின்றி அநுபவிக்கின்றது,

**அருள் தெரிவது** - உயிரினது துன்ப முழுவதையும் நீக்கும் மருந்தாகி உடனிற்குந் திருவருளை உயிர் நோக்குவது,

**என்று** - எப்பொழுது;

**அந்தோ** - ஐயோ! கழிந்த காலத்தை நோக்கும் போது, அது கைகூடாது போலும்.

*உயிர்கள் பந்தம் நீங்கி அருளைச் சார்தற்பாலன.*

## 3. இருண்மல நிலை

மயக்கத்தைச் செய்யும் ஆணவ மலத்தினியல்பு. ஏனைய மலங்களினியல்புங் கூறப்பட்டதாயினும், அவை மலமாயதூஉம் ஆணவமாகிய தன்னானேயாதலின், அவ்வாற்றான் அவற்றையும் அகப்படுத்தி நிற்றலின், தலைமைபற்றி 'இருண்மல நிலை' எனப்பட்டது.

1. **துன்றும் பவத்துயரு மின்புந் துணைப்பொருளு**
 **மின்றெ்ன்ப தெவ்வாறு மில்.**

துன்றும் பவத்துயரும், இன்பும், துணைப் பொருளும்,
இன்று என்பது எவ்வாறும் இல்.

**துன்றும் பவத் துயரும்** - கடலில் எழும் திரைகள்போல இடையீடின்றித் தொடர்ந்து வரும் பிறவித் துன்பமும்,

**இன்பும்** - இடையிடையே சிறிதாயினும் முழுதுமாயினும் துன்பம் விடுதலாலுண்டாகிய இன்பமும்,

**துணைப்பொருளும்** - துன்ப இன்பங்களுக்குக் காரணங்களும்,

**இன்று என்பது** - இல்லை என்று நிச்சயிப்பது,

**எவ்வாறும்இல்** - சுருதி, யுத்தி, அநுபவம் என்கின்ற எந்த நெறியாலும் இயலாது.

*மலவிருள் துன்பத்துக்குக் காரணமாயுள்ளது.*

---

2. **இருளான தன்றி யிலதெவையு மேகப்
பொருளாகி நிற்கும் பொருள்.**

*எவையும் ஏகப் பொருளாகி நிற்கும் பொருள், இருள்*

*ஆனது அன்றி, இலது.*

***எவையும் ஏகப் பொருளாகி நிற்கும் பொருள்*** - எல்லாவற்றையுந் தன்னுளடக்கிப் பார்க்குமிடமெங்குந் தான் ஒன்றே யாய் நிமிர்ந்து நிற்கும் பொருள்,

***இருளானது அன்றி*** - காணப்படுகின்ற இந்த உலகத்திலே) இருள் ஒன்றே அன்றி,

***இலது*** - அவ்வாறாவது பிறிதியாதும் இல்லை.

*இருண்மலம் தான் பற்றியிருப்பவைகளை மறைத்து நிற்பது.*

---

3. **ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டு
மிருபொருளுங் காட்டா திது.**

*இருள், ஒரு பொருளுங் காட்டாது; உருவங் காட்டும்.*

*இது, இருபொருளுங் காட்டாது.*

***இருள்*** - புறவிருளானது,

***ஒரு பொருளும் காட்டாது*** - தான் அகப்படுத்து நிற்கும் பொருள் ஒன்றனையும் இவ்வியல்பிற்று என்று காணவொட்டாது மறைத்து நிற்கும்;

***உருவம் காட்டும்*** - பிற பொருள்களை மறைக்குமாயினும் தன் உருவத்தை மாத்திரம் இவ்வியல்பிற்றென்று மறைப் பின்றிக் காட்டும்,

**இது** - இந்த ஆணவ இருளானது,

**இருபொருளுங் காட்டாது** - தான் அகப்படுத்தி நிற்கும் பொருளையுங் காட்டாது; தன் உருவத்தையுங் காட்டாது.

இருண்மலம் பொருள்களை மறைப்பதன்றித் தன்னையும் மறைப்பது.

---

4. அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடையடங்கி
யின்றளவு நின்ற திருள்.

ஆவியிடை, உள்ளொளியோடு, அன்று, இருள் அளவி,

அடங்கி இன்றளவும், நின்றது.

**ஆவியிடை** - ஆன்மாவின் கண்ணே,

**உள் ஒளியோடு** - ஆன்மாவின் உள்ளொளியாகிய சிவத்தோடு,

**அன்று** - சிவம் ஆன்மாவைக் கலந்த அன்றே,

**இருள் அளவி** - இருண்மலமாகிய ஆணவம் தானுங் கலந்து,

**அடங்கி** - ஒளி அடங்கியவாறு தானும் அடங்கி,

**இன்று அளவும்** - அன்று முதல் இன்று வரையும்,

**நின்றது** - ஆன்மாவைவிடாது நின்றது.

இருண்மலம் முத்திவரை நிலைத்து நிற்பது.

---

5. பலரைப் புணர்ந்துமிருட் பாவைக்குண் டென்றுங்
கணவற்குந் தோன்றாத கற்பு.

என்றுங் கணவற்குத் தோன்றாத கற்பு,

இருட்பாவைக்கு, பலரைப் புணர்ந்தும், உண்டு.

**என்றும் கணவற்குத் தோன்றாத கற்பு** - எக்காலத்தும் கணவனுக்கும் தன் தன்மை புலமாகாததொரு கற்பு விசேடம்,

| | | |
|---|---|---|
| **இருட்பாவைக்கு** | - | இருண்மலமாகிய பெண்ணுக்கு, |
| **பலரைப் புணர்ந்தும்** | - | அவள் பலவேறு நிலையினராகிய ஆன்ம வர்க்கத்தாரைப் புணர்ந்தாளாயினும், |
| **உண்டு** | - | உள்ளதே, அது வியப்புக்குரியது! |

*இருண்மல இயல்பு எந்த நிலையிலும் புலனாகாது.*

6. பன்மொழிக ளென்றுணரும் பான்மை தெரியாத
   தன்மையிரு ளார்தந் தது.

*உணரும் பான்மை தெரியாத தன்மை,*

*இருளார் தந்தது, பன்மொழிகள் என்.*

| | | |
|---|---|---|
| **உணரும் பான்மை தெரியாத தன்மை** | - | உணரவேண்டியவைகளை உணரும் முறைமையால் உணரத்தெரியாத தன்மையாகிய மயக்கம், |
| **இருளார் தந்தது** | - | ஆணவத்தால் வந்தது, |
| **பன்மொழிகள் என்** | - | மயக்கமுடைமைக்குப் பலவேறு சமயத்தார் பலவேறு காரணங்கள் கற்பித்துக் கூறும் மொழிகள் பொருந் தாதன. |

*இருண்மலம் அறியாமையைத் தந்துநிற்பது.*

7. இருளின்றேற் றுன்பே னுயிரியல்பேற் போக்கும்
   பொருளுண்டே லொன்றாகப் போம்.

*இருள் இன்றேல் துன்பு ஏன், உயிர் இயல்பேல்,*

*போக்கும் பொருள் உண்டேல், ஒன்றாகப் போம்.*

| | | |
|---|---|---|
| **இருள் இன்றேல்** | - | ஆணவம் என ஒரு பொருள் இல்லையாயின், |
| **துன்பு ஏன்** | - | ஆன்மாக்களுக்குத் துன்பம் வருவதற்குக் காரணம் இல்லை, |

**உயிர் இயல்பேல்** - (ஆணவம் பொருளன்று) ஆன்மாவின் குணம் என்று கூறினால்,

**போக்கும் பொருள் உண்டேல்** - இருளைப் போக்குகின்ற அருளொளி நேர்படும் பொழுது,

**ஒன்றாகப் போம்** - குணமாகிய ஆணவம் போகக் குணி எனப்படும் உயிரும் சூனியமாய்விடும்.

இருண் மலம் பொருள்; ஆன்ம குணமன்று.

---

8. ஆசாதி யேலணைவ காரணமென் முத்திநிலை
பேசா தகவும் பிணி.

*ஆசு ஆதியேல், முத்திநிலை அணைவ காரணம் என்,*
*பிணி முத்திநிலை பேசாது அகவும்.*

**ஆசு ஆதியேல்** - ஆன்மாவுக்கு ஆணவப் பிணிப்புத் தொடக்கம் உள்ளதானால்,

**முத்திநிலை அணைவ காரணம் என்** - முத்தனாயிருந்த ஆன்மாவை ஆணவம் பிணித்தற்குக் காரணம் என்ன,

**பிணி முத்திநிலை பேசாது அகவும்** - ஆணவமாகிய பிணிப்பு மீண்டும் முத்திநிலையிலே, இரகசியமாக ஆன்மாவை அழைத்துப் பிணித்துக் கொள்ளும்.

இருண்மலப் பிணிப்பு அநாதியே இயல்பால் அமைந்தது.

---

9. ஒன்று மிகினு மொளிகவரா தேலுள்ள
மென்று மகலா திருள்.

ஒன்று மிகினும், ஒளி உள்ளம் கவராதேல், இருள்
என்றும் அகலாது.

| | | |
|---|---|---|
| **ஒன்று மிகினும்** | - | ஏகம் எனப்படும் சிவசூரியன் யாவையும் தன்முன் சூனியமாக மிக்குப் பிரகாசிக்கும் இயல்புடைய தாயினும், |
| **ஒளி உள்ளம் கவராதேல்** | - | அதன் பிரகாசத்தை உயிர் கவராதாயின், |
| **இருள் என்றும் அகலாது** | - | இருண்மலம் எண்ணில்லாத காலங் கழிந்தொழிந் தாலும் உயிரைவிட்டு நீங்காது. |

ஆன்மா, ஞானஒளி கவருமாயின் மலம் நீங்கும்.

---

10. விடிவா மளவும் விளக்கனைய மாயை
வடிவாதி கன்மத்து வந்து.

மாயை வடிவாதி, கன்மத்து வந்து,
விடிவு ஆம் அளவும், விளக்கு அனைய.

| | | |
|---|---|---|
| **மாயை வடிவாதி** | - | மாயாகாரியமாகிய சரீரமுதலியவைகள், |
| **கன்மத்து வந்து** | - | ஆன்மாக்களின் கன்மத்துக்குத் தக்கபடி வந்து, |
| **விடிவு ஆம் அளவும்** | - | மூலமலமாகிய இருள் விடியுமளவும், |
| **விளக்கு அனைய** | - | விளக்குப் போல விளக்கஞ் செய்து நிற்பன. |

இருண்மல இரவில் கன்மத்தின் விளைவிடமான மாயை ஒரு விளக்கு.

---

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. இறைவனின் இயல்புகளாக பதிமுதுநிலையில் கூறப்பட்டுள்ளவை எவை?
2. இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கும் தன்மையை விளக்குக.
3. மூவகை உயிர்களும் எவை? அவற்றுக்கிடையிலான வேறுபாடு யாது?
4. பசு, ஏன் சதசத்து என அழைக்கப்படுகிறது?
5. ஆணவ மலத்தின் இயல்பு யாது?
6. முத்தி கிடைக்கும் வரை ஆன்மாவிற்கு விளக்குப் போன்று ஒளி செய்பவை யாவை?

## செயற்பாடு

பதி, பசு, பாசம் ஆகியவற்றின் இயல்புகளை சுருக்கமாக அட்டவணைப்படுத்துக.

# 19 குருலிங்கசங்கம வழிபாடு

## குரு வழிபாடு

குரு என்றால் பாசத்தை நீக்குபவர் அல்லது அஞ்ஞானம் என்னும் இருளை அகற்றுபவர் என்பது பொருள். தீட்சை அளித்தவரும் கல்வி போதிப்பவரும் குரு ஆவார். அவர்கள் முறையே தீட்சாகுரு என்றும் வித்தியாகுரு என்றும் கொள்ளப்படுவார்கள். சைவநெறி தழைத்தோங்கத் தேவார திருவாசகங்களை அருளிய சமய குரவர்களும் மெய்கண்ட சாத்திரங்களை அருளிய சந்தான குரவர்களும் போற்றி வழிபடுவதற்குரிய குருமார்களே. வாழ்க்கையில் பரிபக்குவம் ஏற்பட்டதும் பிறவியை ஒழிக்க ஞானாசாரியராக வருபவர் ஞானகுரு எனப்படுவார். யாம் அறியாமல் எமது உள்நின்று நடத்தும் திருவருட் சக்தியே, எமது பக்குவ நிலையில் யாம் கண்டுணர்ந்து வழிபடவும், எம்மை வழிப்படுத்தவும் மானிடப் போர்வையில் ஞானகுருவாக வந்து எம்மை ஆட்கொள்கின்றது. சகலராகிய எம்போன்றவர்களுக்கு இறைவன் நேராக வராமல் குருவடிவிலேயே வருவான். குரு எமது கண்கண்ட தெய்வம் என்பதில் ஐயமில்லை. ஞானகுருவின் அருளாலேயே இறைவனை அடைய முடியும்.

குரு மனம், மொழி, மெய்களால் வணங்குவதற்குரிய சிவ சொரூபமாக விளங்குபவர்; வாழ்வில் பின்பற்றுதற்குரிய சிறந்த இலட்சியமாக விளங்குபவர்; ஆன்மிகத் துறையில் சந்தேகங்களைப் போக்கி நல்வழிப்படுத்தும் வழிகாட்டியாகவும் விளங்குகின்றார். குருவிடம் ஞானநூல்களைக் கேட்கும்போது அடக்கத்துடனும் பக்தியுடனும் கவனம் முழுவதையும் சொல்லப்படும் விடயத்திற் செலுத்திக் கேட்க வேண்டும். குருவின் உபதேசப்படி ஒழுகுதலே அவர்க்குச் செய்யும் மிகச் சிறந்த திருத்தொண்டாகும். அதுவே அவர்க்குச் செய்யும் வழிபாடுமாகும். தத்தம் குருவை உள்ளன்போடு வழிபடுவதுடன் சமய குரவர், சந்தான குரவர் ஆகியோருக்கும் குருபூசை செய்வது அவசியம். நாயன்மார்களுள் திருமூலர், மங்கையற்கரசியார், குலச்சிறையார், அப்பூதியடிகள் ஆகியோர் குருவழிபாட்டால் வீடுபேறு அடைந்தோருட் சிலராவர். சந்தானகுரவர் முதலானோர் குருவழிபாட்டினாலேயே உயர்பதம் எய்தினார்கள். அவர்களது நூல்களிலும் அவர்களது குருபக்தி வெளிப்பட்டிருப்பதைக் காணலாம்.

## இலிங்க வழிபாடு



சிவலிங்கம் சிவபெருமானின் அருவுருவத் திருமேனி. அது ஞானசோதி வடிவானது. பீடம் சக்தியையும் இலிங்கம் சிவத்தையும் குறிப்பது. நாயன்மாருள் சேரமான் பெருமாள், சாக்கியநாயனார், கலிக்காமர், பூசலார் முதலானோர் இலிங்க வழிபாடு செய்து வீடுபேறடைந்தனர்.

சிவலிங்கம் பரார்த்தலிங்கம் எனவும் ஆன்மார்த்தலிங்கம் எனவும் இரு வகைப்படும். யாவரும் வழிபடுவதற்காகத் திருக்கோயில்களில் நிலையாக தாபிக்கப்படுவது பரார்த்தலிங்கம் அல்லது தாவரலிங்கம் எனப்படும்.

விசேட தீட்சை பெற்றவர்கள், தாமே சிவலிங்கத் திருமேனியைத் தீண்டி வழிபட்டு இன்புற வேண்டும் என்ற விருப்பத்தால் தமது விசேட தீட்சா குருவிடமிருந்து பெற்று, அவரது உபதேசப்படி பூசிக்கும் சிவலிங்கம் ஆன்மார்த் தலிங்கம் அல்லது இட்டலிங்கம் எனப்படும். ஆன்மார்த்தபூசை ஆயுட்காலம் முழுவதும் செய்தற்குரியது. குறைபாடு இல்லாதவராயும் விதிகளையறிந்து அனுட் டிக்க வல்லவராயும் உள்ளவர்களே முற்கூறிய இலிங்கங்களைப் பிரதிட்டை செய்து வழிபடுவதற்குரியவர்கள். ஏனையோர் பூசித்து முடிந்ததும் ஆற்றிலேனும் குளத் திலேனும் விடப்படும் சணிகலிங்க பூசையே செய்தற்குரியவர். சணிகலிங்கம் என்பது மண், அரிசி, அன்னம், ஆற்றுமணல், கோமயம், வெண்ணெய், உருத்திராக்கம், சந்தனம், சர்க்கரை, மா முதலியவற்றுள் ஒன்றால் சிவலிங்க வடிவாய் அமைத்துப் பூசிக்கப்படுவது.

சிவனடியார் திருக்கூட்டம் சங்கமம் எனப்படும். சிவபெருமானிடம் அன்பு பூண்டொழுகுவோர் சிவனடியார் ஆவர். அவர்கள் சிவபெருமானை நினைத்தாலும் அவரைப் பற்றிக் கேட்டாலும் அவரது தெய்வத் திருமேனிகளைக் கண்டாலும் தம்வசமிழப்பர். சிவபெருமானுக்குத் திருத்தொண்டு புரிந்தும் அவரது புகழ் பாடியும் திருவைந்தெழுத்தை ஓதியும் இன்புறுவர். சிவபெருமானை நினைக்கச் செய்யும் சிவ சின்னங்களை அணிந்த திருமேனியுடையவராக இருப்பர். அடியார்க்குரிய பாவனை, செயல், வேடம் இவற்றையுடைய எவரும் சிவமாக எண்ணி வழிபடுதற்குரியவரேயாவர்.

**மாலற நேயம் மலிந்தவர் வேடமும்**
**ஆலயந்தானும் அரன் எனத்தொழுமே.**

சிவனடியார்களைக் காணச் செல்லுங்கால் கையில் யாதேனும் கொண்டு செல்லுதலும், அதனை அவர்முன் வைத்து வணங்கலும், அவர் அனுமதியுடன் இருந்து அவர்கூறும் நல்லுரைகளைக் கேட்டலும் முறையாகும். நமது இல்லத்துக்கு வரும் அடியாரை எதிர்கொண்டு வரவேற்று இன்சொல் கூறி, ஆசனத்திருத்தி உபசரித்து வணங்கி அவர் செல்லுங்கால் வழியனுப்பி வருதல் வேண்டும். நாயன்மாருள் அப்பூதியடிகள், திருநீல கண்டர், இயற்பகையார், சிறுத்தொண்டர், இளையான்குடிமாறனார் முதலியோர் சிவனடியார்களை வழிபட்டு வீடுபேறு எய்தியவர்களாவர்.

''அடியார் நடுவுளிருக்கும் அருளைப் புரியாய்'' என்று வேண்டுகின்றார் மாணிக்கவாசகப் பெருமான். ''ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனுங் கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே'' என்கிறார் அப்பர் பெருமான். சுந்தரமூர்த்தி சுவாமிகள், திருத்தொண்டத்தொகையில் ஒவ்வொரு நாயன்மாரையும் விதந்தோதி, அவர்களுக்கு தாம் அடியாரெனக் கூறிக்கொள்கிறார். சிவபிரானிடம் உள்ள அன்பு அவரது அடியாரிடமும் பரவுவதால் அவர்மேலுள்ள அன்பு மேலும் வளர்ந்து உறுதிப்படுகின்றது.

சிவனடியார் சங்கமம் எமது உள்ளத்திலுள்ள கீழான எண்ணங்களை அகற்றி உயர்வான எண்ணங்களை உண்டாக்குகின்றது. உலகப் பற்றை நீக்கித் தெய்வப்பற்றை

வளர்க்கின்றது. சிவனடியார்களுக்குச் செய்யும் திருத்தொண்டும் வழிபாடும் உள்ளத்தைத் தூய்மைப்படுத்திப் பத்தியையும் வைராக்கியத்தையும் வளர்க்க உதவுகின்றன.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. ‘ஞான குரு’ எனப்படுவோர் யாவர்?
2. குருவின் சிறப்புகள் யாவை?
3. குருவுக்குச் செய்யும் வழிபாடு யாது?
4. பரார்த்தலிங்கம், ஆன்மார்த்தலிங்கம் என்பவற்றுக்கிடையிலான வேறுபாடு யாது?
5. சணிகலிங்க பூசை என்றால் என்ன?
6. சணிகலிங்கம் அமைக்கப் பயன்படும் பொருள்கள் எவை?
7. சங்கமம் என்றால் என்ன?
8. சிவனடியார்களின் இயல்பு யாது?
9. சிவனடியார் வழிபாட்டினால் ஏற்படும் நன்மைகள் யாவை?
10. சங்கம வழிபாட்டின் சிறப்பை நாயன்மார் எவ்வாறு சிறப்பித்துக் கூறியுள்ளனர்?

## செயற்பாடு

குரு வழிபாடு, இலிங்க வழிபாடு, சிவனடியார் வழிபாடு செய்து முத்திப் பேறடைந்த நாயன்மார்களை அட்டவணைப்படுத்துக.

# 20 நாட்டார் வழிபாடு

இந்துசமய வழிபாட்டு முறைகளை ஆகமம்சார் வழிபாடு, ஆகமம் சாரா வழிபாடு என வகைப்படுத்தலாம். ஆகமம் சாரா வழிபாடு என்பது ஆகமங்களின் அடிப்படையில் அன்றி பாரம்பரிய மரபுகளின் அடிப்படையில் இடம்பெறுவது.

பெருந்தெய்வங்களாகக் கொள்ளப்பெறும் சிவன், திருமால் முதலான தெய்வங்களுக்கன்றி சிறுதெய்வங்கள் எனப்பெறும் நாகதம்பிரான், இடும்பன் முதலான தெய்வங்களுக்கே இத்தகைய வழிபாடுகள் மேற்கொள்ளப்படுகின்றன. ஆகமம்சாரா வழிபாட்டை கிராமியத்தெய்வ வழிபாடு, நாட்டார் வழிபாடு, குலதெய்வ வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு எனவும் அழைப்பர். ஆகமம்சாரா வழிபாட்டில் சடங்குகள் பிரதான இடத்தை வகிக்கின்றன. சடங்குகளின்றி நாட்டார் வழிபாடு எதுவும் இடம்பெறுவதில்லை.

'சடங்கு' என்னும் சொல்லுக்கு செயல் எனப் பொருள் கொள்ளலாம். சிறுதெய்வங்களுக்கு நம்பிக்கையின் அடிப்படையில், பக்தியோடு ஆற்றப்படும் செயல்கள் எல்லாம் சடங்குகளாகும். இந்த ஆகமம்சாரா வழிபாட்டுச் சடங்குகள் இந்தியா, இலங்கை உட்பட இந்துக்கள் பாரம்பரியமாக வாழும் எல்லா இடங்களிலும் காணப்பெறுகின்றன. நாட்டார் வழிபாடு எளிமையான நடைமுறைகளைக் கொண்டதாகும். பாரம்பரிய பண்பாடுகளைப் பேணிவருவதாகும்.

தரம்-9இல், சில நாட்டார் தெய்வங்கள் பற்றிப் படித்தோம். இங்கு திரௌபதையம்மன், வைரவர் ஆகிய தெய்வங்களுக்கான வழிபாட்டு முறைகள் பற்றி அறிந்துகொள்வோம்.

## திரௌபதையம்மன் வழிபாடு



இலங்கையில் நிலவும் நாட்டார் மரபு சார்ந்த வழிபாடுகளுள் குறிப்பிடத்தக்க ஒன்று திரௌபதையம்மன் வழிபாடாகும்.

திரௌபதை, மகாபாரதம் என்னும் இதிகாசத்தின் நாயகியாக விளங்குபவள்; பாஞ்சால மன்னன் புத்திரப்பேறு வேண்டி யாகம் செய்தபோது யாகாக்கினியிலே தோன்றியவள்; பஞ்சபாண்டவர்களின் மனைவி; துரியோதனன் முதலானவர்கள் தன்னை அநீதியான முறையிலே அவமானப்படுத்த முயன்றபோது வெகுண்டு நீதி கேட்டவள்; தெய்வத் துணையால் தன் மானத்தைத் தானே காத்துக் கொண்டவள்; தன்னை அவமானப்படுத்த முனைந்தபோது அவிழ்ந்த தன் கூந்தலை துரியோதனன் முதலானோரை அழித்த பின்னரே முடிப்பதாகச் சபதம் மேற்கொண்டு அச்சபதத்தை நிறைவேற்றியவள். நீதி உணர்வும் மான உணர்வும் வீரமும் பெண்மையும் நிரம்பிய அவள், பொதுமக்களால் தெய்வ நிலையில் வைத்துப் போற்றப்படுகிறாள்.

திரௌபதையம்மன் வழிபாடு இலங்கையின் கிழக்குக் கரையில் மட்டக் களப்பு, அம்பாறை மாவட்டங்களிலும் மேற்குக் கரையில் புத்தளம் மாவட்டத்திலும் சிறப்புற்று விளங்குகின்றது.

கிழக்கிலங்கையில் பாண்டிருப்பு, பழுகாமம், புளியந்தீவு, மட்டிக்களி, புதூர், மகிழவெட்டுவான் முதலான இடங்களிலே திரௌபதை அம்மனுக்கு ஆலயங்கள் அமைந்துள்ளன. இவற்றுள் பாண்டிருப்பில் அமைந்துள்ள திரௌபதையம்மன் ஆலயமே மிகப் பிரசித்தமானதாகும். பாண்டவர்கள் உறைந்திருந்த இடம் என்ற காரணத்தாலேயே 'பாண்டிருப்பு' என்ற பெயர் ஏற்பட்டதாகக் கூறுவர். மட்டக்களப்பு நகரிலிருந்து தெற்கே ஏறக்குறைய முப்பது கிலோமீற்றர் தொலைவில், பாண்டிருப்புக் கிராமம் அமைந்துள்ளது. அங்கு திரௌபதையம்மன் கோயில் அமைவதற்கு 'தாதன்' என்பவன் காரணமாக இருந்தான் என்று 'தாதன் கல்வெட்டு' கூறுகின்றது. அந்த ஆலயத்தின் வருடாந்தச் சடங்குகள் புரட்டாதி மாதத்தில் வரும் ஒரு செவ்வாய்க்கிழமை, 'கதவு திறத்தல்' என்னும் வைபவத்துடன் ஆரம்பமாகி அடுத்துவரும் பூரணையோடு கூடிய ஒரு வெள்ளிக் கிழமையில் நிறைவு பெறும். இச்ச டங்கு பதினெட்டு நாள் இடம்பெறும். இங்கு இடம்பெறும் முக்கிய சடங்குகளாவன கொடியேற்றச் சடங்கு, சமயம் எடுத்தல், சுவாமி எழுந்தருளப்பண்ணல், நாட்கால் வெட்டும் சடங்கு, கலியாணக்கால் வெட்டும் சடங்கு, வனவாசம் போதல், தவநிலைச் சடங்கு, தீமிதிப்பு, பாற்பள்ளயம் என்பன.

இங்கு இடம்பெறும் சடங்குகளில், சிலர் பாண்டவர் முதலான மகாபாரதப் பாத்திரங்களாக வேடமிடுவதும் அவர்கள் சடங்குகளிலே பங்கேற்பதும் முக்கியமான அம்சங்கள். பாண்டவர் முதலானோராக வேடமிடுவதற்கு பரம்பரை பரம்பரையாக உரித்துடையவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மகாபாரதக் கதையை நிகழ்த்திக் காட்டும் வகையில் சில சடங்குகள் அமையப்பெறுகின்றன.

புத்தளம் மாவட்டத்தில் உடப்பு, முந்தல் ஆகிய கிராமங்களில் திரௌபதையம்மன் வழிபாடு சிறப்புற்று விளங்குகின்றது. உடப்புக் கிராம மக்கள் தங்களைப் பாண்டவர்களது வம்சத்தவர்களாக - குருவம்சத்தவர்களாகவே கருதிக் கொள்கிறார்கள். உடப்பிலே பல ஆலயங்கள் இருந்தாலும் உடப்பு மக்களின் குலதெய்வமாக விளங்குபவள் திரௌபதையம்மன். இவ்வாலயம் அண்மைக் காலத்தில் ஸ்ரீ சத்தியபாமா ருக்மணி சமேத பார்த்தசாரதி கோயிலாக மாற்றம் பெற்றுள்ளது. அங்கு பார்த்தசாரதிப் பெருமாளுக்கு ஆகம முறைப்படி வழிபாடுகள் மேற்கொள்ளப் படுகின்றன. ஆண்டுக்கு ஒருமுறை மார்கழி மாதத்தில் மகோற்சவம் இடம்பெற்று வருகிறது. எனினும் அந்த ஆலயத்தில் திரௌபதையம்மனுக்கு இடம்பெறும் வருடாந்தச் சடங்குகளே பிரசித்தமானவையும் உணர்வுபூர்வமானவையுமாகும்.

அச்சடங்குகள் வருடாந்தம் ஆடிமாதத்தில் பதினெட்டு நாட்கள் இடம்பெறுகின்றன. பதினெட்டாம் நாள் இடம்பெறும் தீமிதிப்பு வைபவம் மிகப்பிரசித்தமானதாகும். அதில் நூற்றுக்கணக்கான மக்கள் தீமிதிப்பர். பத்தொன்பதாம் நாள் 'தருமர் பட்டா பிஷேகம்' இடம்பெறும். இங்கு இடம்பெறும் சடங்குகளும் மட்டக்களப்பிற் போலவே மகாபாரதக் கதையை அடிப்படையாகக் கொண்டமைகின்றன. மகாபாரத பாத்திரங்களாக வேடம் புனைதலும் இங்கும் இடம்பெறுகின்றது.

## வைரவர் வழிபாடு



இந்துக்கள் மத்தியில் வைரவர் ஆகம மரபுக்குப் புறம்பான முறையிலும் வழிபடப்படுகிறார்; ஆகம முறையிலும் வழிபடப்படுகிறார்.

வைரவர், ஒரு மரநிழலில் திரிசூல வடிவில் மிக எளிய வடிவிலும் விளங்குகிறார். பரிவார தெய்வங்களுக்கு மத்தியில் கர்ப்பக்கிருகத்தில் மூலமூர்த் தியாகவும் விளங்குகிறார். விசேட தினங்கள் மாத்திரம் விளக்கேற்றுவது முதல் நித்திய, நைமித்திய நெறிகளில் மகோற்சவம் நிகழ்த்துவது வரையில் அவருக்கான வழிபாடு பல்வேறுபட்ட நிலைகளில் அமைகின்றது. வைரவர் கிராமத்தெய்வம், காவற்தெய்வம், இரத்தபலியேற்கும் தெய்வம் என்று கருதப்பட்டும் வழிபடப் படுகிறார். அவர், சிவகுமாரர், அதற்கும் மேலாக சிவமூர்த்தமே என்று கருதியும் வழிபடப்படுகிறார்.

விநாயகர் சிவபிரானிடமிருந்து தோன்றி கஜமுகாசுரனைச் சங்காரம் செய்தார். முருகப் பெருமான் சிவனிடத்தினின்றும் தோன்றிச் சூரனைச் சங்காரம் செய்தார். அதுபோலவே சிவபிரானிடத்திலிருந்து வைரவர் தோன்றினார். ஐந்து தலைகளோடு விளங்குவதால், தன்னையும் சிவனுக்கு நிகராகக் கருதி சிவநிந்தை செய்த பிரமனின் ஐந்து தலைகளுள் ஒன்றைக் கொய்து, அவனின் ஆணவத்தை அடக்கினார். அப்பர் சுவாமிகள் சிவன் வேறு வைரவர் வேறு என்று வேற்றுமைப்படுத்தாது சிவனை வைரவராகவே கருதி 'பிரமன்தன் சிரம் அரிந்த பெரியோய் போற்றி!' என்று துதிப்பார்.

சிவாகமங்களிலும் கிராமியச் சடங்குப் பாடல்களிலும் வைரவ மூர்த்தியின் தோற்றம் விவரிக்கப்படுகின்றது. உடுக்கு, சூலம், கபாலம் என்பவற்றை அவர் ஏந்தியிருக்கிறார்; ஆடையற்ற கோலத்திலே திகம்பரராகக் காட்சியளிக்கிறார்; அக்கினிச் சுவாலைபோல் மேல்நோக்கி எழுந்த சிவந்த சடைகளோடும் கோரப்பல்லோடும் திகழ்கிறார்; பாம்பையே அரைஞாணாகவும் பூணூலாகவும் அணிந்திருக்கிறார்; நாயை வாகனமாகக் கொண்டுள்ளார்.

வைரவருக்கு உரிய திருநாமங்களுள் ஒன்று **சேத்திரபாலகர்** என்பதாகும். சேத்திரம் என்றால் இடம் - தலம் என்று பொருள். பாலகர் என்றால் பரிபாலிப்பவர் - காவல் செய்பவர் என்பது பொருள். கோயில்களில் மாத்திரமின்றி நகரங்கள், கிராமங்களிலெல்லாம் வைரவர் காவல் தெய்வமாக வீற்றிருக்கிறார்.

வைரவர் ஆகம நிலையில் வழிபடப்படும்போது பெரும்பாலும் ஞான வைரவர் எனப் பேசப்படுகிறார். காலவைரவர், மகாவைரவர் முதலான பெயர்களாலும் சுட்டப்படுகிறார். கிராமிய வழிபாட்டு மரபில் அவர் சுடலை வைரவர், காட்டுவைரவர், இரத்த வைரவர் முதலான பெயர்களாற் சுட்டப்பெறுகிறார். வைரவர் மிக எளிய முறையிலான வழிபாடுகளையும் ஏற்றுக்கொள்பவர். மக்கள் செல்ல அஞ்சும் சுடலை, காடு முதலான இடங்களிலும் வீற்றிருந்து மக்களின் அச்சத்தைப் போக்குபவர்.

வைரவர் அதிகமான இந்துக்களின் குலதெய்வமாகத் திகழ்கின்றார். தங்கள் வளவுகளில் அமைந்துள்ள வைரவருக்கு நித்தம் விளக்கேற்றி வழிபடுவதோடு ஆண்டு தோறும் விசேட நாட்களில் பொங்கல் செய்து, வடைமாலை சூட்டி விசேட வழிபாடியற்றுவர். சித்திரைப் பரணி, ஐப்பசிப் பரணி, தைமாதத்து முதலாம் செவ்வாய்க்கிழமை என்பன வைரவருக்குரிய விசேட தினங்களாகும்.

ஆகமம் சாராத வகையில் அமைந்த சில வைரவர் ஆலயங்களில் ஆண்டுக்கு ஒருமுறை வேள்வி என்னும் சடங்கு இடம்பெறுவதுண்டு. காலவோட்டத்தில் அத்தகைய வேள்விமுறை அருகிசாத்வீகமானமுறையில் பொங்கல் வழிபாடு இடம்பெறுவதைக் காணக்கூடியதாய் உள்ளது. மக்கள் தங்கள் தங்கள் மரபுகளுக்கேற்ப அன்போடு செய்துவரும் வழிபாடுகளை வைரவக் கடவுள் இனிதே ஏற்று அருள்புரிகிறார்.

## நாட்டார் கலைகள்

நாட்டார் வழிபாடுகளில் அவற்றின் ஒரு அம்சமாக கலைகளும் இடம் பெறுகின்றன. கூத்து, இசை, அலங்காரம் முதலான கலைகள் நாட்டார் வழிபாட்டில் பிரதான இடம் பிடிக்கின்றன. நாட்டார் சடங்குகள் இடம்பெறும்போது அம்மானை, சிந்து முதலான சிலவகைப் பாடல்கள் இசையோடு பாடப்படுகின்றன. கண்ணகை யம்மன் கோயில்களில் கண்ணகைகதை கூறும் பாடல்கள் பாராயணம் செய்யப் படுகின்றன. அவற்றுக்குப் பின்னணியாக உடுக்கு, மத்தளம், சல்லரி முதலிய தாள வாத்தியங்கள் ஒலிக்கப்பெறுகின்றன. நாட்டார் வழிபாட்டில் கூத்துக் கலை பிரதான இடம் வகிக்கின்றது. அக்கூத்துக்கள் சடங்குகளுக்குப் புறம்பாக கோயில் வீதிகளில் இடம்பெறுவதும் உண்டு. சடங்குகளோடு சடங்காகவும் இடம்பெறுவ துண்டு. திரௌபதையம்மன் கோயில்களில் பஞ்சபாண்டவர் முதலானவர்களாக வேடமிட்டு சடங்கு மேற்கொள்ளப்படுவதை உதாரணமாகக் கூறலாம். சடங்குகாலத் தில் காத்தவராயன் கூத்து முதலானவை நேர்த்தி என்ற அடிப்படையிலும் ஆடப்பெறுகின்றன. கூத்துக்கலையானது ஆட்டம், பாட்டு, வாத்தியம், ஒப்பனை முதலானவற்றைத் தன்னகத்து அடக்கிய ஒரு கலையாகும். காவடியாட்டம், கரகாட்டம் முதலானவையும் அத்தகையனவே. இக்கலைகளில் ஒப்பனை பிரதான இடம் வகிக்கின்றது. கூத்துப் பாத்திரங்களுக்கேற்பவும் பிற ஆட்டங்களுக்கு ஏற்பவும் ஒப்பனை இடம்பெறுகின்றது. காவடி, கரகம் முதலானவற்றைத் தயாரிப்பதிலே அலங்காரக்கலை முதன்மை பெறுகின்றது. சடங்குக் காலங்களில் கும்பம் அலங்கரித்தல், கோயில் வளாகத்தை அலங்கரித்தல் என்பனவற்றில் அலங்காரக் கலையின் சிறப்பினைக் கண்டுகொள்ளலாம். கோயில் வாயில்களில் அமைக்கப்பெறும் தோரணங்கள் குறிப்பிட்டுக் கூறத்தக்கன. மூங்கிற் கழிகளாலும் குருத்தோலை, இலை குழை முதலானவற்றாலும், உயர்ந்து விரிந்த வாயில் தோரணங்கள் மிக அலங்காரமாக அமைக்கப்பெறுகின்றன. கிராமிய வழிபாட்டில் இடம்பெறும் கலைகள் இயற்கையோடு இயைந்தனவாய் அமையப்பெறுகின்றமை சிறப்பான அம்சமாகும்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. ஆகமம் சாராத முறையில் வழிபடப்படும் தெய்வங்கள் ஐந்தினைக் குறிப்பிடுக.
2. திரௌபதை எந்த இதிகாசத்தின் நாயகியாக விளங்குகிறாள்?
3. திரௌபதை தெய்வநிலையில் வைத்துப் போற்றப்படுவதற்கான காரணங்கள் யாவை?
4. இலங்கையிலுள்ள பிரதான திரௌபதையம்மன் ஆலயங்கள் எவை?
5. திரௌபதையம்மன் ஆலயச் சடங்குகளைக் குறிப்பிடுக.
5. வைரவர் எவ்வாறு தோற்றம்பெற்றார்?
6. வைரவர் 'சேத்ரபாலகர்' என அழைக்கப்படுவதன் காரணம் யாது?
7. வைரவருக்குரிய விசேட தினங்கள் எவை?
8. நாட்டார் வழிபாட்டில் பயன்படும் தாளவாத்தியங்கள் எவை?
9. நாட்டார் கலைகளாகக் கருதப்படுபவை எவை?
10. அலங்காரக் கலை கோயில்களில் எவ்வாறு முக்கியத்துவம் பெறுகிறது?

## செயற்பாடு

நாட்டார்தெய்வ வழிபாடு ஒன்றில் இடம்பெறும் சடங்குகளைப் பட்டியற் படுத்துக.

# 21 ஈழத்தில் சைவத்தின் தொன்மை

## தேவாரங்களுக்கு முந்திய காலம்

இலங்கையை **சிவபூமி** என்று திருமூலர் கூறுகிறார். 'இராவணன் மேலது நீறு' என திருஞானசம்பந்தர் பாடுகின்றார். இராவணன் இலங்கையை ஆண்டான் என்றும் சிறந்த சிவபக்தன் என்றும் புராண இதிகாசங்கள் எடுத்துரைத்துள்ளன. திருக்கோணேஸ்வரம் பற்றிய ஸ்ரீ தட்சிணகைலாச புராணத்தில், கோணபர்வதத்தில் இராவணன் வழிபாடு செய்வது பற்றி விரிவான கதை உண்டு. இராவணன் தேவியான மண்டோதரி திருக்கேதீஸ்வரத்திலே சிவபெருமானை வழிபாடு செய்தமை பற்றி மாணிக்கவாசகர் பாடியுள்ளார்.

ஈழத்தில் சைவம் தொடர்பான ஆராய்ச்சிகளில், இதுவரை காலமும் தேவாரகாலம் முதலாகவே இலங்கையின் சைவசமய வரலாற்றை - குறிப்பாக பாடல் பெற்ற தலங்களின் வரலாற்றை - விவரிக்க முடிந்தது. கடந்த சில வருடங்களில் இலங்கையில் ஆதிகால சைவசமயம் பெற்றிருந்த சிறப்பினை அறிந்து கொள்வதற்குப் பெருமளவிலான சான்றுகள் கிடைக்கின்றன. தமிழ்நாடு, கேரளம், ஆந்திரப்பிரதேசம் ஆகியவற்றிலிருந்து இற்றைக்கு 2800ஆம் ஆண்டு முதலாக இலங்கையிலே குடியேறிய நாகர் என்னும் இனத்தவர்கள் சைவசமயத்தைப் பரப்பினார்கள். அவர்களுடைய கல்வெட்டுக்கள் பெருமளவிலான பண்பாட்டுச் சின்னங்களிற் காணப்படுகின்றன. அவை தமிழ்மொழியில் எழுதப்பட்டுள்ளன. தமிழ் எழுத்து முறைக்கு மூலமான தமிழ்ப்பிராமி வரிவடிவங்களில் அவற்றை எழுதியுள்ளனர். ஆலயத் தூண்களிலும் கடவுட்படிமங்களிலும் நந்தி, மயூரம், மூசிகம் முதலிய சிற்பங்களிலும் விளக்குகள், அம்மி, ஆட்டுக்கல், குளவி, சங்கு முதலான பொருள்களிலும் கடவுள்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

நாகருக்குச் சிறப்பாகவுரியது நாகவழிபாடு. ஐந்துதலை நாகத்தின் சிற்ப வடிவங்களை அவர்கள் வழிபட்டனர். சில சமயங்களில் ஏழுதலை, ஒன்பது தலை

நாகவடிவங்களும் அவர்களால் வழிபடப்பட்டன. இலங்கையில் வடக்கு, கிழக்கு, வடமத்திய பகுதிகளில் தொன்மையான நாகசிற்பங்கள் பெருந்தொகையானவை காணப்படுகின்றன. அவற்றிலே **மணிநாகன்** என்ற பெயர் எழுதப்பட்டிருக்கும். வழிபாட்டிற்குரிய எல்லாத் தெய்வங்களையும் சமயசின்னங்களையும் மணிநாகன் என்றே குறிப்பிட்டனர். சிவலிங்க வழிபாடு நாகர் மூலமாக இலங்கையிலே பரவியது. ஆதியான குறுனிக்கற்கால மக்களிடையேயும் அது பரவியது.

இலங்கையின் பெரும்பாகத்தில் கிறிஸ்துவுக்கு முற்பட்ட முதல் மூன்று நூற்றாண்டுகளுக்குரிய சிவலிங்க வடிவங்கள் பெருமளவிலே காணப்படுகின்றன. வந்தாறு மூலை போன்ற இடங்களில் மிக உயரமான தூண் வடிவிலான சிவலிங்கங்கள் காணப்படுகின்றன. பனங்காமம், கீரிமலை, இணுவில் (காரைக்கால்) சிவன்கோயில் ஆகியவற்றில் மிகப்பழைமையான சிவலிங்கங்கள் கிடைத்துள்ளன. அவற்றுட் பலவற்றை இன்றும் வழிபடுகின்றனர்.

பாடல்பெற்ற தலங்களான திருக்கோணேஸ்வரம், திருக்கேதீஸ்வரம் என்பன நாகமன்னரால் அமைக்கப்பெற்றவை என்பது அண்மைக்கால ஆய்வுகளின் மூலம் தெரியவந்துள்ளது. முன்னேஸ்வரம், திருக்கரசை, நகுலேஸ்வரம் என்பனவும் அவற்றைப் போன்ற பழைமையுடையவை; நாகரால் அமைக்கப்பெற்றவை. முன்னேஸ்வரத்திலே மணிநாகன் என்ற கடவுட் பெயர் எழுதிய பல சின்னங்கள் காணப்படுகின்றன. அவற்றிலே சில வழிபாட்டுச் சின்னங்கள்; வேறு சில கோயிற் பாவனைக்கு உரியவை - விளக்கு, அம்மி, தூண்கள் போன்றவை. முன்னேஸ்வரத்திலே பல அடுக்குகளில் அமைந்த பெரும் கல்விளக்கு ஒன்று காணப்படுகின்றது. அது ஏறக்குறைய நூறு திரிகள் எரிக்கக்கூடிய விளக்கு. இராக்காலங்களிலும் அந்நாட்களில் வழிபாடுகள், விழாக்கள் என்பன நடைபெற்றமைக்கு அது ஆதாரமானது. கடவுட் பெயர் எழுதிய தூபக்கல் ஒன்றும் அங்குண்டு.

திருகோணமலை மாவட்டத்துப் பிரசித்தமான திருத்தலங்களில் திருக்கரசையும் ஒன்றாகும். அங்கு இலிங்கம், நந்தி, ஆவுடையார், விளக்கு முதலியவற்றிலே மணிநாகன் என்னும் பெயர் அமைந்துள்ளது.

தாண்டவக் கோலத்திலுள்ள சிவபெருமானின் படிமமொன்று கண்டி மாவட்டத்தில் கடலாதெனிய என்னும் ஊரிலே காணப்படுகின்றது. அப்படிமத்தில் சிவபெருமனைப்போலவே குரங்கொன்றும் தாண்டவம் புரிகிறது.

பொலன்னறுவை, கந்தளாய், அனுராதபுரம் போன்ற இடங்களில் ஆவுடையார் சின்னங்கள் எழுத்துகளோடு காணப்படுகின்றன. அவற்றில் மணிநாகன் என்ற பெயர் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

குமாரக்கடவுள் வழிபாடும் கணபதி வழிபாடும் அக்கால சைவசமயத்திலே கலப்புற்றிருந்தன. இதனைப் பற்றிப் பழந்தமிழ் நூல்களிலே கிடைக்காத சான்றுகள் இலங்கையிலே கிடைக்கின்றன. பெயர் பொறித்த விநாயகரின் படிமங்கள் சில இன்றும் காணப்படுகின்றன. மட்டக்களப்பு மாவட்டத்து வந்தாறுமூலை என்னும் ஊரில் நீர்முகப்பிள்ளையார் கோயில் என வழங்கும் ஆலயம் ஒன்று உண்டு. அது முற்காலங்களில் சிவன் கோயிலாக அமைந்திருந்தது. ஏறக்குறைய 2000 வருடங்கள் பழைமையுடைய சிற்பங்கள் அங்கு காணப்படுகின்றன. ஐந்துதலை நாகம், நாகபந்தவடிவம், விநாயகரின் கலைவனப்புடைய சிற்பம், வைரவரின் வடிவம், அவரின் வாகனமாகிய நாயின் வடிவம் என்பன காணப்படுகின்றன. அவை யாவற்றிலும் மணிநாகன் பெயர் எழுதப்பட்டுள்ளது.

விநாயகரின் மிகப் பழைமையான வடிவம் ஒன்று முன்னேஸ்வரத்திலே பேணப்பட்டு வருகின்றது. அது கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலத்திற்குரியது போலத் தெரிகின்றது. கணபதி வழிபாட்டின் சின்னமாக யானையைக் கொள்ளும் வழக்கம் அக்காலத்திலே காணப்பட்டது. யாழ்ப்பாணத்தில், பஞ்சலோக வார்ப்பான யானையின் வடிவமொன்று காணப்படுகின்றது. அது துதிக்கையை நேராக நீட்டிய கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. மணிநாகன் என்னும் பெயர் பல இடங்களிலே பதிக்கப்பட்டுள்ளது. ஒருபுறத்தில் கணபதி என்ற பெயரை கூரிய கருவியொன்றினால் வெட்டியுள்ளனர்.

குமாரக்கடவுளின் வழிபாடும் மிகவும் புராதனமானது. இரும்பினாலான வேல்வடிவங்கள் கந்தரோடையிலும், பூநகரியிலும் கிடைத்துள்ளன. நகுலேஸ் வரத்தில் கிடைத்துள்ள சமய சின்னங்களில் ஒன்று மயில் வடிவம். கல்லிலே அமைக்கப்பெற்ற அந்தச் சிற்பத்தில் நாகபாம்பின் தலையை சொண்டினாலேயே கவ்விக்கொண்டு அதன் உடலை கால்களினாலே மிதிக்கின்ற கோலத்தில் மயிலின் சிற்பம் உருவாக்கப்பட்டுள்ளது. கிழக்கிலங்கையிலுள்ள திருப்படைக் கோயில்களில் ஒன்றான திருக்கோயில் என்னும் தலத்தில் நாகர்காலக் கல்வெட்டுக்கள் கிடைத்துள் ளன. முருகவழிபாட்டுத் தலங்கள் சில மிகப் புராதனமானவை, நாகமன்னர்களால் அமைக்கப்பட்டவை என்று கருதுவதற்கு இக்கல்வெட்டுக்கள் ஏதுவாகின்றன.

வவுனியா அருங்காட்சியகத்திலே வனப்புடன் அமைந்த கோலத்திலே மகிடமர்த்தனியின் சிற்பமொன்று காணப்படுகின்றது. அதிலும் மணிநாகன் என்னும் பெயர் காணப்படுகின்றது. ஆதிகாலத்தில், இலங்கையிலே சைவசமய வழிபாட்டுத் தலங்கள் மணிநாகன் பள்ளி என்றே குறிப்பிடப்பட்டுள்ளன. பிற்காலத்திலேதான் அவற்றை ஈஸ்வரங்கள் என்று சொல்லத் தொடங்கினார்கள்.

நாகர்கள் பல இடங்களிலே கற்றளிகளான கோயில்களை அமைத்தனர். முன்னேஸ்வரம், திருக்கரசை, நவாலி (கண்ணகையம்மன் கோயில்) முதலிய இடங்களிலே நாகர் அமைத்த கற்றளிகளின் அழிபாடுகளிலுள்ள பொருட்களை மீண்டும் கட்டடப்பொருள்களாகப் பயன்படுத்தியுள்ளனர். அவ்விதமான கற்களிலே மணிநாகன் என்னும் பெயர் பொறிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. அக்கால இலங்கையில் மிக உயரமான தூண்களையுடைய மண்டபங்களோடு கூடிய கோயில்களும் உருவாக்கப்பட்டன. திருக்கரசை, சேனையூர் திரௌபதியம்மன் கோயில் ஆகியவற்றிலே தொன்மைவாய்ந்த மிக நீளமான கற்றூண்கள் காணப்படு கின்றன. அவற்றில் நாகர் காலத்துக்குரிய தமிழ் எழுத்துக்களைக் காணமுடிகின்றது.

ஒட்டுமொத்தமாக நோக்குமிடத்து புராதன கால இலங்கையில் சைவசமயம் இலங்கையின் பல பாகங்களிலும் பரவியிருந்தது. அதற்குரிய சின்னங்கள் நாகரோடு தொடர்புடையவை. சிவலிங்க வழிபாடு பொதுவழக்காகிவிட்டது. சில சமயங்களில் நாக வழிபாட்டின் செல்வாக்கும் சைவ வழிபாட்டு முறையில் ஏற்பட்டது. வவுனியாவிலுள்ள சாளம்பன் குளத்திலே அணைக்கட்டின் ஓரமாகக் கிடைத்துள்ள சிவலிங்கம் ஒன்று நாகலிங்கம் என்று கொள்ளத்தக்கது. அதன் தலைப்பாகத்திலே நாகவடிவமும் தெரிகின்றது. பெருங்கற்பண்பாட்டு ஈமச்சின்னம் ஒன்றிலே ஒரு கல்லில் ஒற்றைத்தலை நாகமும் அதன் மேல் சிவலிங்கவடிவமும் தெரிகின்றன.

இரத்தினபுரி மாவட்டத்தில் ரஞ்சமடம என்னும் இடத்தில் அகழ்வாய்வின் மூலம் கண்ட ஈமக்கல்லறை ஒன்றில் திரிசூலவடிவமும் நாகபந்த உருவமும் காணப்படுகின்றமை குறிப்பிடத்தக்கது. இலங்கையிலே பாமர வழக்கிலும் பொது வழக்கிலும் காணப்படுகின்ற சைவசமய வழிபாட்டு முறைகளின் மூலங்களை நாகர்காலத்துக்குரிய சின்னங்களிலே காணமுடிகின்றது.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. இலங்கையை, சிவபூமி என்று சிறப்பித்தவர் யார்?
2. இலங்கையில் சிவபக்தனாக அரசாண்டவன் என்று இதிகாசங்களிற் குறிப்பிடப் படுபவன் யார்?
3. அவனைப் போற்றிப்பாடிய அருளாளர்கள் யாவர்?
4. பூர்விக இலங்கையில் சைவத்தை நிலைபெறச் செய்தவர்கள் யாவர்?
5. ஸ்ரீ தட்சிணகைலாச புராணம் எந்தத் தலம் பற்றிய நூல்?
6. நாகர் எவற்றை வழிபட்டனர்?
7. மிகப்பழமையான சிவலிங்கங்கள் இலங்கையில் எங்கு கிடைத்துள்ளன?
8. மணிநாகன் என்ற பெயர் எங்கெல்லாம் காணப்பட்டது?
9. சிவ வழிபாடு தவிர, வேறு எவ்வகையான வழிபாடு, பண்டைக்காலத்தில் காணப்பட்டது?
10. நாகர்கள் எவ்விடங்களில் கற்றளிகளை அமைத்தனர்?

## செயற்பாடு

ஈழத்தில் சைவத்தின் தொன்மையை உணர்த்தும் சாசனங்கள், தூண்கள், ஆலயங்கள் முதலியவற்றின் படங்களைத் தேடிக் காட்சிப்படுத்துக.

# 22 ஈழத்து ஆலயங்கள்

## களுதாவளைப் பிள்ளையார் ஆலயம்




களுதாவளை சுயம்புலிங்கப் பிள்ளையார் ஆலயம் மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் ஒருங்கே அமையப் பெற்றது. கிழக்கிலங்கையில் மட்டக்களப்பு நகருக்குத் தெற்கே களுதாவளை எனும் கிராமத்தில் அமைந்துள்ளது.

களுதாவளைப் பிள்ளையார் ஆலயம் வரலாற்றுச் சிறப்பு மிக்க ஆலயமாகும். சுமார் 300 ஆண்டுகளுக்கு முற்பட்டதாகக் கருதப்படும் இத்திருத்தலத்தின் தோற்றம் பற்றி களுதேவாலயக் கல்வெட்டு எடுத்தியம்புகின்றது.

இவ்வாலயம் அமைந்துள்ள இடம் முன்னர் அடர்ந்த வனப்பகுதியாக இருந்தது. வேடுவர் தலைவனான களுவன் என்பவன், வேட்டையாடும் பொருட்டு இங்கு வந்தான்; காரியம் வெற்றி அடையும் பொருட்டு இறையருளை நாடி வெற்றிலைச் சடங்கு (வெற்றிலையைக் கொண்டு செய்யப்படும் சடங்கு) செய்வதற்கு இவ்விடத்தை தெரிவு செய்தான்; சடங்கினை நிறைவேற்றி இறையருளும் பெற்றான். இவ்வாறு வேடுவர் தலைவனான களுவன் வழிபட்ட இடம் களுதேவாலயம் என அழைக்கப்பட்டது. பின்னர் ஊரின் பெயர் களுதாவளை என்று ஆனது.

கதிர்காமத் திருத்தலத்துக்கு பாதயாத்திரை செல்லும் அடியார்கள் தங்கிச் செல்லும் புண்ணிய பூமியாக இவ்விடம் விளங்குகிறது. ஒருமுறை யாத்திரை வந்த இலிங்கதாரிகள் இவ்விடத்திலே நிலத்திற்குமேல் இலிங்கத்தை உயர்த்தி வைக்க முயன்றனர். ஆயின் இலிங்கம் வளர்ந்து நிலத்தினூடாக கீழ் நோக்கிப் பரவியது எனவும், அதனை எடுக்கவியலாத இலிங்கதாரிகள் வியப்புற்று நின்றவேளை செய்தியறிந்து ஒன்றுகூடிய மக்கள் கொத்துப் பந்தலிட்டு அதனை வழிபாடு செய்யத் தொடங்கினர் எனவும் கல்வெட்டுக் கூறுகின்றது.

இவ்வற்புத இலிங்கத்தின் மகிமையைக் கேள்வியுற்று அதனைப் பார்க்க வந்த மணியாள் பூபால வன்னிமை என்பவர் அச்சிவலிங்கத்தில் பிள்ளையார் அம்சம் இருந்ததைக் கண்டுணர்ந்தார். அதனைப் பிள்ளையாராக வழிபடுமாறு மக்களை வேண்டினார். அவ்வாறே மக்களும் அத்திருவுருவத்தை சுயம்புலிங்கப் பிள்ளையார் எனப் போற்றி வழிபட ஆரம்பித்தனர்.

கலைவனப்பு மிக்க சிற்பங்களோடும் ஓவியங்களோடும் காட்சியளிக்கும் இந்த ஆலயம் மடாலய வகையைச் சார்ந்தது. இங்கு சுயம்புலிங்கப் பிள்ளையார் வீற்றிருந்து அடியார்க்கு அருள்பாலிக்கின்றார். இங்கு நித்திய, நைமித்திய, காமிய கிரியைகள் மிகச் சிறப்பான முறையில் நடைபெறுகின்றன.

இவ்வாலயத்தின் தலவிருட்சமாக வில்வமரம் விளங்குகின்றது. இங்கு ஆனி உத்தரத்தை தீர்த்தோற்சவ தினமாகக் கொண்டு பத்து நாட்கள் மகோற்சவம் இடம்பெறுகின்றது.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. களுதாவளைப் பிள்ளையார் ஆலய வரலாறுடன் தொடர்பான கதை ஒன்றினை எழுதுக.
2. களுதாவளைப் பிள்ளையார் ஆலய தலவிருட்சம் எது?
3. இவ்வாலயத்தின் மூலமூர்த்தியின் சிறப்பு யாது?
4. இவ்வாலய அமைப்பு எவ்வகையானது?
5. களுதாவளைப் பிள்ளையார் ஆலய வரலாற்றை எவ்வாறு அறியலாம்?

## கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரம்



மட்டுநகரிலிருந்து தெற்கே மண்முனைத்துறையினூடாக ஒன்பது மைல் தொலைவில் கொக்கட்டிச்சோலை எனும் கிராமம் அமைந்துள்ளது. பண்டைக்காலத்தில் கொக்கட்டி(கொக்கு நெட்டி) மரங்கள் நிறைந்திருந்தமையால் இக்கிராமத்திற்கு கொக்கட்டிச்சோலை எனும் பெயர் ஏற்படலாயிற்று. இயற்கை எழில்மிக்க இக்கிராமத்தில் நிழல் மரங்கள் நிறைந்த திருவீதியில் தான்தோன்றீஸ்வரர், கோயில் கொண்டுள்ளார்.

பண்டைக்கால அரசர்களது மதிப்பும் மானியங்களும் சீர்வரிசைகளும் பெற்றவையான கோயில்கள் சில மட்டக்களப்பில் உள்ளன. இவை தேசத்துக் கோயில்கள் எனப்படும். அவ்வாறு வழங்கப்பெற்றவற்றுள் தான்தோன்றீஸ்வரர் கோயில் முக்கியமானதாகும். மட்டக்களப்பில் உள்ள பழமையான சிவன் கோயில் என்ற பெருமை இக்கோயிலுக்கு உண்டு. இக்கோயிலில் இறைவன் சுயம்புலிங்கமாகத் தானே தோன்றி வீற்றிருந்து அருள்பாலிக்கிறார்.

மட்டக்களப்பு மான்மியம் எனும் நூலில் இவ்வாலயத்தின் தோற்றம் பற்றிய குறிப்புகள் உள. மட்டக்களப்பின் மண்முனைப்பகுதியை உலகநாச்சி என்னும் அரசி ஆண்டு வந்தாள். அக்காலத்தில் தேன் எடுக்கச் சென்ற வேடர், கொக்கட்டி மரம் ஒன்றை, தேன் எடுப்பதற்காக வெட்டினர். மரத்திலிருந்து உதிரம் பெருகியது. பதைபதைத்த வேடுவர் தலைவன், நடந்ததை உலகநாச்சியிடம் தெரிவித்தான். உலகநாச்சி தன் பரிவாரங்களுடன் குறித்த இடத்திற்குச் சென்று பார்த்தபோது அவ்விடத்தில் சிவலிங்கம் ஒன்று புதையுண்டு கிடக்கக்கண்டு அதிசயித்தாள். அந்த இடத்தில் ஆலயம் ஒன்று அமைப்பித்தாள். அவளது ஆலயத்திருப்பணிக்கு மட்டக்களப்பை ஆண்ட தருமசிங்கன் உதவி புரிந்ததாக கூறப்படுகின்றது.

இக்கோயில் தொடர்பாகப் பிறிதொரு ஐதிகமும் உண்டு. பண்டைக்காலத்தில் இந்தியாவிலிருந்து கதிர்காமத்தைத் தரிசிக்க முத்துலிங்கர், கொக்கட்டியார் எனும் சித்தர்கள் இருவர் யாத்திரையாக வந்தனர். தற்போது ஆலயமுள்ள இடத்தில் கொக்கட்டியார் சமாதியடைந்தார். அவரது சமாதியிலிருந்து சிவலிங்கம் ஒன்று தோன்றியிருந்தது. அதைக் கொக்கட்டி மரம் மறைத்திருந்தது. வேடன் ஒருவன் அதனை வெட்டியபோது மரத்தினின்றும் உதிரம் வடிந்தது. அச்செய்தியைக் கதிர்காம யாத்திரிகரான செட்டியார் ஒருவர், சொப்பனத்தின் மூலம் அறிந்தார். அவர் சமாதி இருந்த இடத்துக்கு வந்து, அங்கிருந்த சிவலிங்கத்துக்கு கோயில் எழுப்பித் திருப் பணிகள் செய்தார்.

இலங்கையில் சோழராட்சியின்போது சோழமன்னர்களின் ஆதரவை இவ்வா லயம் பெற்றுவிளங்கியது. குளக்கோட்ட மன்னன், கலிங்கமாகன் ஆகியோர் இவ்வாலயத் திருப்பணிகளை முன்னெடுத்தனர்.

இவ்வாலயத்தில் இறைவன் தான்தோன்றீஸ்வரராகவும் இறைவி பார்வதி அம்பிகையாகவும் வீற்றிருந்து அருள்பாலிக்கின்றனர். இதன் தலவிருட்சம் கொக்கட்டி மரம் ஆகும். இங்கு காணப்படும் கொடித்தம்பம் 60 அடி உயரம் கொண்டது. இதுவே இலங்கையில் மிக உயரமான கொடித்தம்பமாகக் காணப்படுகின்றது.

ஆலயத்தின் பரிபாலகரை வண்ணக்கர் என அழைக்கும் மரபு காணப்படுகின்றது. இங்கு பூசை செய்பவர்கள் 'சங்கமர்' எனும் வீரசைவக் குருமார் ஆவர். இக்கோயிலின் மகோற்சவம் ஆவணி வளர்பிறை முதலாம் நாள் கொடியேற்றத்துடன் ஆரம்பமாகி,பதினைந்து தினங்கள் நடைபெறும்.

இவ்வாலயத்தின் தேர்த்திருவிழா தேரோட்டம் என்று சிறப்பிக்கப்படுகிறது. மட்டக்களப்பில் இன்று பல ஆலயங்களில் தேர்கள் வலம் வந்தாலும் தேரோட்டம் எனும் சிறப்பு வழக்கு இவ்வாலயத்துக்கே உரித்தாயிற்று. தேர்த்திருவிழா நாள் இரவு திருச்சூகர வேட்டை இடம்பெறும் (சூகரம் - பன்றி). அதன்பின் குடுக்கை கூறுதல் எனும் நிகழ்வு இடம்பெறும். திருவிழாவில் பங்கு கொண்ட அனைவரையும் கௌரவிக்கும் முகமாக குடுக்கை கூறும் கல்வெட்டு படிக்கப்படும். மறுநாள் தீர்த்தோற்சவத்துடன் திருவிழா இனிது நிறைவுறும்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. கொக்கட்டிச்சோலை தான்தோன்றீஸ்வரம் தொடர்பாக நிலவும் ஐதிகம் ஒன்றினை எழுதுக.

2. கொக்கட்டிச்சோலை ஆலயத்திற்குத் திருப்பணி செய்த மன்னர்கள் யாவர்?

3. அங்கு திருச்சூகர வேட்டை நடைபெறும் தினம் எது?

4. வண்ணக்கர், சங்கமர் எனப்படுவோர் யாவர்?

5. குடுக்கை கூறுதல் நிகழ்வு ஏன் இடம்பெறுகிறது?

6. இக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன், இறைவி பெயர் யாது?

## நல்லூர்க் கந்தசுவாமி கோயில்




ஈழநாட்டின் வரலாற்றுப் புகழ்மிக்க முருக வழிபாட்டுத் தலங்களுள் நல்லூர்க் கந்தசுவாமி கோயிலும் ஒன்றாகும். ஆரியச் சக்கரவர்த்திகளின் வழிபாட்டிற்கு உரிய கோயிலாக இவ்வாலயம் திகழ்ந்தது.

கோட்டை இராச்சியத்தை ஆண்ட ஆறாம் பராக்கிரமபாகுவின் மகனாகிய செண்பகப் பெருமாள், யாழ்ப்பாண இராச்சியத்தைக் கைப்பற்றி நல்லூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டான். அம்மன்னனுடைய காலத்திலேயே நல்லூர்க் கந்தசுவாமி கோயில் கட்டப்பட்டது,

இவ்வாலயம் சிங்கைப் பர0 ராசசேகரன் ஆட்சிக்காலத்தில் மேலும் சிறப்புப் பெற்றது. இவன், நல்லூர் கந்தசுவாமி ஆலயத்தை நடுநாயகமாகக் கொண்டு, நான்கு எல்லைகளிலும் நான்கு கோயில்களைக் கட்டினான். வடக்கே சட்டநாதர் கோயிலும், கிழக்கே வெயிலுகந்த விநாயகர் கோயிலும், தெற்கே கைலாசநாதர் கோயிலும், மேற்கே வீரமாகாளி அம்மன் கோயிலும் அமைக்கப் பெற்றன. அத்துடன் நல்லூர்க் கந்தசுவாமி கோயிலுக்குச் சமீபமாக ஓர் ஏரியை அமைத்தான். யமுனா நதியின்

திவ்விய தீர்த்தத்தை கொணர்வித்து அந்த ஏரியில் கலந்து அதற்கு யமுனா ஏரி எனப் பெயரிட்டான். அது மருவி யமுனாரி என்று ஆயிற்று.

நல்லூர்க் கந்தசுவாமி ஆலயம், பதினாறாம் நூற்றாண்டில் போர்த்து கேயரால் அழிக்கப்பட்டது. ஒல்லாந்தர் ஆட்சியில் அரசாங்க உத்தியோகத்தராக இருந்த இரகுநாதமாப்பாண முதலியார் என்பவர், அரசிடமிருந்து நிலத்தை வாங்கி, அதில் ஆலயத்தைப் புதிதாகக் கட்டினார். மன்னர்களால் போற்றப்பட்டுவந்த மூலவிக்கிரகத்துக்குப் பதிலாக வேல் ஒன்றினை மூலமூர்த்தியாகக் கொண்டு அந்த ஆலயம் கட்டியெழுப்பப்பட்டது.

இவ்வாலயம் கிழக்கு, தெற்கு, வடக்கு திசைகளில் கோபுர வாசல்களைக் கொண்டுள்ளது. ஆலயத்தினுள்ளே தென்புறத்தில் தீர்த்தக்கேணி அழகுற அமைந்துள் ளது. இவ்வாலயத்தின்மேல் புலவர்கள் பலர் பிரபந்தங்கள் பாடியுள்ளனர்.

இவ்வாலயத்தில் நித்திய, நைமித்திய பூசைகள் காலந்தவறாது நடைபெறு கின்றமை சிறப்பம்சமாகும். இங்கு, ஆவணி அமாவாசையைத் தீர்த்த தினமாகக் கொண்டு இருபத்தைந்து நாட்கள் மகோற்சவம் மிகச் சிறப்பாக நடைபெறுகின்றது.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நல்லூர்க் கந்தசுவாமி கோயிலைக் கட்டிய மன்னன் யார்?
2. சிங்கைப் பரராசசேகரன் செய்த திருத்தொண்டுகள் யாவை?
3. போர்த்துக்கேயரால் அழிவுற்ற ஆலயத்தை மீண்டும் புதிதாகக் கட்டியவர் யார்?
4. இவ்வாலயத்தின் மூலமூர்த்தியாக விளங்குவது எது?
5. இவ்வாலயத்தில் எத்தனை நாள்கள் உற்சவம் நடைபெறும்? எப்போது நிறைவுபெறும்?

## நயினை நாகபூஷணி அம்மன் ஆலயம்



யாழ்ப்பாணக் குடா நாட்டின் தென்மேற்காக உள்ள தீவுகளுள் ஒன்றே நயினா தீவு. இதை நாகதீபம், மணிபல்லவம், மணித்தீவு, பிராமணத்தீவு என்றும் குறிப்பிடுவர். இத்தீவிலேயே நாகபூஷணி அம்மன் ஆலயம் அமைந்துள்ளது. இவ்வாலயத்திற் குடிகொண்டிருக்கும் இறைவியை நாகபூஷணி, நாகம்மாள், நாகேஸ்வரி எனப் பல நாமங்களால் போற்றுவர். அறுபத்துநான்கு சத்திபீடங்களுள் நயினை நாகபூஷணி அம்மன் ஆலயமும் ஒன்றாகும்.

விஜயன், இலங்கைக்கு வருவதற்கு முன்பே இலங்கையில் இயக்கர், நாகர் என்னும் இரு இனத்தவர் வாழ்ந்து வந்தனர். நாகர்கள் சிவனை முழுமுதற் பொருளாகக் கொண்டு வழிபட்டவர்கள். அவர்களால் அமைக்கப்பட்ட ஆலயங்களுள் ஒன்றே நயினை நாகபூஷணி அம்மன் ஆலயம் என்று கருதப்படுகின்றது.

இந்த ஆலயம் தொடர்பான ஒரு கதை உண்டு. முன்னொரு காலத்திலே நாகம் ஒன்று இத்தீவகத்தின் வடக்கே உள்ள புளியந்தீவிலிருந்து நாடோறும் பூக்கள் கொண்டுவந்து, அம்பிகையைப் பூசித்து வந்தது. ஒருநாள் பூக் கொண்டுவரும் வழியில், கருடன் ஒன்று அதனைக் கொல்ல முயன்றது. நாகம் அச்சம் கொண்டு, கடலில் இருந்த கல்லொன்றுடன் சுற்றிக் கொண்டது. பிறிதொரு கல்லில் அமர்ந்த கருடன் நாகத்தைக் கொல்லத் தருணம் பார்த்துக்கொண்டிருந்தது. அப்பொழுது, அவ்வழியே

மரக்கலம் ஒன்றிலே வந்த வணிகன் ஒருவன் அக்காட்சியைக் கண்டான்; நாகத்தின் மீது அனுதாபம் கொண்டான்; கருடனிடம் 'நீ நாகத்தைக் கொல்ல வேண்டாம்' என வேண்டினான். கருடனோ, 'நீ உனது செல்வங்கள் யாவற்றையும் என்முன் வைத்தால் அதனைக் கொல்ல மாட்டேன்' என்று கூறியது. வணிகனும் அவ்வாறே செய்தான். உடனே கருடன் அவ்விடத்தை விட்டுச் சென்றது.

வணிகன் வீடு சென்றான். அன்றிரவு அவனது அறையில் பேரொளி ஒன்று தோன்றிற்று. அவன் அவ்வொளியை நெருங்கிய பொழுது அது விலைமதிப்பற்ற நவரத்தினங்களில் இருந்து தெறித்த ஒளி என்பதைக் கண்டான். 'இது அம்பிகையின் திருவருட் செயல்' என உணர்ந்து, அம்பிகைக்குப் பெருங்கோயில் கட்டினான். அவ்வாலயப் பூசகராக நயினைப் பட்டரை நியமித்தான்.

இவ்வாலயத்தில் ஐந்துதலை நாகபடக் குடையின்கீழ் அம்பாள் வீற்றிருக்கிறாள். இம்மூர்த்தம் மிகப் பழமையானது. இவ்வாலயத்தின் தலவிருட்சம் வன்னி மரமாகும். இதன் தீர்த்தமான சித்தாமிர்த புட்கரணி ஆலயத்தின் மேற்கில் அமைந்துள்ளது.

இவ்வாலயத்தில் நித்திய, நைமித்திய பூசைகள் கிரமமாக நடைபெறுகின்றன. ஆனிப் பூரணையை தீர்த்த நாளாகக் கொண்டு மகோற்சவம் பதினைந்து நாட்கள் நடைபெறுகின்றது. நாட்டின் பல்வேறு இடங்களிலுமிருந்து அடியார்கள் இவ்விழாக்களின் பொழுது அம்பாளைத் தரிசிப்பதற்காக வருகை தருவர். ஆனிமாத பூரணை நிலவொளியில் அலைகடல் மத்தியில் அம்பாள் தெப்பத்தில் எழுந்தருளிக் காட்சி கொடுப்பது அடியார்களின் மனதை விட்டு நீங்காத அற்புதக் காட்சியாகும்.

இந்த ஆலயத்தைச் சார்ந்ததாக 'அமுத சுரபி' என்ற பெயரிலான அன்னதான மடம் ஒன்று அமைந்துள்ளது. அம்மடத்தில் விசேடதினங்களில் அன்னதானம் வழங்கப் பெறுகின்றது. கோயில் மடத்தில் நித்தம் அன்னதானம் வழங்கப்படுகின்றமை சிறப்பான அம்சமாகும். நாகபூஷணி அம்மன் ஆலயம் சமூகப் பணிகள் பலவற்றைச் செய்துவருவதும் குறிப்பிடத்தக்கது.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. நயினாதீவு இலங்கையின் எப்பாகத்தில் அமைந்துள்ளது?
2. இத்தீவுக்கு வழங்கப்படும் வேறு பெயர்கள் யாவை?
3. நாகபூசணி அம்மன் ஆலயத்தை அமைத்தவர்களாகக் கருதப்படுவோர் யாவர்?
4. இக்கோயிலுடன் தொடர்புடைய கதை யாது?
5. இக்கோயிலின் மூலமூர்த்தியின் தோற்றம் எத்தகையது?
6. இக்கோயிலின் மகோற்சவம் ஆரம்பமாகும் தினம் யாது? எத்தனை நாள்கள் மகோற்சவம் இடம்பெறும்?
7. இந்த ஆலயத்துக்கே உரிய சிறப்பான உற்சவம் யாது?

## புன்னைச்சோலை ஸ்ரீ பத்திரகாளி அம்மன் ஆலயம்



மட்டக்களப்பு நகரிலிருந்து வடக்கே நாலரை கிலோமீற்றர் தொலைவில் புன்னைச்சோலை எனும் கிராமம் உள்ளது. இங்கு புன்னை முதலான மரங்கள் நிறைந்த அழகிய சோலையின் மத்தியில் ஸ்ரீ பத்திரகாளி அம்மன் ஆலயம் விளங்குகின்றது.

முன்னர், புன்னைச் சோலைக் கிராமத்தின் பெரும்பகுதி காடாகவே இருந்தது. அவ்வழியால் சென்ற பெரியார் என்னும் அடியவருக்கு பத்திரகாளியம்பாள் காட்சியளித்தாள். அந்த அதிர்ச்சியில் அவர் மயக்கமுற்றார். மயக்கம் தெளிந்து

அம்பாளைக் காணாது உருகிநின்ற அடியவர் அம்பாளுக்கு அவ்விடத்திலேயே சிறிய ஆலயம் அமைத்து வழிபடத் தொடங்கினார். அன்னையின் அருட்கடாட்சம் எங்கும் பரவவே ஆலயத்துக்கு அடியார் கூட்டம் பெருகியது. ஆலயம் புதுப்பொலிவு பெற்றது.

இவ்வாலயத்தில் பாரம்பரியமான சடங்குகள் இன்றும் பேணப்பட்டு வருகின்றன. ஆலயத்தின் கருவறைக்கதவு ஆனிமாதத்தில் ஆறுநாள் இடம்பெறும் சடங்கின்போது மாத்திரமே திறக்கப்படும்.

ஆறுநாள் சடங்கில் தீமிதிப்பே பிரதானமானதாகும். திருக்கதவு திறத்தல், அம்மனை எழுந்தருளப்பண்ணுதல், கன்னிமார் பிடித்தல், கலியாணக்கால் வெட்டுதல், எரிக்கிளை(எருக்கலை) வெட்டுதல், நெல்லுக்குற்றுதல் முதலான சடங்குகள் பக்திபூர்வமாக இடம்பெறும். இங்கு ஆயிரக்கணக்கான மக்கள் தங்கள் நேர்த்திக்கடனை நிறைவேற்றுவதற்காக தீமிதிப்பர். இங்கு மாதந்தோறும் பௌர்ணமி தினத்தில் விசேட வழிபாடுகள் இடம்பெறுவது குறிப்பிடத்தக்கது.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. புன்னைச்சோலை ஸ்ரீ பத்திரகாளியம்மன் ஆலயம் எவ்வாறு தோற்றம் பெற்றது?
2. இங்கு எந்தக்காலத்தில், எத்தனை நாட்கள் சடங்குகள் இடம்பெறுகின்றன?
3. அவற்றுள் பிரதானமான சடங்கு எது?
4. இக்கோயிலின் தோற்றத்துடன் தொடர்புடைய அடியவர் பெயர் யாது?
5. இக்கோயிலில் இடம்பெறும் சடங்குகளை வரிசைப்படுத்துக.

## செயற்பாடு

நீர் மேலே கற்ற ஆலயங்களின் இறைவன், இறைவி பெயர், தீர்த்தம், தல விருட்சம், மகோற்சவ காலம் என்பவற்றை அட்டவணைப்படுத்துக.

# 23 பிள்ளையார் கதை



வரதபண்டிதர் யாழ்ப்பாணத்தில் ஒல்லாந்தர் ஆட்சி நிலவிய காலத்தில் சுன்னாகம் என்னும் ஊரில் வாழ்ந்தவர்; அந்தண குலத்தவர்; மருத்துவர்களாக விளங்கியவர்களின் பரம்பரையில் வந்தவர். அவர் போர்த்துக்கேயர் ஆட்சிக்காலத்தில் அழிவுக்குள்ளான சைவ மரபுகளை மீட்டெடுத்து மீளவும் மக்கள் மத்தியில் பரப்புவதில் ஈடுபாடு காட்டினார்; சைவ விரதங்களின் சிறப்புக்களை எடுத்துரைக்கும் நூல்கள் சிலவற்றை இயற்றினார். **பிள்ளையார் கதை, சிவராத்திரிபுராணம், ஏகாதசி புராணம்** என்பவை அத்தகையவை. இந்நூல்களுள் 'பிள்ளையார் கதை' பற்றி இங்கு நோக்குவோம்.

பிள்ளையார் கதை எழுநூற்று நாற்பத்துநான்கு அடிகளைக் கொண்ட ஆசிரியப்பாவால் ஆகிய சிறியதொரு நூலே. ஆயினும் அது இலங்கை இந்து மக்களிடையே மிகுந்த செல்வாக்குப் பெற்றது; பாராயண வழக்கில் உள்ளது; விநாயக சஷ்டி விரதத்தை அனுட்டிப்பவர்கள் விரதகாலம் இருபத்தொரு நாளும் இந்த நூலைப் பாராயணம் செய்கிறார்கள். விநாயகசஷ்டி விரதத்தைக்கூட அவர்கள் பெரும்பாலும் 'பெருங்கதை' விரதம் என்றே சுட்டுகிறார்கள்.

வரதபண்டிதர், பல புராணங்களிலும் காணப்படுகின்ற கதைகளை ஒன்றாகத் திரட்டி, விநாயகருக்குரிய சஷ்டி விரதமான்மியத்தை உரைத்தார் என்று நூலின் பாயிரத்தில் சொல்லப்பட்டுள்ளது. அவ்வாறே இந்த நூலிலே பல உபகதைகள் காணப்படுகின்றன.

## நூலின் உள்ளடக்கம்

- உமாதேவியார் பூமியிலே மானிடப் பெண்ணாகப் பிறந்து தவம் செய்து சிவபிரானைத் திருமணம் செய்தமை.

- இருவரும் யானை வடிவம் பெற்று விநாயகரை ஈன்றருளியமை.

- தான் பெற்றுக்கொண்ட வரங்களின் பலத்தால் பூவுலகில் பெருங்கொடுமை செய்துவந்த கஜமுகாசுரனை விநாயகர், தம் தந்தங்களுள் ஒன்றை முறித்துக் குத்த, வீழ்ந்த கஜமுகாசுரன் மூசிகமாக உருமாறி தாக்கவர, விநாயகர் அதனை வாகனமாக்கிக் கொண்டமை.

- ஆவணி விநாயக சதுர்த்தி விரதத்தை நோற்ற தேவர்களின் முன் விநாயகர் நடனமாட, அதைப்பார்த்துச் சிரித்த சந்திரனுக்கு விநாயகர் சாபம் இட்டமை.

மேற்குறிப்பிட்ட விடயங்கள் நூலின் தொடக்கத்திலே விபரிக்கப்பட்டுள்ளன. விநாயகர், சந்திரனைக் கோபித்துச் சாபம் வழங்கியதைக் கண்ட தேவர்கள், விநாயகர் சஷ்டி விரதத்தை நோற்றார்கள் என்று கூறி, பூமியில் உள்ள மக்கள் அவ்விரதத்தை நோற்ற வகையினை இனிச் சொல்லுவோம் என்ற பீடிகையோடு விநாயகசஷ்டி விரத மகிமை எடுத்துரைக்கப்படுகின்றது. அதன் சுருக்கம் வருமாறு:

பஞ்சபாண்டவர்கள், கண்ணபிரானிடம் விரதபலன் உடனே கிடைக்கவும் பகைவரை வென்று வாகைசூடவும் எத்தெய்வத்தை வழிபடவேண்டும் என்று வினவ, கண்ணபிரான், ஆவணி விநாயக சதுர்த்தி விரத மகிமையையும் அதனை அனுட்டிக்கும் முறைமையையும் எடுத்துரைக்க, அவர்களும் அவ்வாறே அனுட்டித்து எண்ணியவை எல்லாம் எய்தினார்கள்.

பொய்ச்சாட்சி சொன்ன காரணத்தால் உமாதேவியின் சாபத்துக்கு ஆளாகிப் பாம்பாக மாறிய திருமால் விநாயகசஷ்டி விரதம் அனுட்டித்து மீண்டும் தன் பழைய வடிவைப் பெற்றமை முதலான செய்திகளைக் கேள்வியுற்று அவ்விரதத்தை முறையாக அனுட்டித்த வச்சிரமாலி என்னும் அரசன் தனக்கு உற்ற நோய் நீங்கி நன்மைகள் பலவும் பெற்றான். விக்கிரமாதித்த மன்னனின் மனைவியான இலக்கண சுந்தரியும் அவ்விரதத்தை அனுட்டிக்கத் தொடங்கினாள். ஆனால் கவனக்குறைவால் விரதக்காப்பை அவிழ்த்து காய்ந்த கொவ்வைக்கொடி ஒன்றின் மீது போட்டு மறந்து விட்டாள், அதுமுதல் அவள் பெரும் துன்பங்களுக்கு ஆளானாள். ஆனால் விரதக் காப்புப் போடப்பட்ட கொவ்வைக் கொடியோ செழித்து வளர்ந்தது. கொவ்வைக் கொடியிற் கிடந்த காப்பைக் கண்டெடுத்து அதனைத் தரித்து விரதம்நோற்ற ஏழைப் பெண்ணொருத்தி அரண்மனை வாழ்வு பெற்றாள். இலக்கணசுந்தரி கணவனால் விரட்டப்பட்டு அரண்மனை வாழ்வை இழந்தாள். இலக்கணசுந்தரிக்குத் தஞ்சம் அளித்தவர்களும் துன்பங்களுக்கு ஆளாயினர். அதனால் அவர்களாலும் அவள் வெளியேற்றப்பட்டாள். அவள் தொட்டதெல்லாம் நாசமாகியது. இறுதியில் அவள் ஔவையிடம் அடைக்கலம் புகுந்தாள். ஔவை இலக்கணசுந்தரியின் அவல நிலைக்கான காரணத்தை உணர்ந்து, இலக்கணசுந்தரி விநாயகசஷ்டி விரதத்தை முறைப்படி அனுட்டிக்கச் செய்தார். ஈற்றில் விக்கிரமாதித்தனும் அவளை அடைந்து மனைவியாக ஏற்றான். அவளும் அவனோடு பட்டத்தரசியாக வாழ்ந்தாள்.

## நூற்பயன்

நூலின் இறுதியில் நூற்பயன் கூறுவனவாய் அமையும் நான்கு வெண்பாக்கள் இடம்பெறுகின்றன. அவற்றிற் கூறப்படும் விடயங்கள் வருமாறு:

பிள்ளையார் பெருங்கதையைக் கேட்பதால் பொன், பொருள், கல்வி, புத்திரபாக்கியம் முதலான எல்லாச் செல்வங்களும் கிட்டும். விநாயகசஷ்டி விரதத்தை அனுட்டிப்பவர்கள் சிறந்த வாழ்வு வாழ்வார்கள்; நோற்காது அருகிருந்து அக் கதையைக் கேட்டவர்களுக்கும் கேடு வராது. அவர்கள் எல்லாப் பிறப்புக்களிலும் சிறப்போடு வாழ்வார்கள்.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. 'பிள்ளையார் கதை' என்ற நூலை இயற்றியவர் யார்?

2. இந்நூல் எந்த விரதகாலத்தில் பாராயணம் செய்யப்படுகிறது?

3. இந்த நூலில் விநாயகசஷ்டி விரதத்தை அனுட்டித்து நன்மை அடைந்தவர்களாகக் குறிப்பிடப்படுவோர் யாவர்?

4. இலக்கணசுந்தரிக்கு துன்பம் ஏற்பட்டதற்கான காரணம் யாது?

5. பிள்ளையார் பெருங்கதையைக் கேட்போர் பெறும் பயன்களாகக் குறிப்பிடப் படுபவை யாவை?

## செயற்பாடு

பிள்ளையார் கதை (விநாயகசஷ்டி) விரத நியமங்களை எழுதுக.

# 24 சைவ வித்தியாவிருத்திச் சங்கம்




பத்தொன்பதாம் நூற்றாண்டில் அந்நியர் ஆட்சிக்குட்பட்டிருந்த இலங்கை வாழ் சைவத் தமிழ்ச் சமூகம் தமது சமய, சமூக, பண்பாட்டு அடையாளங்களை இழந்து நின்றது. சைவ சமய அடிப்படையில் சமய வாழ்வுக்கும் உலகியலுக்குமான கல்வியறிவை மேம்படுத்துவதனூடாகவே இவற்றை மீளுருவாக்கம் செய்யமுடியும் என உணர்ந்த நல்லைநகர் ஆறுமுகநாவலர், தாம் செய்த பல பணிகளூடாக சைவ சமயத்தில் மறுமலர்ச்சியை ஏற்படுத்தினார். அவருடைய மறைவுக்குப்பின் இலங்கை வாழ் சைவ மக்கள் தனித்தலைவர் யாரும் அற்றவராகிய சூழலில் நிறுவனங்களைத் தோற்றுவிக்க முற்பட்டனர். அவ்வாறு இருபதாம் நூற்றாண்டில் தோற்றம் பெற்ற நிறுவனங்களுள் ஒன்றே சைவ வித்தியாவிருத்திச் சங்கம் ஆகும்.

## தோற்றம்

நாவலரின் கல்வி தொடர்பான சிந்தனையைத் தேசிய அளவில் நடைமுறைப்படுத்திய நிறுவனம் இதுவே. 1923.12.09 அன்று கீரிமலையில் நடைபெற்ற கூட்டத்தின்வழி சைவ வித்தியாவிருத்திச் சங்கம் உருவானது. சங்கத்தின் முதல் நிர்வாக சபையின் தலைவராக சேர் பொன். இராமநாதனும் செயலாளராக டபிள்யூ. விஜயரத்தினமும் பொருளாளராக எஃப்.ஜி.பீரிஸும் தெரிவு செய்யப்பட்டனர்.

இவர்களைத் தவிர அச்சபையில் சேர் வைத்தியலிங்கம் துரைசாமி, எஸ். குமாரசூரியர், சு. இராசரத்தினம், எ.மகாதேவா, சு.நடேசன் முதலான பெரு மக்களும் இடம் பெற்றிருந்தனர்.

சங்கத்தின் சாதாரண உறுப்பினராக இருந்த சு.இராசரத்தினம் 1928 விஜயதசமி தினத்தில் உருவான சைவாசிரிய கலாசாலைக்கும் சங்கத்தினது பாடசாலைகளுக்கும் முகாமையாளராகத் தெரிவு செய்யப்பட்டார். அக்காலத்திலிருந்து தனது மரணம் வரை (1970) சங்கத்துக்காகத் தன்னை அர்ப்பணித்துப் பணிபுரிந்தார். அதன் விளைவாகவே அவர் **இந்து போர்ட் மனேஜர்** என்றும் **இந்து போர்ட் இராசரத்தினம்** என்றும் இன்று வரை நினைவு கூறப்படுகின்றார்.

## நோக்கம்

**அ.** இலங்கையில் தேவையான இடங்களில் சைவப் பாடசாலைகளை ஸ்தாபித்து அவற்றை நடத்துதல்.

**ஆ.** தனிப்பட்ட முகாமையாளர்களால் சங்கத்திடம் ஒப்படைக்கப்படும் பாடசாலை களைப் பொறுப்பேற்று நடத்துதல்.

**இ.** சைவப் பாடசாலைகள் எல்லாவற்றுக்கும் வேண்டிய உதவிகளை வழங்குதல்.

**ஈ.** சைவப் பிள்ளைகள் சைவப் பாடசாலைகளில் படிப்பதற்குரிய வசதிகளை வழங்கி இவ்வியக்கத்திற்கு மேலும் உற்சாகமூட்டல்.

**உ.** தமிழ் இலக்கியம், சங்கீதம், நாடகம் முதலியவற்றை வளரச் செய்தல்.

**ஊ.** ஆளுமைமிக்க ஆசிரியர்களை உருவாக்குதல்.

**எ.** ஆதரவற்ற சைவச் சிறுவருக்கான இல்லங்களை நடாத்துதல்.

## பணிகள்

**பாடசாலைகளை நடாத்தியமை**

வித்தியாவிருத்தியை நோக்காகக் கொண்ட இச்சங்கம், இலங்கையின் பல பாகங்களிலும் பாடசாலைகளை அமைப்பதிலும் அவற்றைப் பரிபாலிப்பதிலும் ஈடுபட்டது. சங்கம் நிறுவிய முதற் பாடசாலை யாழ்ப்பாணத்தில் உள்ள மாதகல் கிராமத்தில் அமைந்த விக்னேஸ்வரா வித்தியாலயமாகும். சங்கம் யாழ்ப்பாணத்தின்

சகல பிரதேசங்களிலும், வன்னிப் பிராந்தியத்திலும், பதுளை, புத்தளம், சிலாபம் உள்ளிட்ட மாவட்டங்களிலும் பாடசாலைகளை நடாத்தியது.

#### சைவாசிரிய கலாசாலை நிறுவியமை

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் நிலவிய ஆசிரியர் பற்றாக்குறையை நீக்கப் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டபோதும் அவை நிறைவேறவில்லை. அச்சூழ்நிலையில் இச்சங்கத்தால் 1928ஆம் ஆண்டு விஜயதசமி தினத்தன்று திருநெல்வேலியில் சைவாசிரிய கலாசாலை நிறுவப்பட்டது. இக்கலாசாலையின் முதலாவது அதிபராக மயிலிட்டி சுவாமிநாதனும் முதலாவது பிரதியதிபராக பொ. கைலாசபதியும் நியமிக்கப்பட்டனர். இக்கலாசாலையின் புகழ்பூத்த விரிவுரையாளராக பண்டிதமணி சி.கணபதிப்பிள்ளை விளங்கினார். இங்கு 1500க்கு மேற்பட்ட சைவாசிரியர்கள் பயிற்றுவிக்கப்பட்டனர். 1961இல் அரசாங்கத்தால் பொறுப் பேற்கப்பட்ட இக்கலாசாலை 1963இல் மூடப்பட்டது.

#### காவிய பாடசாலை நடாத்தியமை

ஆசிரியர்களின் இலக்கிய, இலக்கண அறிவை மேம்படுத்தும் நோக்கில் சைவாசிரிய கலாசாலையில் காவிய பாடசாலை ஒன்று நடாத்தப்பட்டது. இங்கு பாலபண்டித, பண்டித வகுப்புக்கள் நடைபெற்றன. அத்தோடு சிங்கள, சமஸ்கிருத வகுப்புக்களும் நடைபெற்றன.

#### தொழிற்பயிற்சிப் பாடசாலைகளை நடாத்தியமை

இலங்கை முழுவதுமாக 31 தொழிற்பயிற்சிப் பாடசாலைகளை இச் சங்கம் நடாத்தியது. இவற்றுள் கூடைஇழைக்கும் பாடசாலைகள் பதினாறும் நெசவுப் பாடசாலைகள் பதினைந்தும் உள்ளடங்குகின்றன. மாணவர்களுக்குப் பாடசாலைக் கல்வியோடு தொழிற்கல்வியும் வழங்கியமை குறிப்பிடத்தக்கது. பாடசாலையி லிருந்து இடைவிலகியவர்களுக்கும் வேலையற்று இருந்தவர்களுக்கும் இப்பயிற்சி நெறி வரப்பிரசாதமாக அமைந்தது; சுயதொழில் மேற்கொள்ள உதவியது.

#### ஆதரவற்ற சிறுவர்களுக்கான இல்லங்களை நடாத்தியமை

இலங்கையில் வாழ்கின்ற ஆதரவற்ற சைவச் சிறுவர்கள் மதம் மாறுவதையும் ஆதரவற்றுப் போவதையும் தடுக்கும் வகையில் இச்சிறுவர் இல்லங்கள் தோற்று விக்கப்பட்டன. ஆண்களுக்கான இல்லம் 1928இலும் பெண்களுக்கான இல்லம் 1938 இலும் உருவாக்கப்பட்டன. இவ்வில்லங்கள் இன்றுவரை இயங்கி சிறார்களுக்கு அடிப்படை வசதிகளை நல்கிவருவதோடு அவர்களை கல்வியாளர்களாகவும் உருவாக்கி வருகின்றன.

**சமகால நிலைமை**

1961இல் சங்கத்தின் சகல கல்வி நிலையங்களையும் இலங்கை அரசு பொறுப்பேற்றுக் கொண்டது. அதன்பின் சங்கம், சைவச் சிறுவர் இல்லங்கள் இரண்டை மட்டுமே நடாத்தி வந்தது. உரும்பிராயில் இயங்கி வந்த பெண்பிள்ளை களுக்கான கருணை இல்லத்தைப் பொறுப்பேற்று நடாத்தி வருகின்றது. அத்தோடு இராசரத்தினம் தொழிற்பயிற்சி மையத்தை ஆரம்பித்து சிறார்களுக்கு கணினி, மின்னிணைப்பு, தச்சுவேலை, தையல், விவசாயம் ஆகிய பயிற்சி நெறிகளை வழங்கி வருகிறது. இலங்கை அரசாங்கத்தின் அனுசரணையோடு அறிவகம் எனும் கணினி வளநிலையத்தையும் இயக்கி வருகிறது. இச்சங்கம் பழைய நூல்களை மீள்பதிப்புச் செய்தல், ஏழை மாணவர்க்கு உதவுதல் போன்ற பணிகளையும் முன்னெடுத்து வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சைவ வித்தியாவிருத்திச் சங்கம் எப்போது ஆரம்பிக்கப்பட்டது?
2. சைவ வித்தியாவிருத்திச் சங்க ஆரம்ப கால உறுப்பினர்கள் யாவர்?
3. திரு. சு.இராசரத்தினம் அவர்கள் 'இந்து போர்ட்' என்ற அடைமொழியோடு அழைக்கப்பட்டதன் காரணம் யாது?
4. சைவ வித்தியாவிருத்திச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டதன் நோக்கம் யாது?
5. இச்சங்கம் சைவ மக்களுக்கு ஆற்றிய பணிகள் யாவை?

## செயற்பாடு

சைவ வித்தியாவிருத்திச் சங்கத்தின் பணிகளைச் சுருக்கமாக அட்டவணைப்படுத்துக.

# 25 சைவ தருமம்

தருமம் என்ற சமஸ்கிருதச் சொல்லின் அடிப்படைப் பொருள் தாங்குதல் என்பதாகும். இந்த உலகை எது தாங்கிநிற்கிறதோ அதுவே தருமமாகும். ''உண்டாலம் இவ்வுலகம்... தமக்கு என முயலா நோன்தாட் பிறர்க்கென முயலுநர் உண்மையானே'' என்று புறநானூற்றுச் செய்யுளும் அதைத்தான் எடுத்துரைக்கிறது. அதாவது தமக்காக அன்றி மற்றவர்களுக்காகச் செயலாற்றுபவர்களாலேயே இந்த உலகம் அழியாது நிலை பெற்றுள்ளது என்பதே அச்செய்யுளின் சாராம்சம்.

இந்துசமயம் அநாதிகாலமாக அழிவின்றி நிலவிவருகின்ற ஒரு நெறிமுறையாகும். ஆதலால் அதனைச் **சனாதன தருமம்** என்பர் (சனாதனம் - நிலையானது, அழிவற்றது). சைவதருமம் என்றால் சைவம் வலியுறுத்துகின்ற நெறிமுறை - அறம் என்று பொருள்படும். தருமம் என்பதை புண்ணியம் என்ற சொல்லாலும் சுட்டலாம்.

சைவசமயம் புண்ணியம் செய்யுமாறு வலியுறுத்துகின்றது. கடவுளுக்கும் கடவுளின் அடியவர்க்கும் செய்யும் தொண்டுகள் பதிபுண்ணியம் எனப்படும். சக மனிதர்களுக்கும் பிற உயிர்களுக்கும் செய்யும் நற்கருமங்கள், தொண்டுகள் பசுபுண்ணியம் எனப்படும். பதிபுண்ணியம் கடவுள் வழிபாடாக அமைகிறது. பல்வேறு அறச்செயல்களைச் செய்வதே பசுபுண்ணியமாக அமைகின்றது.

அறச் செயல்கள் பொருள் வசதி உள்ளவர்களாலேயே செய்யத்தக்கது; ஏனையவர்களால் அவற்றைச் செய்யமுடியாது என்று நாம் கருதுகிறோம். அவ்வாறு அல்ல, மனதிலே எந்த அழுக்கும் இல்லாது நல்ல சிந்தனையோடு இருத்தலே சிறந்த அறமாக அமைந்துவிடுகிறது. அதாவது எல்லோரும் நன்றாக வாழவேண்டும் என்ற நினைப்பே பேரறமாகிவிடுகிறது. அந்த நினைப்பு இல்லாமல், வெறும் பகட்டுக்காகச் செய்யும் கொடைகள் வெற்று ஆரவாரமாகுமே அன்றி, அறமாக அமையமாட்டா.

**'மனத்துக் கண் மாசு இலனாதல் அனைத்து அறன்;**
**ஆகுல நீர பிற'** (திருக்குறள்)

கொடுப்பதற்கு முடிகிறதோ இல்லையோ கொடுப்பதற்கு விரும்பவேண்டும். அதனாலேதான்,

**‘அறம் செய விரும்பு’**

என்றார் ஔவைப் பாட்டி.

பதிபுண்ணியம் செய்வதற்கோ பசுபுண்ணியம் செய்வதற்கோ பெரும் செல்வம் வேண்டியதில்லை. இதனை, திருமூலர் அழகாக எடுத்தியம்பியுள்ளார்.

**‘‘புண்ணியம் செய்வார்க்கு பூவுண்டு நீர் உண்டு’’**

**‘‘யாவர்க்கும் ஆம் இறைவற்கு ஒரு பச்சிலை**
**யாவர்க்கும் ஆம் பசுவுக்கு ஒரு வாயுறை**
**யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி**
**யாவர்க்கும் ஆம் பிறர்க்கு இன்னுரைதானே’’**

பொருள் வசதி அற்றவர்களும் புண்ணியம் செய்யலாமாயின் பொருள் வசதி நிறைந்தவர்கள் புண்ணியம் செய்யாதிருக்கலாமா? அவர்கள் புண்ணியம் செய்யவில்லையாயின் அது பாவமாகவே கருதப்படும். வசதியுள்ளவர்கள் புண்ணிய கருமங்கள் செய்யாதிருத்தலே பாவமாகக் கருதப்படும் போது தீவினை செய்வ தென்பது எவ்வளவு பாவமாக அமையும்! அவர்கள் இம்மையிலும் மறுமையிலும் துன்பமே அனுபவிக்க நேரிடும். ஆதலால் தருமம் செய்வோம்.

அறங்கள் யாவற்றுக்கும் அடிப்படையானது அன்பே. நமது குடும்பத்தவரிடம் அன்பு இருப்பதனால் நாம் அவர்களுக்கு நன்மையே செய்கிறோம். அதுபோல் எல்லா உயிர்களிடமும் அன்பு வைப்போமாயின் எல்லா உயிர்களுக்கும் நன்மையே செய்வோம். எம்மோடு தொடர்பற்றவர்களிடமும் நாம் காட்டும் அத்தகைய அன்பையே அருள் - கருணை என்று சிறப்பிக்கிறார்கள் பெரியவர்கள். எம்மிடம் அருள் இருக்குமாயின் கொலை, புலாலுண்ணுதல், களவு, பொய்பேசுதல், புறம்பேசுதல், பொறாமை கொள்ளுதல் முதலான எந்தத் தீய பண்புகளும் தீய செயல்களும் நம்மை அணுகமாட்டா. மாறாக எல்லா நற்பண்புகளும் நற்செயல்களும் நம்மிடத்தில் உண்டாகும்.

நாம், நற்பண்புகளை வளர்த்துக் கொள்வதோடு நற்செயல்களைச் செய்வதிலும் ஈடுபடவேண்டும். சக மனிதருக்கும் பிற உயிர்களுக்கும் உதவுதல் நமது கடமையாகும்.

மனிதனது அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறையுள் என்னும் மூன்றினுள் மிகவும் அடிப்படையானது உணவே. அது விலங்குகளுக்கும் இன்றியமையாதது. உலகில் ஒரு மனிதனோ ஒரு விலங்கோ பசித்திருப்பதை நாம் பார்த்திருப்பதும் பாவமே. உணவினாலேயே உயிர்கள் வாழ்கின்றன. தாகத்துக்குத் தண்ணீரும் பசிக்கு உணவும் கொடுத்தவன் உயிர் கொடுத்தவனாகிறான்.

**''உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே''** (மணிமேகலை)

இரந்தவர்க்கு 'இல்லை' என்னாது உணவு கொடுக்கவேண்டும். நம்மை நம்பிவாழும் வாயில்லாப் பிராணிகளுக்கு வேளாவேளைக்கு உணவும் நீரும் வழங்கிப் பராமரிக்க வேண்டும். விரத வேளைகளில் காகத்துக்குச் சோறு வைக்கவேண்டும் என்ற நியதி அப்பண்பை வளர்ப்பதற்காக ஏற்படுத்தப்பட்டதே. கோயில்களில் அன்னதானம் செய்தல் நாம் காலம்காலமாகச் செய்துவரும் தருமமாகும். சைவக் கோயில்களில் விசேட நாட்களில் அன்னதானம் வழங்கப்படுகிறது. செல்வச்சந்நிதி, நயினாதீவு ஆகிய ஆலயங்களைச் சார்ந்த மடங்களில் நித்திய அன்னதானம் இடம்பெறுகிறது. அனாதை இல்லங்களுக்குப் பொருளுதவி செய்தல், இயற்கையாலும் செயற்கையாலும் உண்டா கும் அனர்த்தங்களால் நிர்க்கதிக்கு ஆளானவர்க்கு உதவி செய்தல் முதலானவையும் உயர்ந்த புண்ணியச் செயல்களே.

உணவளித்தல் மாத்திரம் அன்றி, வேறு பல அறச் செயல்களையும் நமது முன்னோர்கள் காலங்காலமாக ஆற்றிவந்தார்கள். வழிப்போக்கர்கள் இளைப்பாறிச் செல்வதற்காக, தமது வீடுகளின் முன்பாக திண்ணைகளோ வீட்டு வளாக வாயிலில் நிழற்பந்தல்களோ அமைத்தார்கள். அவர்களது தாக சாந்திக்காக வீதியோரங்களில் ஆங்காங்கே தண்ணீர்ப் பந்தல்கள் அமைத்தார்கள். அதுபோல் மேய்ச்சலுக்குச் சென்று வரும் கால்நடைகள் நீர் அருந்துவதற்காக நீர்த்தொட்டிகள் அமைத்தார்கள். உண்ணி முதலானவை கடிப்பதனால் துன்புறும் கால்நடைகள் தமது உடலை உரசி உண்ணி முதலானவற்றை அகற்றுவதற்காக கல்லாலான சிறு தூண்களை நட்டுவைத்தார்கள். அவை ஆவுரோஞ்சுகல் எனப்பட்டன (ஆ - பசு). வெயிற் கொடுமையிலிருந்து காப்பதற்காக வீதியோரங்களில் நிழல்தரு மரங்களை நட்டு வளர்த்தார்கள். வழிப்போக்கர்கள் இளைப்பாறுவதற்காக பொது மடங்களையும் அமைத்தார்கள். அத்தகையதொரு மடம், இன்றும் யாழ்ப்பாணம் - மானிப்பாய் வீதியில் ஆறுகால் மடம் என்ற பெயரில் நிழல்தரு மரங்கள் சூழக் காணப்படுகிறது. அதன் அருகே கிணறு

ஒன்றும் நீர்த்தொட்டியும் ஆவுரோஞ்சுகல்லும் அமையப்பெற்றுள்ளன. அதேபோல் இன்றும் காலத்துக்கு ஏற்றவாறு பேருந்து தரிப்பிடங்களில் நிழற்குடைகளை நாம் அமைக்கிறோம். தேவைப்படுகிறவர்களுக்கு எம்மாலான உதவிகளை எப்போதும் செய்யவேண்டும். அதுவும் தெய்வ வழிபாட்டுக்குச் சமமானதே,

**'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு'.**

## பயிற்சி

**பின்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. இந்து சமயத்திற்கு 'சனாதன தர்மம்' என்ற பெயர் வழங்குவதன் காரணம் யாது?
2. பதிபுண்ணியம் என்றால் என்ன?
3. பசுபுண்ணியம் என்றால் என்ன?
4. உண்மை அறம் எவ்வாறானது?
5. அறங்களின் அடிப்படை யாது?
6. தானங்களில் சிறந்த தானமாகக் கருதப்படுவது யாது?
7. எமது முன்னோர் ஆற்றிவந்த அறச்செயல்கள் ஐந்தினைக் குறிப்பிடுக?
8. சைவ சமயம், அறத்திற்கு முக்கியத்துவம் கொடுப்பதன் காரணம் யாது?

## செயற்பாடு

உமது பாடசாலையின் அயலிலுள்ள ஆலய மகோற்சவத்தில் குழுவாகக் கலந்து கொண்டு தண்ணீர்ப்பந்தல் அமைக்குக.